உ

கடவுள் துணை.

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவர்

திருவாய்மலர்ந்தருளிய

# புளந்திரன் தூது.

இஃது

குயப்பேட்டை

வீ. இராஜுமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்

பி. நா. சி. கடைகாரியம்

மு. கிருஷ்ணபிள்ளை அவர்களால்

பிடாரித்தாங்கல்

நாராயணசாமிமுதலியார் குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

சென்னை.

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] 1922. [அணா—10.

ஆளப்பிறந்த அபிமனும்பட்டானே
அந்தாளர்தீர்த்த அரவானும்பட்டானே
தாமமுடியான கடோற்கஜனும்பட்டானே
ஆரையனுப்புவோம் ஆளடிமைதூதுக்கு
எவரையனுப்புவோம் எழில்பெரியதூதுக்கு
எவரையனுப்புவோம் எழில்பெரியதூதுக்கு
என்றுமவனுரைத்து ஏங்கிமனந்தளர்ந்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
மன்னர்மனஞ்சலித்து மறுமமாய்வீற்றிருந்தார்
ஏழுலகமாளுகிற எம்பெருமாளேதுசொல்வார்
போட்டசிறைமீட்க நாளாச்சுமன்னவரே
தூதுக்குபோவார் சொல்லுந்தருமரேநீர்

துரோபதைபிள்ளையை பெருமாள்வேண்டாமென்று தடுக்கிறது.

ஆரையனுப்புவோம் அடல்பெரியதூதுக்கு
என்றுமவருரைக்க ஏதுசொல்வார்தருமலிங்கம்
பச்சைமடல்விரியும் பாளைவிரிபூமணக்கும்
பாஞ்சாலமகாராசன் சுயமணப்பூம்பந்தலிலே
வில்லோசைக்கொண்டு இளங்கொடியைமாலையிட்டோம்
வில்வளைத்துமாலையிட்ட மெல்லிதுரோபதையாள்
மாலைக்குழலாள்தன் மைந்தரைப்போகவிடுவோம்
அந்தவுரைகேட்டு ஆதிமூலமேதுசொல்வார்
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
இளம்பஞ்சபாண்டவர்கள் இணைபிரியாமன்னவர்கள்
ஐவரையும்போகவிட்டால் அனர்த்தம்வந்துநேர்ந்துவிடும்
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
தககபுகழுடைய தருமாதுகேட்டு

பெருமாள் நல்லரவானையும் வேண்டாமென்று தடுக்கிறது.

வீடெல்லாமாணிக்கம் வாசலெல்லாமாணிக்கம்
கட்டியுடைத்தால் கலந்தேறுமாணிக்கம்
மாணிக்ககூண்டுகட்டி வாசலிலேதானம்பண்ண
மாலைக்குழலாள்தன் மைந்தரைப்போகவிடுவோம்
ஏழுலகமாளுகிற எம்பெருமாள்தான்கேட்டு
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
பாசத்திளவறையன் பள்ளிபழகையிலே
பாரதமோசிரதமோ என்றுன்படைத்தலைவன்
பெருமாளோபொரிமாவோ என்றுசொன்னான்புண்ணியனும்
சொல்லிபெருமாளும் தூதுரைக்கமாட்டான்காண்
எரிநாகங்கொண்டவனோடெதிராளமாட்டானே
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
தக்கபுகழுடைய தருமாதுகேட்டு
இனியாரைப்போகவிடுவேன் எழில்பெரியதூதுக்கே

## புனக்திரன் தூது.

### பெருமாள்மின்னொளியாள் பிள்ளையைவேண்டாமென்றுதடுக்கிறது.

தேசத்தில்மடையடைத்தால் செல்லேறப்போகுதென்று
பணத்தால்மடையடைத்தால் பாசிபிடிக்குமென்று
துட்டால்மடையடித்தால் தூதேறப்போகுதென்று
காசால்மடையடித்தால் களும்புபிடிக்குமென்று
சோத்தால்மடையடக்கும் சோழன்றிருமடந்தை
மேகம்பயின்றெடுத்த மின்னொளியாள்நாயகியாள்
மாலைக்குழலாளதன் மைந்தரைப்போகவித்து
ஏழுலகமாளுகிற எம்பெருமாள்தான்கேட்டு
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
சொற்றப்பூர்மன்னன் குறக்கோலங்கொண்டலவோ
சொற்றம்போரம்பலத்தே கூசாமல்போயிருந்து
கொச்சியங்கள்சொல்லி யுரைப்பார்களைவரையும்
ஏளிதங்கள்சொல்லி யுரைப்பார்களைவரையும்
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
தக்கப்புகழுடைய தருமாதுகேட்டு
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
இனியாரையனுப்புவோம் ஆளடிமைதூதுக்கு
எவரையனுப்புவோம் எழில்பெரியதூதுக்கு
ஏழுகோடிசேனைக ளெல்லாமடிந்தார்கள்
ஒருகோடிபாலகர்கள் ஒக்கமடிந்தார்கள்
யாரையனுப்புவோம் ஆளடிமைதூதுக்கு
எவரையனுப்புவோம் எழில்பெரியதூதுக்கு
என்றுமவருரைத்து ஏங்கிமுகந்தளர்ந்து
ஏழுலகமாளுகிற எம்பெருமாளேதுசொல்வார்

### கிருஷ்ணமூர்த்தி புனக்திரனைத்தூதுக்கனுப்ப சம்மதித்தது.

மதுரையறுகாதம் வாழ்மதுரைமுக்காதம்
பொய்கையறுகாதம் பூமதுரைமுக்காதம்
மதுரை-பன்பத்தறுகாதம் ஆளுகிறபாண்டியர்கள்
ஆறுயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
மைந்தருமில்லையென்று மன்னர்மனஞ்சலித்து
மாளுகிறோமென்று மலைமேற்றவமிருந்தார்
மனோதேயென்று மலரிலவதரித்தாள்
மன்னன்விஜையன் மடலூர்ந்தமாதேவி
காளைவிஜையன் கடலூர்ந்தமாதேவி
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீன்முகனை
வெட்டிதலைதுணித்து வீரபட்டங்கட்டினவள்
பாவையிளங்கொடியாள் பயின்றெடுத்தாத்தினங்கள்
மாலைக்குழலாள்தன் மைந்தரைப்போகவிடுவோம்
உத்தமியாள்பெற்றெடுத்த புத்திரனைப்போகவிடுவோம்

ஏழுலகமாளுகிற எம்பெருமாள் தானுரைக்க
தக்கப்புகழுடைய தருமரவர்கேட்டு

தருமர்வேண்டாமென்று தடுக்கிறது.

ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
ஏழுவேலிமஞ்சள் எடுத்தந்தப்பாண்டியர்கள்
ஏழேரிதண்ணீரிலே எல்லாமுரைத்தவர்கள்
ஸ்ரீகாரங்கொண்டார்கள் சீருடையபுத்திரனை
மஞ்சனீர்கொண்டார்கள் மைந்தர்புனந்திரரை
மைந்தனுக்குமெந்தனுக்கும் பேசவழக்கில்லை
என்றுமவருரைத்து யிருக்கின்றவேளையிலே

புனந்திரன்வரலாறு அருச்சுனன் தருமருக்குக் கூறுதல்.

காண்டாபுரமெரித்த காளையதுகேட்டு
வில்லாளிபார்த்தன் விசையனெழுந்திருந்து
அண்ணனெதிரிலே அடிவணங்கிதெண்டனிட்டு
கூத்தனெனுஞ்சோலையிலே போயிருந்தேநானொருநாள்
வாழ்மதுரைப்பட்டணத்தில் போயிருந்தேன்நான்சிலநாள்
தொட்டுக்கொடுத்ததில்லை சுந்தரப்பெண்பாண்டியற்கு
எடுத்துக்கொடுத்ததில்லை எந்தனிடபுத்திரனை
மைந்தருக்குமெந்தனுக்கும் வழக்குண்டுஎம்பெருமாள்
வில்லாளிபார்த்தன் விசையனுரைக்கலுமே

தருமர் சம்மதித்தது.

தக்கப்புகழுடைய தருமரவர்சேட்டு
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
தேகம்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உண்ணுதேபூரித்து உடம்பெல்லாம்பூட்டிவிட்டு
சந்தோஷங்கொண்டாரே தருமர்பெருமாளும்
ஈரல்குளிர்ந்தார் இருவருமோடிவந்து
ஏழுலகமாளுகிற எம்பெருமாளைப்பணிந்து
தக்கப்புகழுடைய தருமரடிபணிந்து
கைகட்டிவாய்புதைத்து வந்துமுன்னேநின்றார்கள்
எங்களையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றார்

தருமர்அல்லி அரசாணிக்கும் புலந்திரனுக்கும் ஓலையெழுதுகிறது.

தக்கப்புகழுடைய தர்மரதுகேட்டு
பங்கயஞ்சீர்கண்ணனுக்கு ஓலையெழுதுமென்றார்
தம்பிபுலந்திரற்கு சுருளோலையெழுதுமென்றார்
ஈரல்ப்பூந்தாரார் இருவருந்தான்கேட்டு
அருளருளுமென்னண்ணா அப்படிக்கேயாகுதென்று
தாளிபனையோலை வாரிதலைசேர்த்து
வெள்ளைப்பனையோலை விளிப்பிரண்டுந்தான்சீவி
பக்கமுஞ்சீர்வாரி பவளஞ்சிழப்பமிட்டு

செம்பொல்னெழுத்தாணி தேர்விசையர்கைப்பிடித்து
என்னவென்றுசொல்லி எழுதவென்றாரோலையிலே
தக்கப்புகழுடைய தருமரெடுத்துரைப்பார்
இன்னமின்னங்காடுறைய மாட்டாளிளங்கொடியும்
எங்குந்திரிந்தார்கள் எளப்பானகல்லிறடி
பருக்கல்லுறுத்த பனிவந்தலைமோத
ஓடும்பருக்கேனும் உள்ளங்கால்தானுறுத்த
கனிந்தமரத்தடியில் கண்பள்ளிகொண்டிருந்தோம்
இன்னமின்னங்காடுறைய மாட்டாளிளங்கொடியாள்
தொங்கலெனும்பூமுடியாள் தூதுரைக்கவேணுமிப்போ
சுந்திரப்பூமுடியாள் இங்கேவரவேணுமென்று
ஓலையெழுதி சதுராய்க்குறியுமிட்டு
இராசாக்களோலைக்கு இரத்தினக்குறியுமிட்டு
மந்திரிமாரோலைக்கு மஞ்சட்குறியுமிட்டு
ஓலைச்சுருளெடுத்து செந்திரிக்கந்தான்போட்டு
காற்றிலேயும்வேகமுள்ள தூதுவரைத்தானழைத்து
ஓலைச்சுருளெடுத்து உததமர்கள்கைகொடுத்து
மதுரைவளநாட்டுக்கு மன்னவர்களேநீர்போய்
மடக்கோலைகட்டுவச்சி மன்னுதிரும்புமென்று
சுருளோலைகட்டுவெச்சி தூதர்திரும்புமென்றார்
தூதுவருந்தான்கேட்டு தொழுதிரங்கிதெண்டனிட்டு
அருணருளுமெனையா அப்படிக்கேயாகுதென்று
சொல்லப்பெற்றோமென்று சுறுக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றோமென்றுசொல்லி கும்பிட்டெழுந்திருந்து

தூதன்மதுரைக்கு ஓலைகொண்டு போகுதல்.

மடக்கோலைகட்டெடுத்து மன்னர்மடியில்வைத்து
சுருளோலைக்கட்டெடுத்து தூதர்மடியில்வைத்து
அத்திபுரமும் நடந்தார்அழகாக
குருக்ஷேத்திரபூமி குருபூமிதேசம்விட்டார்
எல்லையதுதாண்டி இளந்தோப்புந்தான்தாண்டி
வைவையக்கரைதாண்டி வனமாய்வனந்தாண்டி
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம வெண்களாப்பூத்தவனம்
மதுரைதிசைநோக்கி வாறார்கள்தூதுவர்கள்
வாரவழிதனிலே என்னென்னவதிசயங்கள்
கொன்றைகள்பொன்காய்க்க வேங்கைகள்குட்டியீன
முத்துக்காய்காய்க்க பவளக்கொடிகனக்க
நீர்முத்துஞ்சால்களும் நின்றுநிழல்காக்க
நீரோடும்நீர்முதலை நின்றுவிளையாட
சேறுங்கழலுமங்கே சென்றுவிளையாட

வாழைபழுக்க கரும்புகொலைசாய
ஆலைப்பழுக்க அணிகள்விளையாட
கிள்ளைப்பழுக்க கிளிகள்விளையாட
மாலைவுதிர மலர்கள்சொரிந்துவிழ
சந்தனஆறு தளும்பிபெருகிவர
குங்குமஆறு குளம்பிபெறுகிவர
ஸ்ரீதேவியம்மன் உரைவாள்பலதுறையும்
திருவிளையாள் அம்மன் திருவாள்பலதுரையும்
சோலைமலர்கண்டார் சொக்கரிடபாதங்கண்டார்
சொக்கரிடபாதம் தொழுதிறங்கிதெண்டனிட்டான்
ஆனைமலைகண்டான் அம்மனிடபாதங்கண்டான்
அம்மனிடபாத மடிவணங்கிதெண்டனிட்டான்
அடிவணங்கிதெண்டனிட்டு அப்பால்நடக்கலுற்றான்

பொற்றாமரைச்சிறப்பு.

அல்லிப்பிறந்தாள் அவள்பிறந்தபொய்கைகண்டாள்
பூவில்பிறந்தாள் பிறந்ததொருபொய்கைகண்டான்
மலரிற்பிறந்தகாளும் அவளுதித்தபொய்கைகண்டான்
பொய்கைப்பதுமைகளை போனவனும்பார்த்திருந்தான்
படிக்குப்படிகளொரு பன்னிருகாதவழி
படியகலங்கொண்டதொரு பன்னூற்றைங்காதவழி
ஏறும்படிகளொரு எண்ணூறுகாதவழி
இறங்கும்படிகளொரு எண்ணூற்றைங்காதவழி
நாலுபடிகளின்மேல்.ஞானவிளக்கெரியும்
அஞ்சுபடிகளின்மேல் பஞ்சவர்ணம்போட்டிருக்கும்
எட்டுபடிகளின்மேல் இலிங்கம்புதைத்திருக்கும்
பத்துபடிகளின்மேல் பத்தினிமார்வோதிரிற்பார்
நட்டோடேதன்னகையுந் தாமரைப்பூங்காவுகளும்
கட்டுகழுத்திக் கடலாடும்பொய்கையது
புத்திரசந்தானங் கொடுக்குமந்தபொய்கையது
கைப்பெண்டுஸ்நானஞ்செய்தால் கைலாசஞ்சேர்க்கும்பொய்கை
அறிவில்லாஸ்நானம்பண்ணால் அரிவளக்கும்பொய்கையது
மலடிகள்ஸ்நானம்பண்ணால் மைந்தனளிக்கும்பொய்கை
கன்னிகழியாப்பெண்கள் கடுகெனவேஸ்நானம்பண்ணால்
கன்னிகழிந்திடுவார் காளைகளையீன்றிடுவார்
மைந்தர்களையீன்றிடுவார் மகிழ்ச்சியாய்வாழ்ந்திடுவார்
பிள்ளைகளையீன்றிடுவார் போதவளர்ந்திடுவார்
இப்படியாய்பதவிதரும் இயலானபொய்கைதனை
கண்டானேதூதுவனுங் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்
பார்த்தானேதூதுவனும் பார்வைரெண்டுங்கொள்ளாமல்
அப்பொய்கைதான்தாண்டி அப்பாலேபோகலுற்றார்
அரிதேசிபரிதேசி யாவர்வந்தாகின்றாலும்

இல்லையென்றுசொல்வார்கள் மெல்லியிடைபுண்ணியத்தால்
முத்துபவளம் மொண்டுவர்க்களிப்பார்
வச்சிரமாணிக்கம் வாரியவர்க்களிப்பார்
பிழைத்தேனென்றுபோவார்கள் பொற்கொடியாள்புண்ணியத்தால்
அப்போதுதூதுவனும் அந்தத்தெருதாண்டி
மற்றுமொருவீதியிலே வாரார்கள் தூதுவர்கள்
ஆனைகட்டிப்போர்படிப்பார் அல்லியிடராச்சியத்தில்
குதிரைகட்டிப்போர்படிப்பார் உத்தமியாள்சீமையிலே
கட்டுக்கலங்காணும் கதிருழக்குநெற்காணும்
அரிதாளறுத்துவர மறுதாள்பயிராகும்
அரிதாளின்கீழிருந்து ஐங்கலத்தேன்கூடுகட்டும்
கரும்புமினாரோங் கண்திறந்துமடைபாயும்
வாழைவடக்கினும் வாங்கருகுதெற்கினும்
தென்னைகிழக்கினும் தய்யபலாமேற்கினும்
இப்பெரியராச்சியத்தைக் கண்டானே தூதுவனும்
கண்டானே தூதுவனும் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்
பார்த்தானே தூதுவனும் பார்வைரெண்டுங்கொள்ளாமல்
அந்தத்தெருதாண்டி மற்றுமொருவீதியிலே
மற்றுமொருவீதியிலே வாரானே தூதுவனும்
வேலைப்பழிக்கின்ற விலைமாதர்வீதிகளும்
சேலைவிலைமதிக்கும் சேணியர்கள்வீதிகளும்
யானைவிலைமதிக்கும் அரசர்கள்வீதிகளும்
சேனைத்தலைவர்கள் சூழ்ந்திருக்கும்வீதிகளும்
குதிரைவிலைமதிக்கும் குச்சிலியர்வீதிகளும்
ஆட்டைவிலைமதிக்கும் உத்தமர்கள்வீதிகளும்
கொட்டியேபொன்னளக்கும் கோமுட்டிவீதிகளும்
தட்டிகொட்டிப்பணிசெய்யும் தட்டார்கள்வீதிகளும்
செட்டாய்ச்சரக்குவிற்கும் செட்டியார்கள்வீதிகளும்
வில்பிடித்துலாவுகிற வேந்தர்கள்வீதிகளும்
மல்போருதான்செய்யும் மன்னர்கள்வீதிகளும்
வேதமுறைதவறா வேதியர்கள்வீதிகளும்
நீதிமுறைதவறா நெறிமன்னர்வீதிகளும்
அந்தத்தெருதாண்டி மற்றொருவீதியிலே
மற்றொருவீதியிலே வாரானே தூதுவனும்
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
அல்லியுடவாசலுக்கு வாரானே தூதுவனும்
அரசிலையுந்தோரணமும் காக்குந்தலைவாசலிலே
அல்லிகொடிகட்டி யார்க்குந்தலைவாசல்
நந்தமபணிகள்செய்யும் பொற்கொடியாள்வாசலிலே
மங்கபபணிகள்செய்யும் மின்னனையாள்வாசலிலே
கண்டானே தூதுவனுங் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்

பார்த்தானே தூதுவனும் பார்வைரெண்டுங்கொள்ளாமல்
தூதுவனுமப்போது துருசாகத்தானடந்து
ஓடமலர்க்கண்ணுளும் உட்கட்டிற்போய்புகுந்து
கோசவளநாடான் கொலுவுக்குமுன்னே வந்தான்

புனந்திரன் கொலுச்சபை தூதன்காண்கிறது.

ஐயன் றிருக்கொலுவி லமரர்கொலுவிருந்தார்
செம்பொன்முடி தரித்த ஸ்ரீகிருஷ்ணரங்கிருந்தார்
இரத்தினமுடி தரித்த ராசாக்களங்கிருந்தார்
முத்துமுடி தரித்த முடிமன்னரங்கிருந்தார்
வயிரமுடி தரித்த மந்திரிகளங்கிருந்தார்
கட்டிபிடிமன்னர் இளவரையரங்கிருந்தார்
போட்டசட்டை வாங்காத போர்மன்னரங்கிருந்தார்
இட்டசட்டைவாங்காத பிடிமன்னரங்கிருந்தார்
ஆறுயிரவரும் அணிதிரளாரங்கிருந்தார்
பொன்னுமலைநாடாளும் போரெழுதியங்கிருந்தார்
போரஞ்சாமன்னர் புனந்திரனார்வீரியரும்
நடுவேகொலுவிருந்தான் ஞாயிருதித்தாற்போல்
அப்போது தூதுவரும் ஆறுலழகுமனனர்
போசவளநான் கொலுவுக்குமுன்னேவந்து
மடக்கோலைகட்டுவச்சி மன்னர்வணங்கிநின்றார்
சுருளோலைகட்டுவச்சி தூதர்வணங்கிநின்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்பார்த்து
அண்ணாந்துபார்த்து அறையர்திருமுகத்தை
ஆராடா தூதுவரே யெங்கிருந்துவந்தீர்கள்
எந்தவூரெந்தநாடு யெனக்கரியச்சொல்லுமென்றார்
அப்போது தூதுவர்கள் அடிவணங்கியே துசொல்வார்
இந்நாட்டானல்லகாண் இத்திசையானல்லகாண்
தென்னாடுஞ்சூழ திறைவணங்கவந்தவன்காண்
அத்திபுரமாளும் ஐயமார்தூதுவன்நான்
உங்கள்-ஐயமார்தானனுப்ப அடிவணங்கவந்தேன்காண்
ஐயமார்தூதென்று அடிவணங்கிதெண்டனிட்டான்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
ஐயமார்தூதனென்ன அஞ்சிப்பயந்தவனும்
ஐவருடன்பாதம் அடிநோக்கிதெண்டனிட்டு
அடுத்துமவன்தெண்டனிட்டு யெடுத்தான்சுருளோலை

புனந்திரன் ஓலைவாசிக்கிறது.

மடக்கோலைதானெடுத்து மன்னவனுந்தான்விரித்து
சுருளோலைதானவிழ்த்து துரிதமுடன்வாசிக்க
ஓலைச்சுருள்விரித்து வாசித்தானுத்தமனும்
ஓலையின்வாசகத்தை யுத்தமனும்பார்க்கவுமே

சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
அடித்தான்தலைமேலே கடகங்கழன்றுவிழ
மோதிரக்கையாலே முகத்திலறைந்துகொண்டான்
மணிக்கடகக்கையாலே மார்மேலறைந்துகொண்டான்
வேல்பொருதுங்கண்ணாள் விழுந்துபுரண்டழுதாள்
தாமமுடியான் தரைமேல்புரண்டழுதான்
மாலைமுடியானும் மண்மேல்புரண்டழுதான்
இப்படியாக யிருக்கின்றவேளையிலே
அங்கிருக்குந் தூதுவர்கள் அவசரமாயோடி
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள் தானிருக்கும்
மண்டபமேதேடியல்லோ மன்னவர்கள்வாரார்கள்
ஆரண்மனை யேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி

அல்லியைக்காண்கிறது.

தொடைமலர்க்கண்ணாள் உட்கட்டில்போய்ப்புகுந்து
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்முன்னேவந்து
அல்லியெதிரேவந்து அடிவணங்கிதெண்டனிட்டு
தெண்டனிட்டுதூதுவர்கள் திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்பார்த்து
நீ யாருடையதூதர் அறியவுரையுமென்றாள்
யார்பணியுமல்ல அடியேன் திருப்பணிதான்
ஒருவர்பணியுமல்ல வும்முடையநற்பணிதான்
பேர்பெற்றுடைய பெருமாளேவுன்பணிதான்
நீயிங்கேவந்த தெனக்கரியகூறுமென்றாள்
உத்தமர்களைவர் உத்தாரந்தானனுப்ப
அனுப்பியவோலைதன்னை அலைதாரன்தான்பார்த்து
ஓலைச்சுருள்விரித்து வாசித்தானுத்தமனும்
தம்பியிறந்தானென்று தனித்துப்புலம்புகிறார்
வேல்பொருதுங்கண்ணான் விழித்துபுலம்புகிறான்
அந்தவிசேஷ மதுசொல்லவந்தோமென்றார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு

அல்லிபுனந்திரனைக்காண கொலுவுக்குவருகிறது.

சமட்டாமுடிகழட்டி காரிழைமார்கைகொடுத்து
வீரமுடிகழட்டி மெல்லியர்கள்கைகொடுத்து
மகுடமுடிகழட்டி மங்கையர்கள்கைகொடுத்து
அங்கிஇஜாரு அழகாகத்தான்களைந்து
பாவாடையுள்ளுடுத்தி பட்டாடைமேல்சாத்தி
ஆனந்தவாழ்மாரி அலரத்தலைசொருகி
பல்லக்கிலேறாமல் பாண்டிப்பெருமாளுந்
தண்டிகையிலேறாமல் தாரார்குழலாளும்
கால்நடையாய்த்தானே கடுகவழிநடந்து

காத்தாடிபோலே கடுகவழிநடந்து
எட்டடியும்ஓரடியாம் இட்டுமிகநடந்து
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
பேடைமயில்கண்ணாள் உட்கட்டில்போய்புகுந்து
கோசலநாடாள் கொலுவுக்குமுன்னே வந்தாள்
பிள்ளைபுலந்திரற்கு பெண்பெருமாளேதுசொல்வாள்

அல்லி புலந்திரற்கு சொல்லுகிறது.

தருமர்வலுவிழந்தீர் தம்பிமார்தோளிழந்தீர்
வீமர்வலுவெழுந்தீர் விசயனார்தோளிழந்தீர்
உட்பிட்டவாளை உறையுருவிவிட்டாற்போல்
தப்பிவிட்டீர்நீயுமிப்போ தம்பிபுலந்திரரே
ஆறிவிடும்ஆறிவிடும் ஐயாவேஆறிவிடும்
தேறிவிடும்தேறிவிடும் தேவனேதேறிவிடும்
ஆனந்தமார்பனை அணைத்துமடியில்வைத்து
மாலைமுடியானை மடிமேலேகொண்டுசென்று
கொற்றவனார்கோபந் தணிப்படுத்திகொண்டவளும்
மன்னவனார்கோபம் வசப்படுத்திக்கொண்டிருந்து.
இப்படியாக இருக்கின்றவேளையிலே
ஆறுபிரவர் அணிதிரளாம்பாண்டியரும்
பொன்னுமலைநாடாளும் அன்னவர்வோடிவந்து
போரஞ்சாமன்னர் புலந்திரனைத்தான்பார்த்து
காடாண்டபஞ்சவர்கள் நாடாளவந்தார்கள்
சுந்தரப்பஞ்சவர்கள் சுகமாயிருக்கிறார்கள்
ஆறிவிடும்ஆறிவிடும் ஐயாவேஆறிவிடும்
தேறிவிடும்தேறிவிடும் தேவனேதேறிவிடும்
இப்படிக்கேசொல்லி யிருந்தார்களபாண்டியர்கள்
பிரவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகமும்
ஓலைச்சுருளெடுத்து உத்தமியாள்கைபிடித்து
பவளசேனைமந்திரியை பட்டோலைவாசியென்றாள்
பவளசேனைதானவாங்கி பட்டோலைதானவிரித்து
ஓலைச்சுருள்விரித்து வாசித்தாளுத்தமியும்
வாசித்தவாசகத்தை கேட்டந்தமெல்லியரும்

அல்லியரசாணி புலந்திரனுக்குக்கோபித்து
வார்த்தையுரைக்கிறது.

பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
கதிக்குதிமண்டி கண்கள்நெருப்பாக
நெற்றிப்புருவம் நெருப்பாய்பனல்பறந்து
பக்கச்சதைததுடிக்கப் பத்தினியாளேதுசொல்வாள்
போபோபுலந்திரரே போகவிட்டேன்தூதுக்கு
முன்னையும்பூசல் முடிந்துமிருக்குதே
முத்துமுடிபாண்டியனும் பட்டமிருக்கிறானே
இப்பவும்பூசல் எழுப்புகிறார்பஞ்சவர்கள்

கொல்லநிற்பார்பஞ்சவர்கள் கூட்டியிருப்பார்கள்
சிம்மாகெட்டி சுமப்பார்கள்பஞ்சவர்கள்
கடலைக்கரைக்குந் தொடருவார்பஞ்சவர்கள்
ஆலோலமென்று அழுவார்கள்பஞ்சவர்கள்
இப்படியாக யிருக்குமந்தவேளையிலே
போபோபுனந்திரரே போகவிட்டேன் தூதுக்கென்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு

புனந்திரன்மறுத்துச்சொல்லுகிறது.

ஐவரைபற்கும் ஆழிவுசக்தாற்கும்
அவர்க்கேதெரியாதே வுனக்கேதெரியுமோ
போகவிடைதாருமென்றான போரஞ்சா புத்திரனும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
சோரவளநங்கை சுபத்திரையைப்போலேனான்
சடையாய்சடைவிரித்து சன்னாசிவேடங்கொண்டு
பிலாக்கணஞ்சொல்லி யழமாட்டேன்புண்ணியனே
ஒப்பாரிசொல்லி யழமாட்டேன்வுத்தமனே
போபோபுனந்திரரே போகவிட்டேன் தூதுக்கென்றான்
போரஞ்சாமன்னர் புனந்திரருமேதுசொல்வார்
என்னென்னசொன்னாலும் இனிகேளீர் என்னாச்சி
போகவிடைதாருமென்றார் போர்விஜயன்புத்திரனும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
நல்லதனத்திலே சொன்னாலுங்கேளானே
சொன்னாலுங்கேளானே சுந்திரப்பூமுடியன்
கடுத்தமொழியாக காளையற்குநாமுரைத்தால்
அப்போதுநிற்கானே ஆனந்தவாழ்மார்பன்
பொற்கொடியாளல்லியரும் புத்திரற்குஏதுசொல்வாள்
ஆருடையபுத்திரனும் என்றாளே அல்லியரும்
என்றுசொன்னவார்த்தையை இந்திரருந்தான்கேட்டு
இவ்வுலகந்தானறியும் எம்பெருமாள்தானறிவார்
மண்டலங்கள்தானறிய மன்னவர்கள்தானறிவார்
சோலைமலருடைய சொக்கருந்தாமறிவார்
ஆனைமலையுடைய அம்மனுந்தானறிவாள்
வளிஞ்சிவளைத்த காளையுடபுத்திரன்யான்
எட்டாதனில்வளைத்த விஜயனுடபுத்திரன்யான்
என்றுமவனுரைக்க யேதுசொல்வானல்லியற்கு
பொழுதுமேதானாச்சு போகவிடைதாருமென்றான்
போகவிடைதாருமென்றான் போரஞ்சாபுத்திரனும்
விடைதாரும்ஆச்சியென்று வேந்தனுந்தெண்டனிட்டான்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
அந்திருக்குந்தாதிகளி லதிலொருத்திதானழைத்து
பொன்னுமல்லநாடாரு மணவாளைவக்கூப்பிடென்றாள்

தாதிகள்பொன்னுமலைகாடானைக் கூப்பிடுகிறது.

அருளாருளுமென்னாச்சி யிப்படிக்கேயாகுமென்று
சொல்லப்பெற்றோமென்று சுலுக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றோமென்றுசொல்லிக் கும்பிட்டெழுந்திருந்து
பட்டெடுத்துக்கட்டி பலர்மகிழக்கண்டுபோல்
எனுமிச்சப்பூப்பட்டு நன்றாய்வரிந்துடுத்தி
போராளவள்தாதி பொன்னையரணமின்ன
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
மாநகரமாளும் மகராஜன்மாளிசென்றாள்
பொன்னுமலைகாடானும் அண்ணர்க்கெதிரில்வந்து
அண்ணற்கெதிரில்வந்து அடிவணக்கிதெண்டனிட்டு
தெண்டனிட்டுதாதி திரும்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
பொன்னுமலைகாடானும் அண்ணாவுக்தான்பார்த்து
நீ-யார்பெண்ணேதாதி யறியவுரையுமென்றான்
யார்பணியுமல்ல வடிவேன்திருப்பணிதான்
ஒருவர்பணியுமல்ல வும்முடையனற்பணிதான்
பேர்பெற்றுடைய பெருமாளேவுன்பணிதான்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள் தாதியென்றாள்
பொன்னுமலைகாடானு அண்ணாவுக்தான்கேட்டு
நீயிங்கேவந்த தெனக்கறியச்சொல்லுமென்றார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகியும்
உம்மையழைத்துவர கட்டளைகளிட்டார்காண்
வாருமையாவென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டாள்
பொன்னுமலைகாடானும் அண்ணாவுக்தானகேட்டு
இந்நேரமங்கே யிருந்துநான்வந்தேனே
நானறியாக்காரியங்கள் உண்டோடிநாயகமே
ஏதுவகையா யென்னைவரவழைத்தார்
வரவழைத்தகாரியங்கள் வாய்திறந்துசொல்லுமென்றார்
தாமக்குழலாளும் தாதியவளேதுசொல்வாள்
இராஜாக்கள்காரியங்கள் நமக்குவெளிப்படுமோ
தல்திரியர்காரியங்கள் சுறுமம்வெளிப்படுமோ
மந்திரிகாரியங்கள் மறுமம்வெளிப்படுமோ
என்னமோயேதோ வெனக்கொன்றுந்தெரியாது

பொன்னுமலைகாடான் அல்லிகொலுவுக்குவருகிறது.

பொன்னுமலைகாடானும் அண்ணாவெழுந்திருந்து
முத்துமெரிவடியைத் தொட்டுமிதித்து
அரண்மனைபெழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி

தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
அங்காடிவீதிவிட்டு அரண்மனையினுட்புகுந்து
பிறவாமுடிதரித்த பெண்பெருமான்முன்னேவந்து
ஏதுவகையா யென்னைவரவழைத்தீர்
வரவழைத்தகாரியங்கள் வாய்திறந்துசொல்லுமென்றார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வார்
அண்ணாவேவீரரேளும் அடியேனொருவார்த்தை
போரஞ்சாமன்னன் புனந்திரனார்வீரியனும்
இவரையுங்காணுதற்கு ஆணழகன்போகவென்றான்
ஆலாலமுள்ளவனே ஆற்றிலேஆதரித்து
காவடிதன்ஜலத்தில் கைகழுவிநீர்குடித்து
காவலனார்வீரியனை கண்ணுண்டாப்பாருமென்றாள்
பொன்னுமலைநாடாளும் அண்ணாவுந்தான்கேட்டு
அருளாருளுமென்னுச்சி அப்படியேயாகுதென்று
போரஞ்சாமன்னர் புனந்திரனார்முன்னேவந்து
இனிவாருந்தம்பியென்று யிருவருமெழுந்திருந்து
அத்தமுஞ்சத்தமும் அழைக்காதேஆணழகன்
தாமழேடியான் தனித்தாவடமசைய
சாத்தியபூணூலும் தனித்தாவடமசைய
வில்லுங்கைமார்பன் யணிகலமுங்கூட்டாதே
யானையுஞ்சேனையும் யணிகலமுங்கூட்டாதே
இருவருக்தாளெழுந்து நடந்தார்துரிதமுடன்

புனந்திரன் தாமரைக்காணுகிறது.

வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
குருட்சேத்திரபூமி குருபூமிதேசம்வந்தான்
நூலருடகாவலிலே ஆணழகன்போய்புகுந்தான்
தாரார்புகழுடைய தருமருக்கெதிரேவந்து
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
தர்மராசிர்வாதம் தார்வேந்தன்சுத்திபண்ணி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
ஆனந்தவாழ்மார்பன் அடிவணங்கிநிற்கையிலே
தாரார்புகழுடைய தருமரவர்பார்த்து
வந்துபணிந்தவனுங் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
தூதுரைக்கவந்தீரோ சுந்தரப்பூமுடியே

வாழ்வீர்வளர்ந்திடுவீர் வந்திருப்பீருத்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீராசையாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
முன்னைப்பெறுவீர் எதிர்த்தார்முடிபெறுவீர்
பின்னைப்பெறுவீர் பெறுமான்முடிபெறுவீர்
போருக்குப்போய்விடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவீர்
பெண்களைக்கொள்ளுவீர் பிள்ளைகளைப்பெற்றிடுவீர்
மாதர்களைப்பெற்றிடுவீர் மைந்தர்களைப்பெற்றிடுவீர்
ஆலிலைபோலேதழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்ற முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
வாழ்ந்திடுவீரென்று மனதாரவாழ்த்தினார்
தூதுரைத்துமீளுமையா சுந்தரப்பூமுடியே
போய்வாருமென்றுசொல்லி பொருந்தவிடைகொடுத்தான்
விடைபெற்றெழுந்திருந்தான் வேந்தர்பெருமானும்

புனந்திரன் கிருஷ்ணமூர்த்தியைக் காணுகிறது.

ஏழுலகையாளுகின்ற வெம்பெருமாள்முன்னேவந்து
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பாதமதுதுலக்கி பன்னீரால்சுத்திசெய்து
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்காலடிபணிந்து முடிவணங்கிதெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
மாமனார்பாதம் வணங்கிநின்றான் மன்னவனும்
அம்மான்தன்பாதம் அடிவணங்கிதெண்டனிட்டான்
வந்துபணிந்தவரைக் கண்டுமனமகிழ்ந்து
ஏழுலகையாளுகிற வெம்பெருமான்மனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
தூதுரைக்கவந்தீரோ சுந்தரப்பூமுடியே
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வந்திருப்பீருத்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீராசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வீர்
எதிர்த்தார்முடிபெறுவாய் எம்பெருமாள்பதம்பெறுவாய்
பிள்ளைகளைப்பெற்றிடுவாய் பெருண்டாய்வாழ்ந்திடுவாய்
போருக்குப்போவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவாய்
ஆலிலைபோல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்தழைத்து முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
ஆயர்திருக்குழ . . தில் அணிந்தபதக்கமது

திருமார்பிலிட்டதொரு திருப்பதக்கந்தான்வாங்கி
ஆனந்தமார்பனுக்கு அழகுபடசாத்தினர்
தூதுரைக்கப்போமிடத்தில் சொல்லுகிறேன்கேளுமையா
ஒன்றுக்குபத்து ஒருநூற்றுக்காயிரமாம்
பத்துக்குநூறு பழுதில்லாமலுரைத்த
நாவுதவறாமல் நல்வார்த்தைக்குன்றாமல்
சொல்லுதவறாமல் சொற்சிலவுசாயாமல்
சொல்லுக்குசொல்லுரைத்து வாருமையாசுந்தரமே
போய்வாருமென்று பொருந்தவிடைகொடுத்து
விடைபெற்றெழுந்திருந்தான் வேந்தர்பெருமானும்

புனந்திரன் வீமனைக்காணுகிறது.

வெற்றிமதயானை வீமர்க்கருகில்வந்து
எழானைபலமுடைய இயல்வீமர்முன்னேவந்து
பூவும்புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பன்னீரால்காலலம்பி பாதமதுதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்காலலம்பவந்து மூவிருகால்தெண்டனிட்டு
நாற்காலலம்பவந்து நமஸ்பரித்துத்தெண்டனிட்டு
வெற்றிமதயானை வீமரவர்பார்த்து
[illegible]துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
என்னைப்பெறுவாய் எதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
நீர்ப்பாய்நிலைதரிப்பாய் நீராசையாண்டிடுவாய்
கற்பதித்ததூண்போலே கலங்காதரசாள்வாய்
விற்பதித்ததூண்போலே வெகுகாலரசாள்வாய்
போருக்குப்போவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றுகளத்திலே வீரபட்டங்கட்டிடுவாய்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினர்
வாழ்ந்திருப்பீரென்று மனமாரவாழ்த்தினர்
தூதுரைக்கப்போமிடத்தை சொல்லுகிறேன்கேளுமையா
சகுனிதலையைத் தவிடுபொடியாக்கி
அம்பலங்கள்தோறும் இடித்துதவிடாக்கி
ஆலந்தரணைத்தோறும் அடங்கலுமகீபிடித்து
ஒன்றுக்கும்பத்து ஒருநூற்றுக்காயிரமாம்
சொல்லுவழுவாமல் சொற்சிலவுசாயாமல்
நாவுதவறாமல் நல்வார்த்தைகுன்றாமல்
தூதுரைத்துமீளுமையா சுந்தரப்பூமுடியே
போய்வாருமென்று பொருந்தவிடைகொடுத்தார்

விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமானும்

புனந்திரன் அருச்சுனனைக்காணுதல்.

காண்டாபுரமெரித்த காளையற்கெதிரில்வந்து
பூவும்புதுமலரும் பொன்னருகு அட்சதையும்
பன்னீருஞ்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
மூக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
ஐங்கால்வலம்வந்து அடிவணங்கிதெண்டனிட்டு
காண்டாபுரமெரித்த காளையவர்பார்த்து
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வார்த்திருப்பீருத்திருப்பீர்
நிற்பீர்நிலைப்பீர் நீரரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வாய்
விற்பதித்ததூண்போல வெகுகாலமரசாள்வாய்
என்னைப்பெறுவாய் எதிர்த்தார்முடிபெருவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
போருக்குபோய்விடுவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றகளரியிலே வீரபட்டமாண்டிடுவாய்
கன்னிகளைக்கொண்டிடுவாய் காளைகளையீன்றிடுவாய்
புத்திரரைப்பெற்றிடுவாய் பேருண்டாய்வாழ்ந்திடுவாய்
பிள்ளைகளைப்பெறுவாய் பிரபலமாய்வாழ்ந்திடுவாய்
மைந்தர்களைப்பெற்றிடுவாய் மகிழ்ச்சியாய்வாழ்ந்திடுவாய்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
உச்சிமுகந்து உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கங்களெல்லாம் பரிவாகத்தான்தடவி
தூதுரைத்துமீளுமையா சுந்தரப்பூமுடியே
போய்வாருமென்றுசொல்லிப் பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தார் வேந்தர்பெருமானும்
சரல்புகுந்தார் இருவாருகில்வந்து

புனந்திரன் நகுலசகாதேவரைக் காணுகிறது.

பூவும்புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து மூன்றுகால்தெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
தூதுரைக்கவந்தீரோ சுந்தரபூமுடியே

வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திப்பீருத்திப்பீர்
நிற்பாய்நிலைதரிப்பாய் நீரரசையாண்டிடுவாய்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வாய்
விற்பதித்ததூண்போல வெகுநாளரசாள்வாய்
என்னைப்பெறுவாய் எதிர்த்தாரமுடிபெறுவாய்
பின்னைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
போருக்குப்போய்விடுவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றுகளரியிலே வீரபட்டங்கொண்டிடுவாய்
எதிர்த்தவரைச்சங்கரித்து எல்லையரசாள்வாய்
மாதர்களைமாலையிட்டு மைந்தர்களைப்பெற்றிடுவாய்
பெற்றிடுவாய்பெற்றிடுவாய் பிள்ளைபதினாறும்
பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்ந்திடுவாய்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
வாழ்ந்திருப்பீரென்று மனமாரவாழ்த்தினார்
தூதுரைக்கப்போமிடத்தை சொல்லுகிறேன்கேளுமையா
சரல்ப்பூந்தாரானை எழுதினான்சித்திரத்தில்
அபிமன்னராசாவை அங்கேயெழுதிவைத்து
செத்தவன்பிள்ளையென்று சற்றுநினையாமல்
இறந்தவன்பிள்ளையென்று எண்ணியவன்பாராமல்
அம்பலவாசலிலே அங்கேபடமெழுதி
அம்பலந்தானறிய அங்கேயவன்கட்டிவைத்தான்
தம்பியைக்கண்டுநீ தற்சோர்ந்துநில்லாதே
உடப்பிறப்பைக்கண்டுநீ உற்றவுயிர்சோராதே
கொம்பனையாள்பாடிசென்று கூடிவிளையாடாதே
மைந்தரைக்கண்டுநீ மகிழ்ந்துவிளையாடாதே
பிள்ளையைக்கண்டுநீ பித்தம்பிடியாதே
சொல்லுதவறாமல் சொற்சிலவுசாயாமல்
நாவுதவறாமல் நல்வார்த்தைகுன்றாமல்
தூதுரைக்கநீருமையா சுந்தரப்பூமுடியே
போய்வாருமென்றுசொல்லி பொருந்திவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமானும்
இவருடைத்தாரம் ஆணழகன்பெற்றுக்கொண்டு
தென்னமுடியானுந் தினைச்சிமாளிசென்றான்

புலந்திரன் சுபத்திரையைகாணுகிறது.

சேசரவனங்கனை சுபத்திரையாள்முன்னேவந்து
பூவும்புதுமலரும் பொன்னறுகுஅட்சதையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பாதமதுகழுவி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்துபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து மூவிருகால்தெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு

மாதாவின்பாதம் மலர்தூவி தெண்டனிட்டு
வந்துபணிந்தவனைக் கண்டுசுபத்திரையும்
நீர்கொடுத்தகண்கள்ரெண்டும் நீர்கிகர்விழியும்
கண்ணீர்கலங்கிடவே கட்டமுகிமேந்துசொல்வாள்
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வந்திருப்பீருந்திருப்பீர்
நிற்பாய்நிலைதரிப்பாய் நீராசைவாண்டிடுவாய்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வாய்
விற்பதித்ததூண்போல விளங்க அரசாள்வாய்
என்னைப்பெறுவாய் யெதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
போருக்குப்போய்விடுவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவாய்
எதிரியைவென்றிடுவாய் யெல்லையரசாண்டிடுவாய்
மாற்றானைவென்றிடுவாய் மண்டலத்தையாண்டிடுவாய்
பெற்றிடுவாய்பெற்றிடுவாய் பின்னைபதினாறும்
பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்ந்திடுவாய்
வாழ்வீர்காண்யென்று மனங்குளிரவாழ்த்தினார்
வாழ்த்திவிடைகொடுத்து மடிமேலேகொண்டிருந்தி
ஆளப்பிறந்த அபிமன்னராசாவும்
உன்னோடேகூட விளையாடுகிறேனென்றிருந்தேன்
பொன்னுலகநாட்டுக்கு போனசெய்திநானறியேன்
இவ்வுலகைவிட்டு எழுந்துநடந்துவிட்டான்
பஞ்சவர்கள்என்மேல் பகைமுடித்தார்கண்டீரோ
பாரளந்தாரென்மேல் பகைமுடித்தார்கண்டீரே
என்றுசொல்லிமங்கையரும் இருகண்ணால்முத்துதித்தாள்
முத்துப்போல்கண்ணீரை முகமெல்லாஞ்சோரவிட்டாள்
பவளம்போல்கண்ணீரை பக்கமெல்லாஞ்சோரவிட்டாள்
போரஞ்சாமன்னர் புனந்திரரும்தான்பார்த்து
வந்துவிழுங்கண்ணீரை வெண்டுயிலால்தான்துடைத்து
மாதாவருந்துவது மன்னன்மனங்கொள்ளாமல்
இருக்கிறார்அபிமருஞ் செத்தார்புனந்திரரும்
உத்தரமேசெய்வதற்கு உவபுத்திரனிங்குவந்தேன்
ஆறிவிடும் ஆறிவிடும் ஆச்சிநீ ஆறிவிடும்
தேறிவிடும்தேறிவிடுந் தேனமொழியேதேறிவிடும்
அப்போதுசுபத்திரையாள் ஆரணங்கும்பதுசொல்வாள்
ஐயோபுனந்திரரே அறிவுள்ளகண்மணியே
பொன்னுமணியே புனந்திராசாவே
கட்டிமணியே கலிங்கத்துராசாவே
காலனுமன்றியிலே கனகதண்டிபென்றீரோ
திருமேனிக்காவலனே சேவகனுமில்லாமல்
வாழ்விசையன்சீமானே வந்தவகைசொல்லுமென்றாள்

மைந்தர்புனைந்திரரே வந்தவகையேது
வளநாடிப்புத்திரரே வந்தவகைசொல்லுமென்றாள்
அல்லியுடசீர்மகனே அறியவுரையுமென்றாள்
போராஞ்சாமன்னர் புனைந்திரரேதுசொல்வார்
பெற்றபெருமாளும் பிரியமுடையவரும்
துவரையரும் ஆழிவுசந்தாரும்
வேந்தர்பெருமாளும் விலாடபுரம்வந்தமர்ந்து
என்னைவரவழைத்தார் பெண்ணைபெற்றராசாக்கள்
போப்பாரப்பார் பெரியப்பாதங்களுக்கு
விடையருளவிட்டார்கள் வீரப்பெரும்புலிகள்
தோரணையானையாய் தூதுரைக்கப்போரேனென்றான்
துர்நீலம்கண்ணனே தூதுரைக்கப்போரேனென்றான்
சோரவளங்கை சுபத்திரையாள் தான்கேட்டு
கதும்பிக்கதும்பிக் கண்கள்ளறியபார்ந்து
நீலவிழிகண்கள் நெருப்புத்தணலாகி
பதியாகம் பவளம்போல்கண்சிவந்து
முன்னேயும்பூசல் முடிக்குதுமிருக்குதே
இப்பவும்பூசை யெழும்புவார்பஞ்சவர்கள்
சொக்கவினைப்பார்பஞ்சவர்கள் கூடியிருப்பார்பஞ்சவர்கள்
சிம்மாசிகட்டி அடைப்பார்கள்பஞ்சவர்கள்
சடைகளைக்குத் தொடருவார்பஞ்சவர்கள்
ஆலோலமென்று அழுவார்கள்பஞ்சவர்கள்
துவருடன்சேதி யறியானோயல்லியரும்
வையகத்தையாண்டமவள் மதிகுலைந்துபோனாளே
இப்போதும்பிள்ளையைத்தான் பக்கல்வரவிட்டாளே
மைத்தான்படைநடுவில் மைந்தரைப்போகவிட்டாள்
போபோபுனைந்திரரே போகவிடேன் தூதுக்கென்றாள்
அப்போபுனைந்திரனும் ஆச்சிபற்குயேதுசொல்வார்
துவரையரும் ஆழிவுசந்தாரும்
போகவிடைதந்தார்கள் போர்மன்னராசாக்கள்
நீயும்விடைதாருமென்றான் வித்திலம்பூமுடியான்
சோரவளங்கை சுபத்திரையுந்தானெழுந்து

### சுபத்திரை புனைந்திரனுக்குபிரார்த்தனைசெய்கிறது.

மண்ணளந்தான்பாதமது நோக்கிமனதிலெண்ணி
அதுபதுமுழச்சல்லா ஆரணக்குதானெடுத்து
மஞ்சள் துணிநனைத்து மங்கையவள்தானெடுத்து
ஆயிரம்பொன்னெடுத்து அடவுடனேதான்முடித்து
சோலைமலருடைய சொக்கரைதானினைத்து
ஆனைமலையுடைய அம்மனையுந்தானினைத்து
செங்கல்லனும்பூமுடியான் தூதுரைத்துமீண்டாக்கால்
தண்டிவருமபொன்னையெல்லாம் சரிகைக் நடத்துடனே

கொண்டுவந்துகொட்டுவேன் கோபுரவாசலண்டை
மாத்தான்படைநடுவில் மைந்தர்புனந்திரனை
கண்ணுடையாய்பாருமென்று கர்த்தனைகைதொழுதாள்
மைந்தனைக்காருமென்று மங்கையருங்கைதொழுது
போய்வாருமென்றுசொல்லிப் போகவிடைகொடுத்தாள்
விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமாளும்

புனந்திரன் துரோபதையைக்காணுகிறது.

தோராவடிவழகி துரோபதையைத்தேடிவாரான்
தோராவடிவழகி துரோபதையாள்தாதியவள்
ஓட்டம்பெருநடையும் ஓடிவந்துஉட்புகுந்து
தோராவடிவழகி துரோபதையாள்முன்னேவந்தாள்
ஆட்டமுங்கூத்தொளிவும் ஆரணங்குபார்த்திருந்தாள்
நட்டுமுட்டுசாலே நாட்டியங்கள்பார்த்திருந்தாள்
தாமக்குழலாளும் தாதிவந்துதெண்டனிட்டாள்
தோராவடிவழகி துரோபதைநாயகியே
இன்னாட்டாநல்லகாண் இத்திசையாநல்லகாண்
தென்னாடுஞ்சூழத் திசைவணங்கிவந்தவன்காண்
வைகைவளநாட்டில் பெற்றெடுத்தபுத்திரனகாண்
வாழ்பாண்டிநாட்டாள் பயன்றெடுத்தகண்மணிகாண்
போராஞ்சாமன்னர் புனந்திரவீரியரும்
உன்பிள்ளைவருகுதென்று பின்னொருக்கால்தெண்டனிட்டாள்
மைந்தர்வருகுதென்று மறுத்தொருக்கால்தெண்டனிட்டாள்
தோழுவடிவழகி துரோபதையாள்தான்கேட்டு
மைந்தர்வருகுதென்ன மாதுமனங்குளிர்ந்து
பிள்ளைவருகுதென்ன பூவைமனமகிழ்ந்து
ஆட்டமுங்கூத்துகளும் அமருமென்றுகையமர்த்தி
நட்டுமுட்டுசாலையை நாளையென்றுகையமர்த்தி
அடிசிலம்பும்பாடகமும் ஆர்க்கக்குதித்திறங்கி
பூஞ்சிலம்பும்பாடகமும் பொங்கக்குதித்திறங்கி
கூடவேசோதிமின்ன கொம்பேரிடையாளும்
மற்றுமொருவாதினத்தில் மாதரவள்வீற்றிருந்தாள்
போராஞ்சாமன்னர் புனந்திரவீரியரும்
ஓடமலர்க்கண்ணனும் உட்கட்டிற்போய்புகுந்து
தோராவடிவழகி துரோபதையாள்தானிருக்கும்
ஆதினத்தின்முன்னேவந்தான் அல்லித்திருமகனும்
பூவும்புதுமருநம் பொன்னருகு அட்சதையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பாதமதுகழுவி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டாள்

தோராவடிவழகி துரோபதையுந்தான்பார்த்து
அப்பாமகனே அறிவுள்ளகண்மணியே
இப்பாலரயாளவே யெங்கள்சிகாமணியே
அல்லித்திருமகனே ஆனந்தவாழ்மார்பா
வருகவருகயென் வள்ளலேவருகவென்ருள்
திருவருகபூவருக தேனேவருகவென்ருள்
குடிகாரகொற்றவனே கொண்டுவருகவென்ருள்
அங்கத்துக்குள்ளே அமர்ந்திருக்கும்பாற்குடமே
சொக்கர்திருவாசலுக்குத் தூண்டாமணிவிளக்கே
சப்பனுஞ்சோங்கும் கரைதுறையமுள்ளவனே
முத்துப்படுந்துறையும் முழுதிலுங்கொண்டவனே
பவளப்படுந்துறையும் பத்துலட்சமுள்ளவனே
வையைவளநாட்டை வாழ்விக்கவந்தவனே
வாழ்மதுரைராச்சியத்தை ஆளவந்தரத்தினமே
ஆயிரம்பாண்டியற்கு அழகானபேரமையே
ஆனந்தவாழ்மார்பா அல்லித்திருமகனே
மருடனை அல்லியற்கு மனதானபுத்திரரே
கண்ணான கண்மணியே கட்டழகன்சீர்மகனே
பொன்னுன பொற்குடமே புனந்திராசாவே
பொன்னுரெண்டுஞ்சித்தடியை பூவிரண்டும்கண்ணிலொத்தி
தங்கத்தால்சித்தடியைத் தார்குழலாள்கண்ணிலொத்தி
மைந்தனைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்து
இந்திரனைத்தூக்கி எடுத்துமடியில்வைத்தாள்
அப்போபுனந்திரனார் ஆனந்தவாழ்மார்பன்
மடியைவிட்டுக்கீழ்குதித்து மாதாவின் முன்னேவந்து
மாதாவின்சீர்பாதம் வணங்கினன்மன்னவனும்
சாண்கிறேனச்சியென்று கால்மேல்முடிசாய்த்தான்
தோராவடிவழகி துரோபதையுந்தான்பார்த்து
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வாழ்ந்திருப்பீருத்திருப்பீர்
நிற்பாய்நிலைதரிப்பாய் நீரசையாண்டிடுவாய்
நற்பதித்ததூண்போல கலங்காதராசாள்வாய்
விற்பதித்ததூண்போலே விளங்காதராசாள்வாய்
எச்சினைப்பெருவாய் எதிர்த்தார்முடிபெருவாய்
பிள்ளைப்பெருவாய் பெருமாள்பதம்பெருவாய்
போருக்குப்போய்விடுவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வெண்றகளறியிலே வீரபட்டஞ்சூட்டிடுவாய்
எதிரிகளைச்சங்கரித்து யெல்லையரசாண்டிடுவாய்
மாற்றானைசங்கரித்து வையகத்தையாண்டிடுவாய்
கன்னிகளைமாலையிட்டுக் காளைகளையீன்றிடுவாய்
பெண்களைமாலையிட்டு பிள்ளைகளைப்பெற்றிடுவாய்

மங்கைகளைமாலையிட்டு மைந்தர்களைபெற்றிடுவாய்
பெற்றிடுவாய்பெற்றிடுவாய் பிள்ளைபதினாறும்
பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்ந்திடுவாய்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்கள்
மைந்தரைகொஞ்சி மடிமேலேகொண்டணைத்து
புத்திரரைகொஞ்சி யெடுத்துமடியில்வைத்து
காலாருமன்றியிலே சனகதண்டியன்றியிலே
திருமேனிக்காவலனே சேவகனுமில்லாமல்
என்வாழ்விசையன்சீர்மகனே வந்தவகையேது
ஏதுவகையாக யிங்கேவந்தீர்சொல்லுமென்றார்
அப்போபுனந்திரரும் ஆச்சியருக்கேதுசொல்வான்
ஆச்சிநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னாச்சிநீர்கேளும் இன்னமொருவார்த்தை
பெற்றபெருமாளும் பிரியமுடையவரும்
ஐவரையரும் ஆழிவுயர்ந்தாரும்
பேரப்பாரப்பார் பெரியப்பருடையவரும்
விடையருளவிட்டார்கள் வீரப்பெரும்புலிகள்
தோரணயானையாய் தூதுரைக்கப்போறேனென்றான்
துங்நீலங்கண்ணனும் தூதுரைக்கப்போறேனென்றான்
தோராவடிவழகி துரோபதைபுந்தான்கேட்டு
மைந்தர்முகம்நோக்கி மாதாவும்யேதுசொல்வாள்
மாபாவிவாசலுக்கு மன்னவரேபோரீரோ
அரும்பாவிவாசலுக்கு ஐயாநீர்போறீரோ
பெரும்பாவிவாசலுக்கு புத்திரரேபோரீரோ
தூதுரைக்கப்போமிடத்தைச் சொல்லுகிறேன்கேளுமையா
பாசத்திளவரையார படைகூட்டந்தன்னுடனே
யானையின்மேல்நீயேறி அவ்வீதிபோம்போது
கச்சாயம்வேண்டிக் களையாகிவந்தாலும்
கர்சாயந்தீண்டாதே கண்ணிலாமாளிகையில்
தண்ணீர்களையாகி தாகமெடுத்தாலும்
தாகந்தணியாதே தனஞ்செயனார்மாளிகையில்
வெற்றிலைவேண்டி விருப்பதுகொண்டாலும்
வெற்றிலைகொள்ளாதே வேந்தர்கடைத்தெருவில்
சுண்ணாம்புகொள்ளாதே சூதுள்ளவாசலிலே
அடைக்காயுங்கஞ்சிடுவார் ஆனந்தமார்பனுக்கு
அடைக்காய்தீண்டாதே ஆணழகன் அம்பலத்தில்
வாசனைகொண்டுவந்து வகையாயெடுக்கவென்பார்
வாசனைகள்தீண்டாதே வலுவாயன் அம்பலத்தில்
பொய்யாதினமிடுவார் பொற்கைவளபாண்டியரே
ஆகினஞ்சென்றோதே ஆனந்தவாழ்மார்பா
கட்டுங்கயிறும் கயிறுகளத்தனையும்

இருந்தாருமென்று எடுத்து அவள் கைகொடுத்து
கன்னியாள் பெற்றெடுத்த கபடன் துரியோதனன்
கொலுமுகவாசலிலே கோடிபலவுரைப்பார்
சிம்மாதனக்கொலுவில் சேனையெடுத்துரைப்பார்
உன்னையவன் கண்டாலும் ஒருகோடியெடுத்துரைப்பான்
சொல்லுக்குச்சொல்லுரையுஞ் சுந்திரப்பூமுடியே
நூறுக்குத்தூறுரையுந் துங்கநீலங்கண்ணனே
ஒன்றுக்குப்பத்து ஒருநூறுக்காயிரம்
சொல்லுவழுவாமல் சொற்சிலம்புசாயாமல்
நாவுதவறாமல் நல்வார்த்தைக்குன்றாமல்
தூதுரைத்துமீளுமையா சுந்திரப்பூமுடியே
சிந்தைகவலையற்றுத் திரும்புமையா சுந்திரரே
மனதில்பயம்நீங்கி மன்னவரேபோய்வாரும்
என்றுமவளுரைத்தாள் ஏலப்பசுங்கிளியாள்
போருஞ்சாமன்னர் புனந்திரனார்தான்கேட்டு
அப்படிக்கேபோகுமென்று ஆச்சிசரணமென்றான்
போய்வாரேன் ஆச்சியென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்
தோராவடிவழகி துரோபதையுந்தானெழுந்து
அமுதுண்ணவாருமையா வென்றுமவளெழுந்து
அமுதுண்ணுமண்டபத்தை யாரணங்குமுட்புகுந்து
செம்பொன்முக்கால்நிறுத்தி செம்பொன் தளிகையிட்டாள்
புலிமுக்கால்தானிறுத்திப் பொன்னால்தடுக்குமிட்டாள்
வாழையிலைபோட்டு மணிச்செம்பில்நீர்தெளித்து
தும்பைமலர்போல போசனமுந்தான்சொரிந்தாள்
தாளிதமும்பச்சடியுந் தன்னில்வகைக்கறியும்
கூட்டுக்கறியில் கொழும்புவகைக்கறியும்
பொரித்தபொரிக்கறியும் பொன்போலசிறுபருப்பும்
ஆயிரத்தெட்டு அருங்கறியும்போசனமும்
சுத்திக்கறியைவைத்துப் புத்துருக்குநெய்வார்த்தாள்
வாருமையாசங்கமரே வந்து துகொள்ளுமென்றாள்
அப்போபுனந்திரனும் ஆச்சியருக்கேதுசொல்வான்
தம்பியைநான்கொடுத்து தற்சோர்ந்துநிற்கையிலே
உடற்பிறப்பைநான்கொடுத்து உத்தஉயிர்சோர்கையிலே
தெய்வமிர்தமுண்டாலும் நிற்குமோபொங்கியிலே
பாலடிசிலுண்டாலும் நிற்குமோபொங்கியிலே
வேண்டாங்காண் ஆச்சியென்று வன்னமுடிசாய்த்தான்
ஆழிதடக்கையால் அழுத்தியவன்வீற்றிருந்தான்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்
தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
தூதுரைத்துமீளுமையா சுந்தரப்பூமுடியே

போய்வாருமென்றுசொல்லிப் பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமானும்
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி.

புனந்திரன் அல்லியரசாணியைக்காணுகிறது.

அவ்வீதியாக அழகாகத்தாண்டித்தானே
பொன்னுமலைநாடானும் அண்ணாவுந்தான்கூட
இருவருமாக யிசைந்து வழிநடந்தார்
குருட்சேத்திரப்பூமி குருபூமிதேசம்விட்டு
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
வாழ்மதுரைராச்சியத்தில் வந்தாரிருவருமாய்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளண்டைவந்து
பூவும்புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னீருஞ்சொம்புமேலே பன்னீருங்கொண்டுவந்து
பன்னீரால்காலலம்பிப் பட்டாலடி துவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
மாதாவின் பாதம் மலர்தூவிதெண்டனிட்டான்
தெண்டனிட்டதனயனைக் கண்டந்த அல்லியரும்
வாழ்வாய்வ ந்திலோய் வர்த்திப்பாயுத்திருப்பாய்
நிற்பாய்நிலைதரிப்பாய் நீரரசையாண்டிடுவாய்
கற்பதித்ததூண்போலே கலங்காதரசாள்வாய்
விற்பதித்ததூண்போலே வெகுநாளாய்வாழ்ந்திடுவாய்
என்னைப்பெருவாய் எதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
போருக்குப்போவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவாய்
மாற்றானைக்கொன்றிடுவாய் வையகத்தையாண்டிடுவாய்
சினத்தவர்கள்பூமுடியை செண்டாட்டமாட்டிடுவாய்
பகைத்தவர்கள்பூமுடியை பந்தாட்டமாட்டிடுவாய்
பிள்ளைகளைப்பெற்றிடுவாய் போதவேவாழ்ந்திடுவாய்
மைந்தர்களைப்பெற்று மகிழ்ச்சியாய்வாழ்ந்திடுவாய்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினாள்
வாழ்ந்திடுவீரென்று மனதாரவாழ்த்தினாள்
வாயாரவாழ்த்தி மனதுமிகக்குளிர்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
உச்சிமுகர்ந்து உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கந்தடவி பவளவாய்முத்தமிட்டு
போய்வந்தகாரியத்தை கேட்கலுற்றாருத்தமியும்
அப்பாபுனந்திரனே அழகுள்ளகண்மணியே

அருச்சுனனர்பெற்றெடுத்த ஆனந்தவாழ்மார்பன்
புண்ணியத்தால்வந்துதித்த பிள்ளைபுனந்திரனே.
சொக்கருளாலே துலங்கவந்தகண்மணியே
காலாளுமில்லாதே கனகதண்டியில்லாதே
திருமேனிக்காவலனே சேவகனுமில்லாதே
வாள்விசையன்சீர்மகனே வந்தவகைகளெல்லாம்
மைந்தர்புனந்திரரே வந்தவகைசொல்லுமென்றாள்
ஒன்றுங்குறையாமல் வுத்தமனேசொல்லுமென்றாள்
போய்வந்தகாரியத்தைப் புண்ணியனேசொல்லுமென்றாள்

புனந்திரன்சேதி யுரைக்கிறது.

அப்போபுனந்திரரும் ஆச்சியற்குயேதுசொல்வார்
மடியைவிட்டுயிழிறங்கி வந்துயெதிரில்நின்று
கைகட்டிவாய்புதைத்து காளையிடபுத்திரனும்
வணங்கிஅல்லியற்கும் வாய்திறந்தங்கேதுசொல்வான்
ஆச்சிநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னாச்சிநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
பெற்றப்பெருமாளும் பிரியமுடையவரும்
உடையாருங்கூடி உடனேமண்டபத்தில்
ஐவரையும் ஆழிவுயர்ந்தாரும்
வேந்தர்பெருமாளும் வேல்மண்டபத்தில்வீற்றிருந்து
என்னைவரவழைத்து எனக்கிட்டார்கட்டளைகள்
போப்பாஅப்பா பெரியப்பாதங்களுக்கு
விடையருளவிட்டார்கள் வீரபெரும்புலிகள்
தோரணையானையாய் தூதுரைக்கப்போறேனென்றான்
துன்னிலங்கன்றனும் தூதுரைக்கப்போகவென்று
போசவிடைதாருமென்று பொன்னடிக்குத்தெண்டனிட்டான்
பிறைமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
உதிக்குக்கனலாண்டி கண்கனெரிபறந்து
மீலவிழிகண்கள் நெருப்புத்தணலாகி
பத்திரகாகம் பவளம்போல்கண்சிவந்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
சூரியமண்டலத்தை எட்டிச்சுவாலயமாய்
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகமதாய்
ஸ்ரீபதுரைக்குள்ளே திருவாயில்வாயிலுள்ளே
எட்டிவரும்பாற்குடங்கள் காவலனர்வாசலிலே
எட்டிவரவிடுவார் எம்முடைய வாசலுக்கு
இத்தனையுர்கள்ளிவிட்டு எனேறீர்போறேனென்றாய்
அப்பாநீபோனால் அடியேனும்போறப்பேனோ
மைந்தாநீபோனால் மனதுதரிப்பேனோ
உள்ளந்தரித்திடுவோம் உத்தமனார்புத்திரனே
அறிவீரறிவீர் அடியேன்குடிவிளங்க

அடியேன்குடிவிளங்க வந்துதித்த ஆணழகா
எங்கள்குடிவிளங்க வந்துதித்தரத்தினமே
மன்னவன்பூமுடிக்கு வாட்டங்கள்வந்ததென்றால்
தென்னவன்பூமுடிக்கு தீங்குகள்வந்தானால்
ஆறாயிரவர் அணிதிரளார்பாண்டியரும்
ஆறாயிரவரும் அடியவளும்நான்கூட
ஆளும்அரசும் அனலிலேபாய்ந்திடுவோம்
பொன்னுமலைநாடாளும் அண்ணாவும்பாய்ந்திடுவார்
போகாதேபோகாதே புண்ணியனார்சீர்மகனே
என்றுமவளுரைக்க ஏதுசொல்வானிந்திரனும்
தோராவடிவழகி துரோபதையாளெண்ணைச்சி
மஞ்சள்துணியெடுத்து மலராமல்போய்ப்பிணைந்து
சொக்கர்பொன்னைதானெடுத்து சுவாமியைத்தானினைத்து
முடிப்பெடுத்துகட்டினார் மொய்குழலாள் ஆச்சியர்கள்
போகவிடைதந்தார்கள் போர்விசையன்தேவியர்கள்
நீயும்விடைதாருமென்றான் நித்திலரும்பூமுடியான்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
சீறிஎழுந்திருந்து சிங்ககுட்டிபோல்ததும்பு
வாளுருவிகைபிடித்து மாதுநல்லாளல்லியரும்
சிம்மாதனத்தைவிட்டு கீழக்குதித்திறங்கி
எட்டடியுமோரடியாய் விட்டுமிகநடந்தாள்
பத்தடியுமோரடியாய் விட்டுமிகநடந்தாள்
வேகமாய்த்தானடந்தாள் வேல்பொருதுங்கண்ணாளும்
ஆங்காரந்தன்னுடனே அல்லியவள்ஓடிவந்து
ஐவருடகாவலிலே ஆணழகிபோய்ப்புகுந்து
காண்டாவனமெரித்தக் காளையெதிரில்வந்து
அருச்சுனர்க்குமுன்பாக அல்லியவள்வந்திருந்து
வில்லாளிப்பார்த்தருக்கு மெல்லியெடுத்துரைப்பாள்

அல்லிக்கும் அர்ச்சுனர்க்கும் தர்க்கம்.

அறியாதறியுமோ ஆனந்தவாழ்மார்பா
முத்துசூழ்நன்னாடு ஏழுதிலும் அவனறியான்
மதுரையறுகாதம் வாழ்மதுரைமுக்காதம்
பொய்கையறுகாதம் பூமதுரைமுக்காதம்
வைகையறுகாதம் வாழ்மதுரைமுக்காதம்
அண்பத்தருகாதம் ஆணழகன்ராச்சியந்தான்
முத்துப்படுந்துறைகள் மூன்றுலட்சங்கோடியுண்டு
பவளம்படுந்துறைகள் பத்துலட்சங்கோடியுண்டு
இத்தனையுந்தானிருக்க யெந்தனிடபுத்திரன்காண்
ஒன்றுமறியானே வுந்தனிடபுத்திரனும்
பட்டணத்திலுள்ள படைமன்னர்தானறியார்

சொத்தளத்திலுள்ள குடிபடைகள் தானறியார்
அறியாதரியுமோ ஆனந்தவாழ்மார்பா
சிறியவனுக்கேது தெரியவரும்ராசாவே
அவனையனுப்புதற்கு நியாயமுண்டோகட்டழகா
உனக்குப்பெரியவர்களுண்டோதான்வையகத்தில்
அண்டமுலகளந்த ஆதிநாராயணரும்
ஆதிநாராயணரும் அவர்போனலாகாதா
தக்கப்புகழுடைய தருமர்போனலாகாதா
சித்திலங்குமுடியான் நீர்போனலாகாதா
இன்னஞ்சிறியவர்கள் இருவர்போனலாகாதா
நகுலசகாதேவ ராஜர்போனலாகாதா
அறியாதைபோகவிட நியாயமுண்டோவுந்தனுக்கே
தெரியாப்புலந்திரரைப் போகவிடலாகாது
போபோபுலந்திரரே போகவிட்டேன் தூதுக்கு
என்றுமவள்சீறியெடுத்துரைத்தாளல்லியரும்
காண்டாவனமெரித்த காளையதுகேட்டு
வில்லாளிபார்த்தர் விஜயரெடுத்துரைப்பார்
அல்லிமுகம்பார்த்து அருச்சுனனுமேதுசொல்வார்
ஆனைப்பிறந்த அபிமனைப்பெற்றாப்போல்
காமமுடியான் கடோற்கஜனைப்பெற்றாப்போல்
அந்தாலந்தீர்த்த அரவானைப்பெற்றாப்போல்
போரஞ்சாமன்னர் புலந்திரனைப்பெற்றேனே
மாலைமுடியானை வழியில்கண்டெடுத்தேனே
அசுரர்கள்பிள்ளையென்று தோணாதனுப்பினேனே
தூரத்தார்பிள்ளையென்று தோணாதனுப்பினேனே
என்பிள்ளையாகையினால் அனுப்பத்துணிந்தேனே
பெற்றபிள்ளையாகையினால் போகஅனுப்பிவிட்டேன்
நான்பெற்றபிள்ளையென்று தூதுக்கனுப்பிவிட்டேன்
என்பிள்ளைதானென்றால் பின்னொருக்கால்வார்த்தைசொன்னாய்
என்றுமவன்கோபித்து யேதுசொல்வாரருச்சுனரும்
முத்துவிரல்கூட்டி மூக்கின்மேல்கையைவைத்தான்
பவளவிரல்கூட்டி பல்லின்மேல்கையைவைத்தான்
தங்கவிரல்கூட்டித் தாடையின்மேல்கையைவைத்தான்
பிறைவாமுடிதரித்த பெண்பெருமாள்கோபங்கொண்டு
அருச்சுனரைத்தான்பார்த்து அல்லியவளேதுசொல்வாள்

அல்லியரசாணி அருச்சுனன்மேல் கோபிக்கிறது.

எடுத்தெடுத்துச்சொல்லுறதும் என்சொல்மறைக்கிறதும்
அத்தனைக்கும்வந்த கெருவமடக்குதற்கு
எடுத்துவாபெரியகத்தி யிருதுண்டாய்வெட்டிடுவேன்

கத்தியெடுத்துவா கடுசெனவேவெட்டிடுவேன்
என்றுமவள்சீறி யெக்களித்துப்பல்சிறி
மண்டியிட்டுச்சுத்துகிறாள் மாதுநல்லாளல்லியரும்
தாமக்குழலாளும் தாதியவளோடிவந்து
அல்லிக்குமுன்னேவந்து அடிவணங்கிதெண்டனிட்டாள்
அல்லி-கைத்தலத்தைதான்பிடித்து கட்டழகியேதுசொல்வாள்
ஆனைகட்டிவந்தாலும் ஆனந்தவாழ்மாரி
ஆளன்பெருமை வேணுமம்மா ஆரணங்கே
குதிரைகட்டிவாழ்ந்தாலும் கொத்தார்குழலியரே
கொண்டார்பெருமை வேணுமம்மாகொம்பனையே
தங்கமதிலேறி தானடந்துவாழ்ந்தாலும்
தாலிப்பெருமை வேண்டுமம்மாதையலரே
மஞ்சட்பெருமையது வேண்டுமம்மாதையலரே
ஆறிவிடும்ஆறிவிடும் ஆச்சியரேஆறிவிடும்
தேறிவிடும்தேறிவிடும் தேவியரேதேறிவிடும்
தணியுந்தணியுமம்மா தனஞ்செயனார்தேவியரே
என்றுமவளுரைத்தாள் ஏந்திழையாள் தாதியரும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகியும்
கொம்பனையாள்கோபங் குணப்படுத்திக்கொண்டவளும்
மங்கைநல்லாள்கோபம் வசப்படுத்திக்கொண்டவளும்
பிடித்தப்பிடியோடே பொன்மதுரைகொண்டுவந்தாள்
ஆனைத்தப்பிடியோடு அணிமதுரைகொண்டுவந்தாள்
வாழ்பாண்டிநாடாளும் வையைவளநாடுவந்தாள்
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
ஓடமயில்கண்ணாள் உட்கட்டிற்போய்ப்புகுந்தாள்
சிம்மாதனத்தருகே சென்றாளே அல்லியரும்
போரஞ்சாமன்னர் புலந்திரனாரோடிவந்து

அல்லியைப் புலந்திரன் காணுகிறது.

அல்லிக்கெதிர்வந்து அடிவணங்கிதெண்டனிட்டு
போனதொருகாரியங்கள் புறத்தியிலேகேட்டிருந்தேன்
நீசென்றகாரியங்கள் நிண்ணயங்கள்நானறியேன்
அருச்சுனரும்நீயும் அடுக்குமோயுத்தஞ்செய்ய
நீ-கோபித்துக்கண்சிவந்து கொல்லத்துணிந்ததுவும்
எல்லாமறிவேன்காண் என்னுடைய ஆச்சியரே
போகவிடைதாருமென்றான் போரஞ்சாபுத்திரனும்
அப்போதுஅல்லியருமாரணங்குமேதுசொல்வாள்
மைந்தர்முகம்நோக்கி மாதாவெடுத்துரைப்பாள்
வம்புகள்பேசி விகடங்கள்பண்ணுதற்கு
வீம்புகள்பேசி விகடங்கள்பண்ணுதற்கு
விகடங்கள்பண்ணுதற்கு விஜயன்மகனல்லோ
என்றுமவளுரைத்து எழுந்துநடக்கலுற்றாள்

## சொக்கர்கோவிலுக்கு அல்லி போகிறது.

பண்ணளந்தான் பாதமது நோக்கமனதிலெண்ணி
அரண்மனையெழுகட்டும அந்தப்புரந்தாண்டி
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
வைகைக்கரையோரம் வந்தாளே அல்லியரும்
ஆடைகளைந்து ஆபரணந்தானகளைந்து
பொய்கையில்ஸ்நானம்பண்ணி புனல்கங்கைநீராடி
தாமெடுத்து யிழைசேர்ந்தபட்டுடுத்தி
களைந்ததுயிலகளைந்து நாகரீகப்பட்டுடுத்தி
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்பணிந்து
அரகராவென்று அணிந்தாளே வெண்ணீறு
திக்கெங்கும்நோக்கித் திசையெங்கும்ஆதரித்து
ஆலவாயுறண்ட அரனடிபணிந்து
ஆதிசிவனை அடிவணங்கிதெண்டனிட்டு
ஆதிரைநோக்கி யிரங்கியவளதெண்டனிட்டு
ஐயனைமெய்யனை ஆயிரங்கண்ணிந்திரனை
பொய்சொல்வார்க்கெல்லாம் புறங்காக்கும்புண்ணியனே
மெய்சொல்வார்க்கெல்லாம் விளக்கொளியாய்நின்றவனே
நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளையுந்தெண்டனிட்டு
சத்திவனையவந்து செவியிலொருபூச்சொருகி
வைகைக்கரைவிட்டு வாறாளே அல்லியரும்
சொக்கரிடஆலயத்தில் சுந்தரியும்போய்புகுந்து
மூக்கால்வலம்வந்து மூவிருக்கால்தெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
சுவாமிக்கும் அம்மனுக்கும் சடுதியிலேவந்துநின்று
சொக்கரைத்தான்பார்த்து தோகைநல்லாளேதுசொல்வாள்
அம்மனைத்தான்பார்த்து அல்லியருமேதுசொல்வாள்
கொங்கலெனும்பூமுடியான் தூதுரைத்துமீண்டாக்கால்
இந்தவினைகளில்லாமல் சிறுவன்வந்துசேர்ந்தாக்கால்
அன்றுமலையார்க்கு ஆடுகிறபெண்ணிடுவேன்
உன்றுமலைபட்டு உடைபோடப்பண்ணிடுவேன்
தண்டிவரும்பொன்னையெல்லாம் சரிகைக்கூடத்துடனே
கொண்டுவந்துகொட்டிடுவேன் கோபுரவாசலிலே
அதுவாரக்கப்போகுதற்கு சிலவருளவேண்டுமென்றாள்
சுந்தரவதாருமென்று சிந்தடிக்குத்தெண்டனிட்டான்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குத்தெண்டனிட்டாள்

## சொக்கர் அல்லிக்கு வரங்கொடுத்தது.

அப்போதுசொக்கர் அம்மன்மனமகிழ்ந்து
போகவிடைகொடுத்தார் புலந்திராசருக்கு
வாழ்த்திவிடைகொடுத்தார் வாளெடுத்துக்கைகொடுத்தார்

மாயத்திருநீற்றை அள்ளியிட்டார்மங்கையற்கு
வண்ணலட்சஞ்சேனைகளை வரவிடுவேன்பின்னாலே
சிந்தனைகளில்லாமல் சிறுவனவன் வந்திடுவான்
மனக்கவலையில்லாமல் மன்னவன்வந்திடுவான்
போகஅனுப்பிவிடும் புனந்திரராசாவை
என்றுவிடைகொடுத்து யிருந்தாரேசொக்கலிங்கம்
விடைபெற்றுமீண்டாளே மேன்மையுடனல்லியரும்
ஆலயத்தைவிட்டுமல்லோ ஆரணங்குவாறாளே
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
அரண்மனையேழுகட்டும அந்தப்புரந்தாண்டி
ஓடமயில்கண்ணாளும் உட்கட்டில்போய்புகுந்து
போராஞ்சாமன்னர் புனந்திரரைதானழைத்து
சொக்கர்திருநீற்றை சுந்தரியும்அள்ளியிட்டு
சுவாமியார்தான்கொடுத்த திருநீற்றைஅள்ளியிட்டு
வாழ்த்திவிடைகொடுத்து வாளெடுத்துகைகொடுத்து
போய்வாருமென்று பொருந்தவிடைகொடுத்தாள்
விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமாளும்
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
தெத்துதெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
பாட்டனரண்மனையைத் தேடிவந்தாரிந்திரரும்

புனந்திரன் பாட்டன்மார் அரண்மனைவருகிறது.

ஆறுயிரவர் அணிதிரளார்முன்னேவந்து
பூவும்புதுமலரும் பொன்னறுகுஅட்சதையும்
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருந்தான்வார்த்து
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
ஆறுயிரவர்க்கும் அடிவணங்கிதெண்டனிட்டான்
தெண்டனிட்டயிந்திரனைக் கண்டந்தபாண்டியர்கள்
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
திரேகம்குளிர்ந்து இருதோளும்பூரித்து
மனதுமகிழ்வாக மைந்தரைவாழ்த்தலுற்றார்
வாழ்வீர்வளர்வீர் வாழ்ந்திருப்பீறுத்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீராசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போல கலங்காதரசாள்வீர்

ஐவரையரும் ஆழிவுசந்தாரும்
வேந்தர்பெருமாளும் வெளிமண்டபத்தில்வீற்றிருந்து
உடையாருங்கூட வுடனனமண்டபத்தில்
எல்லவரும்வந்திருந்து என்னைவரவழைத்தார்
என்னைவரவழைத்து எனக்கிட்டார்கட்டளைகள்
போப்பாரப்பா பெரியப்பா தங்களுக்கு
விடையருளவிட்டார் வீரபெரும்புலிகள்
தோரணையானையாம் தூதுரைக்கப்போறேன்
துன்னிலங்கண்ணனுன் தூதுரைத்துவாரேனையா
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்
ஆருயிரவர் அணிதிரலார்தான்கேட்டு

புனந்திரனைப்பற்றிபாண்டியர்கள் பரதவிக்கிறது.

சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
காராசங்காய்ச்சி நடுச்செவியில்விட்டாற்போல்
போரஞ்சாமன்னர் புனந்திரற்குயேதுசொல்வார்
அறிவீர்தெறிவீர் அடியேன்குடிவணங்க
அடியேன்குடிவணங்க வந்துதித்தஆணழகா
மன்னுவுன்பூமுடிக்க வாட்டங்கள்வந்ததானல்
நாங்களனைவோரும் நாடாளுங்கன்னியரும்
ஆளும்அரசும் அனலிலேபோய்விடுவோம்
போபோபுனந்திரரே போகாதேயென்றுரைத்தார்
அப்போபுனந்திரரும் அவ்வார்த்தையேதுசொல்வார்
ஐவரையற்கும் ஆழிவுசந்தார்க்கும்
அவர்க்கேதெரியாது வுமக்குதெரியுமோதான்
போகவிடைதாரும் போய்வாரேன்தூதுக்கென்றான்
ஆருயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
மைந்தாபுனந்திரற்கு மறுவார்த்தையேதுசொல்வார்
ஐவரும்தேவியரும் ஆரணியம்போனபின்பு
மன்னவரும்தேவியரும் வெண்காடுறைந்தபின்பு
காவலரும்தேவியருங் காடுறைந்தபோனபின்பு
உனக்கென்னகுறைசெய்து வைத்தோமிந்திராசாவே
ஏதுகுறைசெய்துவைத்தோம் எங்களிருகண்மணியே
மதுரையறுகாதம் வாழ்மதுரைமுக்காதம்
பொய்கையறுகாதம் பூமதுரைமுக்காதம்
மதுரையன்பத்தறுகாதம் ஆளவென்றுபட்டங்கட்டி
முத்தருழ்நன்னாடு முழுதிலுஉன்னுதென்று
பட்டணத்திலுண்டான படைமன்னர்உன்னுதென்று
பாசத்திளவரையர் பறைகொண்டுசாத்திவைத்தோம்
பாசத்திளவரையர் பட்டந்தரிப்பித்தோம்

பச்சோலைப்பெண்களிலே பத்துநூறுயிரமாம்
அத்தனையுந்தான்கொடுத்தார் ஆனந்தமாபனுக்கு
பொன்னுமலைநாடாளு மன்னுவுக்கேதுசொல்வார்
பெண்பெருமான்பெற்றெடுத்தப் பிள்ளைபுனத்திரனார்
தாமன்முடியான தனித்தூதுபோகாதே
ஆளும்அரசு அடங்கலுந்தான்கூடி
கூடவேநீர்போய் குணப்படுத்திவாருமென்றார்
மைந்தர்புனத்திரனை வரவழைத்துவாருமென்றார்
கோசவளநாட்டானைக் கூட்டிவந்துசேருமென்றார்
பொன்னுமலைநாடாளும் அன்னுவுந்தான்கேட்டு
அருளாருளுமென்னையா அப்படிக்கேயாகுமென்று
சொல்லப்பெற்றேனென்று சுருக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றோமென்றுசொல்லிக் கும்பிட்டெழுந்திருந்தார்

புனத்திரன்விடைபெற்றுக்கொண்டுபோகிறது.

போறஞ்சாமன்னர் புனத்திராசருக்கு
போகவிடைகொடுத்தார் போர்விசையன்பாண்டியர்கள்
போய்வாருமென்று பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமானும்
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
கோசவளநாட்டான் கொலுக்கூடம்வந்தமர்ந்தான்
இவளிப்படியாக யிருக்கின்றவேளையிலே
பொன்னுமலைநாடாளும் அன்னுவெழுந்திருந்து
மதுரைப்பெருந்தெருவில் மண்டபத்தில்வந்திறங்கி
அங்குமொருதூதுவரை ஆணழகர்தானழைத்தார்
தூதுவரும்வந்து தொழுதிரங்கிதெண்டனிட்டு
தெண்டனிட்டமன்னன் திரும்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுது
என்னையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றார்
உன்னையழைத்தது ஒன்றுங்குறைவுமில்லை
பறையறையுமன்னவனை சாம்புவனை கூப்பிடென்றார்
தோட்டியைத்தானழைத்து வாருமென்றார்மன்னவனும்
அருளாருளுமென்னையா அப்படிக்கேயாகுமென்று
சொல்லப்பெற்றேனென்று சுருக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றேனென்றுசொல்லிக் குமபிட்டெழுந்திருந்து
வெட்டியுமோரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியுமோரடியாய்ப் பற்றியவன்நடந்து
தோட்டியருகில்வந்து தூதுவனுமேதுசொல்வான்
பொன்னுமலைநாடாளும் அன்னுவுந்தானழைத்தா

ஆனைகாழியிப்போதே பறைத்துவையென்றுசொன்னார்
வந்தாலேயாச்சுது வாராமல்நீயிருந்தால்
வாராமல்நீயிருந்தால் வல்லுயிரைவாங்கிடுவோம்
இப்பதைபனைகாழிகைக்குள் நீவருகவென்றுசொன்னார்
பறையறையுமன்னவனும் சாம்புவனும்தான்கேட்டு
நெஞ்சுதகலங்கித் திடுக்கிட்டுப்பயமறந்து
மன்னன்மனதிரங்கி வார்த்தைகளேதுசொல்வான்
என்னாலேயேதுகுற்ற மெனக்கறியச்சொல்லுமென்றான்
சொல்லுமையாசுவாமியென்று தூதுவனைத்தெண்டனிட்டான்
அப்போதுதூதுவனும் ஆணழகனேதுசொல்வான்
ராசாக்கள்காரியங்கள் நமக்குவெளிப்படுமோ
சுஸ்திரியர்காரியங்கள் கலக்கம்வெளிப்படுமோ
மந்திரிகள்காரியங்கள் மருமம்வெளிப்படுமோ
தொடர்ந்துநீவாடாவென்று யெழுந்துநடக்கலுற்றார்
தூதுவனைச்சாம்புவனும் துரிதமுடனேடிவந்து
பொன்னுமணிகோடாருடம் அண்ணர்க்கெதிரில்வந்து
பறையறையும்சாம்புவனும் பார்மன்னனேதுசெய்தான்
தூரநின்று தொழுதிரங்கித்தெண்டனிட்டு
தெண்டனிட்டமன்னன் திரும்பவெழுந்திருந்து
சொந்திரபின்னை முடிமேலேகைதொழுதான்
என்னையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றான்
பொக்குமணிகோடாருடம் அண்ணனுமேதுசொல்வான்

சாம்புவனை பறையறையும் உத்திரவு கொடுத்தது.

பெண்பெற்றெடுத்த பிள்ளைபுனந்திரனார்
தாமமுடியான் தனித்தூதுபோகாதே
ஆறும்அரசும் அடங்கலும்பயணமென்று
சேனைப்படைத்தலைவர் திரள்வேந்தர்பயணமென்று
ஆனைப்படைத்தலைவர் அடங்கலும்வருகவென்று
குதிரைப்படைத்தலைவர் கொற்றவர்வருகவென்று
வருகவென்றுசொல்லித் தெரியப்பறையறையும்
வாராமலேயவர்களிருந்துவிட்டாராமானால்
வருத்தமேற்கே உயிர்க்கழுவுபோட்டிடுவோம்
காமமணிகட்டி நரிக்கிடுவோம்பூமுடியை
கத்தைகோடாரக்கரிந்து நகரிவிட்டெட்டிடுவோம்
மூக்கைகோடாலூக்கரிந்து முன்முடியைச்சங்கரிப்போம்
அப்படிக்கேசொல்லி பறையும்பறையோசை
என்றுமவருரைக்க யேதுசொல்வார்சாம்புவனும்
அருளருளுமென்னையா அப்படியேயாகுமென்று
சொல்லைப்பெற்றேனென்று கும்பிட்டெழுந்திருந்து
உறப்பெற்றேனென்று கும்பிட்டெழுந்திருந்து
பொக்குமணிகோடாருடம் அண்ணனெழுந்திருந்து

வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
மாநகரமாளும் மகாராசன்மாளிசென்று
கோசவளநாட்டான் கொலுவில்வந்துவீற்றிருந்தான்
இப்படியாக யிவனிருக்கும்வேளையிலே

சாம்புவன் பறையறைகின்றது.

பறையறையுமன்னவர்கள் பார்மன்னரோடிவந்து
வெள்ளியால்பறைகொண்டு வெங்கலத்தால்கோலூணி
முத்தாலேபறைகொண்டு முழுவயிரத்தால்கோலூணி
ஆனைமேலேவைத்து அலங்காரம்போட்டலுற்றான்
மதுரைப்பெருந்தெருவில் நடுவீதிவந்துசென்று
அடித்தார்பறையோசை அண்டங்கிடுகிடென்ன
வெள்ளிமலையாள்பேரிகை விருதுமுழக்கிவிட்டார்
தங்கத்தால்பேரிகை தானேமுழக்கிவிட்டார்
என்னவென்றுசொல்லி பறையலுற்றார்பேரிகை
பெண்பெருமாள்பெற்றெடுத்த பிள்ளைபுலந்திரனார்.
தாமமுடியான் தனித்தூதுபோகாதே
ஆளும்அரசும் அடங்கலும்வாருமென்று
ஆனைபரிசேனை யடங்கலும்வாருமென்று
குதிரைபடைத்தலைவர் கொற்றவர்வருகவென்று
சேனைப்படைத்தலைவர் சேர்ந்துவருகவென்று
வரவேண்டுமென்று விருதுபறையறைந்தான்
வாராமல்நீங்கள் இருந்தீர்களாமானால்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளுத்திரவு
ஊருக்குமேற்கே உயிர்க்கழுவேபோட்டிடுவோம்
தாமமுடிகழட்டி தரித்திடுவோம்பூமுடியை
மூக்கோடேநாக்கரிந்து முன்முடியைச்சங்கரிப்போம்
அப்படிக்கேயென்று அறைந்தார்பறையோசை
அறைந்தபறையோசை அங்கரிதான்கேட்டு

சேனைகளெல்லாம் பயப்பட்டு புலந்திரனிடம் சேருகிறது.

சிலமன்னரெல்லாம் திடுக்கிட்டெழுந்திருந்து
பலமன்னரெல்லாம் பயந்தெழுந்திருந்து
குலமன்னரெல்லாம் குலைநடுங்கவோடிவந்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
மனதுகலங்கி மறுவார்த்தைசொல்லாமல்
முன்னேமுராசெடுத்து முன்றானைமேற்போட்டார்
பின்னேமுராசெடுத்து பின்றானைமேற்போட்டார்
சிலமன்னரெல்லோரும் தேரின்மேலேறினார்
குலமன்னரெல்லோரும் குதிரையின்மேலேறினார்

பலமன்னரெல்லாரும் பல்லக்கிலேறினார்
ஆனதொரு மந்திரிகளானையின்மேலேறினார்
பட்டர்புலவர் பதினெட்டுமந்திரிகள்
தூரத்துராசாக்கள் தொடர்ந்துவந்தமந்திரிகள்
காதத்துராசாக்கள் கடந்துவந்தமந்திரிகள்
சிங்கங்கரடிபுலி சேரமுழங்கிவர
யாளிகரடிபுலி யருகில்முழங்கிவர
சின்னத்தொனிமுழங்க சிலமன்னர்வாரார்கள்
முத்துக்குடைகவிய முடிமன்னர்வாரார்கள்
பவளக்குடைகவிய பலமன்னர்வாரார்கள்
தங்கக்குடைகவிய தானடந்துவாரார்கள்
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருக்களெல்லாந்தாண்டி
புலிமுகவாசலிலே வந்துமிகநின்றார்கள்
அங்கொருதூதர் அருகாகவந்துநின்று
கோசலநாட்டான் கொலுவுக்குமுன்னேவந்து
போரஞ்சாமன்னர் புணர்ந்திரற்குயேதுசொல்வான்

சேனைவந்தசமாச்சாரம் தூதன்சொல்லுகிறது.

சேனையும்வந்ததென்று திசைநோக்கிதெண்டனிட்டான்
படைமன்னர்வந்தாரென்று பார்நோக்கிதெண்டனிட்டான்
போரஞ்சாமன்னர் புணர்ந்திரருந்தான்கேட்டு
மருட்டமுடியசைத்தி மன்னவனுந்தான்பார்த்து
யானைப்பணிக்கர்களை ஓடியழையுமென்றான்
அருளருளுமென்னையா அப்படிக்கேயாகுதென்று
ஓடியழைத்தான் ஒருநொடியில்தூதுவனும்
யானைப்பணிக்கர்களில் ஆறுநூறாயிரம்பேர்
யானைப்பணிக்கர்களில் அதிகாரிதானெழுந்து
ஏதுக்கழைத்தார்காண் என்னுடையராசாவும்
தூதுவனுமப்போது துரிதமுடனேதுசொல்வான்
ராசாக்கள்காரியங்கள் நமக்குவெளிப்படுமோ
க்ஷத்திரியர்காரியங்கள் கலக்கம்வெளிப்படுமோ
மந்திரிகள்காரியங்கள் மருமம்வெளிப்படுமோ
என்னமோயேதோ யெனக்கொன்றுந்தெரியாது
தொடர்ந்துவருகவென்று யெழுந்துநடக்கலுற்றான்

யானைப்பணிக்கர்கள் இந்திரனைக்காணுகிறது.

யானைப்பணிக்கர்கள் ஆறுநூறாயிரம்பேர்
அத்தனைபேர்களும் அவனருகிலோடிவந்தார்

தூதுடன்கூட தொடர்ந்துவழிநடந்தார்
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
கோசவளநாட்டான் கொலுவுக்குமுன்னேவந்து
போரஞ்சாமன்னர் புனந்திராசருக்கு
யானைப்பணிக்கரெல்லாம் அடிவணங்கிதெண்டனிட்டார்
தெண்டனிட்டமன்னர் திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதார்
கைதொழுதராசருக்கு கட்டழகரேதுசொல்வார்
எங்களையழைத்தபணி யேதுகருமமென்றார்
உங்களையழைத்தது வொன்றுங்குறைவுமில்லை
அத்திப்புரம்போக யானைகொண்டுவாருமென்றார்
யானைப்பணிக்கர் எடங்கலுமேதுசொல்வார்
எவ்வானைகொண்டுவர வெங்களிளவரசே
மேகனுமின்னனே வெளிநாடங்கொண்டவனே
கொம்பில்பெரியவனே கொளம்புளிசையுள்ளவனே
தில்லைப்பதியோ சிவசாமிசுந்தரனே
கற்பகவல்லி கதித்தமதகலிரோ
பொற்புள்ளகொம்பு நிகளமுடையவனே
ஒவ்வானைகொண்டுவர வெங்களிளவரசே
போரஞ்சாமன்னன் புனந்திருமேதுசொல்வார்
பாசுபதம்பெருபெற்ற பார்த்தனுடபோரமைந்த
ஆனைலழகுமன்னன் அருச்சுனனார்போரமைந்த
வில்லாளிப்பார்த்தன் விஜயனுடபோரமைந்த
அவ்வானையெந்தனுக்கு கொண்டுவரவேண்டுமென்றார்
யானைப்பணிக்கர் அடங்கலுந்தான்கேட்டு
ஐயாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னையாநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
ஆளப்பிறந்த அபிமனைப்பாடெழுந்து
முத்துமுடிதரித்த ராஜாவைத்தானெழுந்து
ஆரெல்லாமண்டி அனலண்டி தீயண்டி
கத்தியலமார்ந்து காட்டகத்தேபோயிருந்து
பிள்ளைபகையாலே பெருங்கோபங்கொண்டனுவும்
தன்னிழலைத்தான்பார்த்து தவித்துப்புலம்புறதும்
ஆள்வருவதைக்கண்டாலே அந்தமதயானை
தும்பிக்கையைதூக்கி சுழட்டிபெறிந்துவிடும்
அவ்வானைமுன்பாக அஞ்சுவோம்நாங்களையா
குலவானைமுன்போக கூசுவோம்நாங்களையா

தூதர் காட்டில்யானைக்குப் பயந்து இருந்துபோவோமென்றெண்ணித்து
தங்கள்பிள்ளைகள் பெண்ணுக்குக் கலியாணஞ்செய்கிறது.

வன்னிமரம்பிளந்து வாசல்நிலைப்பந்தலிட்டார்
ஈர்க்குப்பிளந்து இருகாதம்பந்தலிட்டார்
முத்துப்பிளந்து மூக்காதம்பந்தலிட்டார்
பவளத்தாலைக்காலநிறுத்தி பதின்காதம்பந்தலிட்டார்
கன்னியற்குங்காளையற்குங் கலியாணஞ்செய்துவிட்டார்
விருந்துகள் தானமைத்து வேடிக்கைப்பார்த்தார்கள்
அப்போதுமன்னவர்கள் ஆலோசனைசெய்தார்கள்
மதயானையைத்தான்பிடிக்க வனம்போய்த்திரும்புவோமோ
போயித்திரும்புவோமோ பிள்ளைமுகம்பார்ப்போமோ
மறித்துத்திரும்புவமோ மைந்தர்முகம்பார்ப்போமோ
சாவோம்பிழைப்போமோ வென்றுமனதிலெண்ணி
தங்கள் தங்கள்பெண்டுகளைத் தாவேந்தன் தானழைத்து
கொற்றப்போர்மன்னரெல்லாம் கோடிப்புடவையிட்டு
மற்றப்போர்மன்னரெல்லாம் மதயானைக்கைப்பிடிக்க
வாய்க்கரிசிகைப்பிடித்து வாரார்கள்மன்னரெல்லாம்
போசவிடைபெற்றுப் புறப்பட்டார்வீரரெல்லாம்
யானைப்பணிக்கர்களில் அதிகாரிமுன்னடக்க
குதிரைப்பணிக்கர்களில் கொற்றவர்கள்பின்னடக்க
சேனைப்படைத்தலைவர் சிலவீரர்பின்னேவர
தெக்குத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
அரண்மனைவீதிவிட்டு அங்காடிதான்தாண்டி
கடையுங்கடைத்தெருவுங் குமாரவீதிவிட்டு
தெருவும்பலதிசையும் தேரோடும்வீதிவிட்டு
மாலைமுடிபார்கள் மதுரைக்குப்பின்னுரைந்தார்
காடுகடந்து கரியமலைதாண்டி
ஆறுகளைத்தாண்டி அதிகவனந்தாண்டி
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
சிங்கம்உலாகொடுக்கும் செந்நாய்வனந்தாண்டி
கரடியுலாகொடுக்கும் கரடிவனந்தாண்டி
கணையாழிகைப்பிடித்து கட்டழகர்வாரார்கள்
வாய்வேகமாகவே வாரார்கள் தூதுவர்கள்
யானைபிடிப்பதற்கு வாரார்கள் தூதுவர்கள்

தூதர் காட்டில் யானையைத்தேடுகிறது.

யானையிருக்கிற அடர்ந்தவனம்வந்துவிட்டார்
யானையைத்தேடுகிறார் அப்பெரிய தூதுவர்கள்

செம்பொன்னாற்காளை திசைவிளங்கவூதினார்
அம்பொன்னாற்காளை அவனியெல்லாமூதினார்
பொன்னினாற்காளை [illegible]பாருந்தனின்றூதினார்
வருகவருகவென்றூதினார் காளைசின்னம்
ஊதினசின்னத்தொனி கேட்டு அவ்வானை
மகுடமுடியசக்தி மாத்தின்கீழ்ப[illegible]கொண்டு
ஆலோசனைசெய்கிறது அந்தமதயானை
அப்போது தூதுவர்கள் ஆறுலமுகரெல்லாம்
மாத்தைவிட்டுகீழிறங்கி மன்னவர்ஓடிவந்து
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருந்தானெடுத்து
கணையாழிமோதிரத்தைக் கட்டழகர்கைபிடித்து
யானையின்முன்னே வந்தார் அழகானதூதுவர்கள்
பன்னீரால்காலலம்பிப் பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுவென்றுதான்சொரிந்து
கணையாழிமோதிரத்தைக் காலுக்குமுன்னேவைத்து
முக்காலவலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டார்
நாற்காலவலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டார்
யானையின்பாதம் அடிவணங்கிதெண்டனிட்டார்
தெண்டனிட்டமன்னவர்கள் திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுது
பெண்பெருமாள்பெற்றெடுத்த பிள்ளைபுனந்திரனார்
தூதுரைக்கப்போவார்காண் சுந்தரப்பூமுடியான்
தாமமுடியான் தனித்துதுபோகாதே
ஐயாவருகவென்று அடிவணங்கிதெண்டனிட்டார்
தாங்கள்வருகவென்று தார்வேந்தர்தெண்டனிட்டார்

### யானை மதுரைக்குவருகிறது.

அப்போதுமதயானை அவர்களுக்குமேதுசொல்லும்
போவோம்மதிலிடிப்போம் பெண்சேனையும்பிடிப்போம்
நாலால்கடுத்தெளார் நூற்றொருவர்பூமுடியை
நூற்றொருவர்பூமுடியை நொறுங்கவடித்திடுவோம்
சாயாம்புமேனி சகுனிதலைபொடைப்போம்
தங்கைமணவாளன் தருதலையன்பூமுடியை
தருதலையன்பூமுடியைத் தடியாலடித்திடுவோம்
காஞ்சிநாடாளுங் கருணரிடபூமுடியை
என்றுமதயானை யெழுந்துநடந்தது
மடுவிலேபோயிறங்கி மஞ்சநீர்தானாடி
அசைந்துநடந்தது அப்பெரியகாட்டகத்தில்
சாய்ந்துநடந்தது சாயப்பெருமானை
கானகத்தைத்தாண்டி வருகிறதுதென்மதுரை
இருண்டவனைத்தாண்டி எலுமிச்சந்தோப்புவிட்டு

கருத்தவனந்தாண்டி கானகமுந்தாண்டி
ஓங்கிவளர்ந்தவொரு மூங்கில்வனந்தாண்டி
சிங்கமுடலாகொடுக்கும் செந்நாய்வனந்தாண்டி
கரடிஉலாகொடுக்கும் கருநாய்வனந்தாண்டி
வாழ்மதுரைராச்சியத்தில் வருகிறது அவ்வானை
தூதுவர்கள்முன்னும்பின்னுங் கூடவருகிறது
மதுரைப்பெருந்தெருவில் வீதியில்வருகையிலே

மதுரையில்ராசாக்கள் யானையைக்கண்டு திகில்படுகிறது.

மதுரையில்வாழுகின்ற மன்னவர்கள்கண்டார்கள்
சிலமன்னரெல்லோரும் திடுக்கிட்டெழுந்திருந்து
பலமன்னரெல்லோரும் பதைபதைத்தாரெழுந்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
நெஞ்சுலர்ந்துவரண்டு நித்திலங்குபூமுடியாள்
ஒருவர்க்கொருவர் உண்மையாய்ச்சொல்லிக்கொள்வார்
ஆனைசிறந்த அபிமரைப்பாடெழுந்து
ஆரெல்லாமண்டி பலலண்டிநீயண்டி
சத்தியல்மார்ந்து கானகத்தில்போயமர்ந்து
மனங்கொள்ளாக்கோபமுடன் இருக்கும்மதயானை
அந்தமதயானை யிந்தத்தெருவில்வந்தால்
ஆர்கள்பூமுடிக்கு அழும்புவந்துநேர்ந்திடுமோ
என்றுமனதிலெண்ணி யெல்லவருமோடிவந்து
கோட்டையடித்திடுவார் கொத்தளங்கள்சாத்திடுவார்
மாளிபடைத்திடுவார் மண்டபங்கள்சாத்திடுவார்
ஏக்கம்பிடித்து யிருப்பார்சிலபேர்கள்
மனதுபயமெடுத்து மன்னரிருந்திடுவார்
இப்படியாக யிருக்கின்றவேளையிலே
அப்போதுயானை அசைந்துநடைநடந்து
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவந்து
புலிமுகவாசல்வந்து புகுந்துநின்றவ்வானை
அரண்மனைவாசலிலே நின்றது அவ்வானை
அங்கொருதூதன் ஆணழகனோடிவந்து
போரஞ்சாமன்னர் புனந்திரற்குமுன்னேவந்து

புனந்திரற்கு சேதியுரைக்கிறது.

கன்னியாஸ்திரீமோதிரத்தை கழட்டியவன்முன்னேவைத்து
யானைப்பிடிக்க அடர்ந்தவனம்போனதுவும்

போனதுவும்வந்ததுவும் புதுமைகளுள்ளதெல்லாம்
ஆனையைக்கண்டு அழைத்தோடிவந்ததுவும்
இத்தனையுஞ்சொல்லி யடிவணங்கிதெண்டனிட்டார்
யானையும்வந்ததென்று யடிவணங்கிதெண்டனிட்டார்
போரஞ்சாமன்னர் புனந்திரனுந்தான்கேட்டு
துள்ளியெழுந்தான் துவண்டமலரெடுத்தான்
பூவும்புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
அத்தனையுங்கண்டுமல்லோ ஆனைமுகனிந்திரனும்
யானையின் முன்னேவந்து ஆனைமுகனிந்திரனும்
பன்னீரால்காலலம்பிப் பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
மூக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
யானையின்பாதமடிவணங்கிதெண்டனிட்டான்
அப்போதுயானையது ஆனைமுகர்க்கேதுசொல்லும்
உந்தனுக்கோதுக்கமப்பா உத்தமனார்வீரியனே
எந்தனுக்குதுக்கம் இருக்குதெழுந்திரென்று
துக்கமாய்த்தானிருந்து தும்பிக்கைதானெடுத்து
இந்திராசாவை யெடுத்துநிறுத்தியது

### யானைபுனந்திரற்கு தேறுதல் சொல்லுகிறது.

போரஞ்சாமன்னர் புனந்திரனுந்தான்பார்த்து
அங்குமொருதூதுவனை ஆனைமுகன்தானழைத்து
செந்நெல்பயறு சிறுபயறுதேங்காயும்
கொள்ளும்உளுந்துகளும் கொப்பரைத்தேங்காய்களும்
கூட்டிக்கவளம் கொடுமென்றான்யானைக்கு
அப்போதுயானை ஆனைமுகர்க்கேதுரைக்கும்
ஆளப்பிறந்த அபிமருயிர்வாங்கி
கொன்றுபழிசெய்து கொலைசெய்துபோட்டவரை
அவரைக்கொன்றுபழிவாங்கி குடல்பிடுங்கித்தோள்போட்டு
அத்திபுரமுழுதும் அடங்கலுந்தானிடித்து
நமதுசப்தம் முடிந்ததின்பிற்பாடு
அன்றுகவளம் எடுப்பேன்காணானைமுகா

### யானைசப்தமிடவும்புனந்திரன் அத்திப்புரத்துக்குத் தூதுக்குச்செல்லுகிறது.

என்றுமதுவுரைத்து இருந்ததுஅவ்வானை
அப்போதுஇந்திரனும் ஆனைமுகர்தான்கேட்டு
படிபடியென்றான் படிந்ததுஅவ்வானை
முக்கம்பந்தட்டி முதுகின்மேல்காலைவைத்து

மதகசப்பட்டி மதவானையேறினன்
அம்மனுந்தானும் அழகானையேறினார்
மாமாவுந்தானும் மதவானையேறினார்
வந்தவர்பேர்களெல்லாம் வாகனங்களேறுமென்றார்
கரியானையேறினார் தன்னொத்தராசாக்கள்
பக்கானையேறினார் பத்துலட்சம்ராசாக்கள்
அறுகானையேறினார் அஞ்சுலட்சம்ராசாக்கள்
முன்னானையேறினார் மூனுலட்சம்ராசாக்கள்
இன்னஞ்சிலமன்னவர்க ளெழுந்தார்கள் துருசாக
முன்னேமுரசெடுத்து முன்னானைமேல்போட்டார்
பின்னேமுரசெடுத்து பின்னானைமேல்போட்டார்
சிலமன்னரெல்லோரும் தேரின்மேலேறினார்
பலமன்னரெல்லோரும் பல்லக்கிலேறினார்
குலமன்னரெல்லோரும் குதிரைமேலேறினார்
அழகானமன்னரெல்லாம் ஆனையின்மேலேறினார்
உத்தமனார்வீரியர்கள் ஒட்டையின்மேலேறினார்
பட்டர்புலவர் பதினெட்டுமந்திரிகள்
சித்தர்சகசாரணர் சேனைபேர்மந்திரிகள்
இன்னஞ்சிலமன்னவர்க ளெங்கும்நிறைந்தார்கள்
சிங்கக்கரடிபுலி சேர்ந்துமுழங்கிவர
இப்படியாய்ச்சேனைக ளேறினார்வாகனத்தில்
ஏறினபோதே யெடுத்தார்நெடுங்குடைகள்
முத்துக்குடைகள் முழுமாணிக்கபொற்குடைகள்
தங்கக்குடையாம் தவளநெடுங்குடையாம்
பச்சைக்குடையாம் பவளநெடுங்குடையாம்
வச்சிரக்குடையாம் வைடூரியநற்குடையாம்
எங்கும்நிறைந்தார்க ளெண்ணாயிரங்குடைகள்
சுத்திநிறைந்தார்கள் சூரியனைக்காணமல்
பக்கம்நிறைந்தார்கள் பகவானைக்கண்மறைக்க
பச்சைக்குடைகவிய பார்மன்னர்தேர்நடக்க
முத்துக்குடைகவிய முடிமன்னர்தேர்நடக்க
தங்கக்குடைகவிய தார்வேந்தர்தேர்நடக்க
ரத்தினக்குடைகவிய ராஜர்கள்தேர்நடக்க
பொன்னின்குடைகவிய பூபாலர்தேர்நடக்க
சத்தக்குடைநடுவில் உத்தமனார்வாராரே
புச்சக்கிரக்குடைநடுவில் புணந்திரனார்வாராரே
யானைபசைத்துவர அடல்வீரர்கொக்கரிக்க
சேனைபசைந்துவர திரல்மன்னர்கொக்கரிக்க
குதிரைபணமாலிக்க கோடிமன்னர்சத்தமிட

யானையுஞ்சேனைகளும் அசைந்துவழிநடந்தார்
அவ்வீதிவீதி கடந்தாரழிங்க
அவ்வீதிதாண்டி மறுவீதிபோம்போது

புனந்திரன் அல்லிவீதி போகிறது.

அல்லியம்மாவீதியிலே யானைவருகிறது
வருகிறவேளையிலே வாத்தியங்கள் ஊதுகிறார்
ஊதினான் சின்னம் உலகேழுந்தானதிர
செம்பொன்னாற்காளை பொருந்துவின்றூதினார்
ஊதினசின்னத்தொனி வுத்தமியாள்கேட்டு
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
தனக்குகவரியிடும் தாதியர்க்குயேதுசொல்வாள்
மாத்தான்படையோ மறுமன்னர் தன்படையோ
எதிராளிதன்படையோ யிவ்வீதிவாரார்கள்
சரியொத்தராசாக்கள் சண்டைக்குவாரார்கள்
என்னைகெலிக்கவென்று வாராரோநானறியேன்
மதுரைகெலிக்கவென்று வழக்காடவாராரோ
யார்வரவுதாதி அறிந்தோடிவாருமென்றாள்

அல்லிதாதிகளைவிட்டுப் பார்க்கச்சொல்லுகிறது.

தனக்குகவரியிடுந் தாதியெழுந்திருந்து
திடுக்கென்றெழுந்திருந்து திமிதிமியென்றோடலுற்றாள்
வாசற்படியில்வந்து மங்கையரும்பார்க்கலுற்றார்
போரஞ்சாமன்னர் புனந்திராசாவும்
புனந்திராசாவும் போரெழுதிபண்ணவும்
மதுரைக்குடிபடைகள் மண்டலத்துராசர்களும்
தென்மதுரைகுடிபடைகள் சேனைபேர்மந்திரியும்
கண்டாளேதாதியவள் கடுகெனவேவோடிவந்து
அல்லிப்பெருமாட்கு அடிவணங்கிதெண்டனிட்டு

தாதி அல்லிக்குச்சேதிசொல்லுகிறது.

போரஞ்சாமன்னர் புனந்திராசாவும்
பொன்னுமல்லநாடாளும் அண்ணவுடனைக
ஊதுரைக்கவாரார்கள் சந்திராப்பூமுடியாள்
பிள்ளைபடையெடுத்து வருகிறோமென்றுசொன்னான்
பூரித்திருதோளும் பொன்னைபாமின்ன
கிரோகக்குளிர்ந்து யிருதோளும்பூரித்து

### அல்லிபிள்ளையைக்காண உப்பரிகையேறிப்பார்க்கிறது.

மைந்தனைக்காணவென்று மாதாவெழுந்திருந்து
ஏழாநிலையும் மெழுநிலையும்மேலேறி
மேலாங்கதவை விடுகதவைத்தான் திறந்து
பவளகோணிவாசல் தூரந்தர பத்தினியும்
அரிப்படியைக் கணக்கமிதித்தேறி
பவளப்படிமிதித்துப் பத்தினியாள்பார்க்கலுற்றாள்
போரஞ்சாமன்னர் புணந்திரனார்சீர்வடிவை
கண்டாளே புத்திரனைக் கட்டழகி அல்லியரும்
அருகிருக்கும்தாதியர்க்கு அல்லியவிளக்குசொல்வாள்
அரையில்சொருகழகும் ஐம்பொன்னுற்சீரழகும்
கத்திச்சொருகழகும் கத்திகட்டியுள்மருங்கும்
கச்சைகட்டும்உள்மருங்கு கனிவாயின்பேரழகும்
தக்கபுகழுடைய தருமருடபேரழகும்
வெற்றிமதயானை வீமருடகால்நடையும்
காண்டாவனமெரித்த காளையுடகைவீச்சும்
காமரூபமுடையான் நகுலநடையழகும்
காமரூபமுடையான் சகாதேவன்கைவீச்சும்
மஞ்சிபோடாரும் கருணரிடபேரொளியும்
ஆறுபேர்தன்னழகை பெற்றுவந்தானழகன்
கண்ணோணச்சல்கண்ணேச்சல் பாண்டவபுத்திரற்கு

### புணந்திரற்கு ஆலாத்திக்காட்டுகிறது.

அருச்சுனனார்புத்திரற்கு ஆலாத்திகாட்டுமென்றார்
தனஞ்சயனபுத்திரற்கு திருஷ்டியைக்காட்டுமென்றார்
அன்றுமொருதாதி அறிவுடையாளோடிவந்து
இன்றுமுறையென்னுதென்று எழுந்தாளே தாதியவள்
முத்தினாலாத்தி முப்பத்துநூறாயிரமாம்
பவளத்தாலாத்தி பத்துநூறாயிரமாம்
கற்பூர ஆலாத்திக் காட்டினாராயிரம்பேர்
திருஷ்டிகழித்து தெருவெங்கும்விட்டெறிந்து
ஆலாத்திக்காட்டி அணியிழைமார்வீற்றிருந்தார்
போரஞ்சாமன்னர் புணந்திரராசாவும்
அவ்வீதிவீதி நடந்தாரழகாக
மற்றுமொருவீதியிலே வாராரேயிந்திரரும்

### புணந்திரன் பாண்டவர்கள் வீதிவருகிறது.

ஆயிரவர் அணிதிரளார்தான்கேட்டு
ஆரப்பதக்கமும் அதிப்பதக்கந்தன்னுடனே
மாப்பதக்கம் பருத்தமுத்துச்சாவடமும்

ஏலலவுங்கமும் இன்பக்களிப்பாக்கும்
காச்சாகளிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
ஆரங்கிபாக்குகளும் மோரங்கிவெற்றிலையும்
சாதிப்பெருங்கடலும் சங்குசுட்டசுண்ணும்பும்
வச்சிரதட்டுகளில் வகைவகையாய்த்தானெடுத்து
ஆறுயிரவர்களும் அங்கெவேபோடிவந்து
போரஞ்சாமன்னர் புனக்திரற்குமுன்னேவந்து
இந்தாருமென்று எடுத்தவர்கைகொடுத்து
போரஞ்சாமன்னர் புனக்திரருந்தானபார்த்து
மகுடமுடியசைக்கி மன்னவனுமேதுசொல்வான்
ஆழிதடங்கையமர்த்தி ஆனமுகன்போய்கட்டுந்தான்
மாலைமுடியானும் மதுரைக்குப்பின்னுரைத்தான்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனை தாண்டி அதிகவனந்தான் தாண்டி
சில்லென்றகாடுஞ் செடியும்வனந்தாண்டி
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
அங்குமொருபூங்காவைக் கண்டுமேந்தவானமுகன்
ஆச்சாவுந்தேக்கும் அழலோங்குபாதரியும்
சண்பகமுல்லைகளும் சேர்ந்ததொருபாதிரியும்
பாதரிமுல்லைப் பருத்ததொருசண்பகமும்
சிறுமல்லிகுடமல்லி சேர்ந்ததொருசண்பகமும்
மல்லிகைமுல்லை மருக்கொழுந்துசண்பகமும்
இத்தனையும்பூரித்து சொரியும்அழகாக
மாத்தில்புறவும் மயிலும்விளையாடும்
கோவில்புறவும் குயிலும்விளையாடும்
அன்னமுந்தாராவும் ஆசைந்துகிழல்காட்டும்
சாரையும்சர்ப்பமும் சற்றேயிரைழந்துவிடும்
புலியும்பசுவும் ஒருதுறையில்நீர்குடிக்கும்
போரஞ்சாமன்னர் புனக்திரரும்தான்பார்த்து
யாருடையகாவிதென்றான் அல்லித்திருமகனும்
அங்கிருந்ததூதுவர்கள் ஆனமுகற்கேதுசொல்வார்
தக்கப்புகழுடைய தருமருடபூங்காவு

தருமர்பூங்காவை இந்திரன்காணுகிறது.

பருவமதயானை பஞ்சவர்களைவாது
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆளுகிறபூங்காவு
போரஞ்சாமன்னன் புனக்திரருந்தான்பார்த்து
இப்பெரியகாவும் எழில்பெரியமாதினமும்
சொற்பெரியகாவும் தோள்பெரியமண்டபமும்
இத்தனையுமிங்கிருக்க என்போனீர்பஞ்சவர்கள்

மண்டபங்களிலிருக்க மன்னர்கள் காடுவைந்தார்
அன்றுமனங்கலங்கி ஏங்கிமனந்தளர்ந்து
இருந்துமன்னன் இருக்கண்ணீல்முத்துதிர்த்தான்
பொன்னுமல்லாட்டமும் அவ்வளவுமேமாறுவார்
ஏனகாணுமன்னன் இந்தமதிவுந்தனுக்கு
வந்துதருமம் முடியுங்காண்மன்னவனே
என்றுமனந்தேறி யிருக்கின்றவேளையிலே
போரஞ்சாமன்னன் புனந்திரனுமேதுசொல்வார்
பானைவிட்டுகீழிறங்கி ஆனந்தவாழ்மார்பன்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனங்கள்விட்டிறங்கி
இன்றைக்குமத்தியானம் இங்கேவிடும்மென்றார்
பொன்னிறக்கூடாரம் போட்டார்புனந்திரனும்
வன்னவாசனைக்கூடாரம் மன்னவர்க்கும்போட்டார்கள்
ஆலயங்கள்போட்டார்கள் வந்தவந்தமன்னருக்கு
ஆசனத்தின்மேலேறி ஆனழகன்வீற்றிருந்தான்
பட்டர்புலவர் பதினெட்டுமந்திரிகள்
கட்டகனொனுமிருந்தார் கொற்றப்புவீரியர்கள்
சரியப்பிகொனுமிருந்தார் கனெத்தராசாக்கள்
பட்டப்புலவர்கள் பாடத்தொடங்கினர்
தருமர்வனம்பாடித் தம்பிமார்சீர்பாடி
வீமர்வனம்பாடி விசயனார்சீர்பாடி
காண்டாவனமெரித்த காளைபுகழ்பாடி
நாமன்முடியான் நகுலனதுபேர்முடியான்
தாமன்முடியான் சகாதேவன்சீர்பாடி
போரஞ்சாமன்னர் புனந்திரனார்பேர்பாடி
வந்தபேர்களின்மேல் பாடினர்மன்னவர்கள்
அப்போதுவிந்திரனார் ஆனழகன்தான்பார்த்து
பட்டர்புலவர் பாடினபேருக்கும்
ஆடையும்பொன்னும் அளித்துஅலைதாரன்
அந்தவந்தபேர்களெல்லாம் வாகனங்களேறுமென்றார்
படிபடியென்றான் படிந்ததுஅவ்வானை
முகக்கம்பமதட்டி முதுகின்மேல்காலைவைத்து
மத்தகத்தைத்தட்டி மதயானையேறினன்
அம்மானும்தானும் அழகானையேறினன்
மாதாவுந்தானும் மதவானையேறினர்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனஞ்சென்றேறினர்
அக்காவும்மகாவும் கடந்தாரழகாக
மற்றுமொருபூங்காவும் வாராகள்மன்னவர்கள்
அக்காவுந்தன்புதுமை ஆனழகன்கண்டானே

## திரியோதிரன் பூங்காவை புனந்திரன் கண்டழிக்கிறது.

ஆச்சாவுந்தேக்கும் அனலோங்கும்பாதரியும்
பாதரிமுல்லைப் பருத்தயிருவாட்சி
இருவாட்சிசண்பகமு மிருபுராமுமகஸ்தூரி
மல்லிகைமுல்லை மருக்கொழுந்தயிருவாட்சி
சண்பகமும்முல்லைகளாம் சேர்ந்தயிருவாட்சி
எங்கும்நிறைந்திருக்கும் இருவாட்சிசண்பகமும்
மருவும்மருக்கொழுந்தும் வனமெல்லாம்பூர்த்திருக்கும்
வேம்பும்அரசுமங்கே விஸ்தாரம்பூர்த்திருக்கும்
போரஞ்சாமன்னர் புனந்திரன் தான்பார்த்து
ஆருதுபூங்காவென்றார் அல்லித்திருமகனும்
அங்கிருக்குமன்னர் அரையர் துரைகளெல்லாம்
கேட்டபுனந்திரற்கு கேள்விசொல்லமாட்டாதே
நின்றபுனந்திரற்கு நீதிசொல்லமாட்டாதே
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நித்திலங்கும்பூமுடியார்
பச்சைமுகங்கருகி பால்முகம்வேறுபட்டு
தேசத்தையாளும் திரியோதிரனகாவிதென்றார்
உங்கள்பெரியப்பாபூங்காவு யென்றார்கள்மன்னவர்கள்
ஐயருடகாவிதென்ன ஆணழகன்கேட்டு
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நித்திலங்குபூமுடியார்
பச்சைமுகங்கருகி பால்முகம்வேறுபட்டு
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேறி
சித்துடம்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
யானைவிட்டுக்கீழிறங்கி யானந்தவாழ்மார்பன்
பூமரத்தைசார்ந்துக்கொண்டு நின்றார்புனந்திரரும்
அங்கிருக்குந்தூதுவரை ஆணழகன் தானழைத்து
ஆச்சாவுந்தேக்கும் அழலெலங்கும்பாதரியும்
வேம்புரதமங்கே வெட்டிப்போராக்குமென்றார்
பூமரத்தைவேர்பிடுங்கி போடுமென்றார்ஓர்புரமாய்
மாமரத்தைவேர்பிடுங்கி மரத்தோடேசாடுமென்றான்
அப்போதேதூதுவர்கள் ஆணழகர்தானெழுந்து
அவ்வளவுபோதுமென்று ஆணழகர்தூதரெல்லாம்
வேம்புமரசுமங்கே வெட்டிப்போரிட்டார்கள்
பூமரத்தைவேர்பிடுங்கி சாடினார்புண்ணியர்கள்
மாமரத்தைவேர்பிடுங்கி மடித்தார்ஒருபுறமாய்
பத்துப்பனைமரத்தை யொன்றாய்ப்பிடுங்கிடுவார்
எட்டுப்பனைமரத்தை யிருதுண்டாய்ப்போட்டிடுவார்
தென்னமரங்களெல்லாந் திரிகியெறிந்திடுவார்
இப்படியாக அழித்தார்வனங்களெல்லாம்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்பார்த்து

போரஞ்சாமன்னர் புனந்திரருமேதுசொல்வார்
தேனல்லோதாரன் திரையெடுத்துதான்முடிந்து
சாய்ப்புமேனியனுஞ் சாத்திரங்கள் தான்பார்த்து
மேகமலைபோல மெள்ளநடந்தசைந்து
பணிபணியென்றான் பணிந்தது அவ்வானை
மூதக்கம்பம்தட்டி மதவானையேறினார்
மத்தகத்தைதட்டி மதவானையேறினார்
அம்மானுந்தானும் அழகானையேறினார்
மாமாவுந்தானும் மதவானையேறினார்
வந்தவந்தபேர்களெல்லாம் மதவானையேறினார்
வக்காவுங்காவும் நடந்தாரழகாக

### கர்ணன் பூங்காவை இந்திரன் கண்டழிக்கிறது.

மற்றுமொருபூங்காவும் வாரார்கள்மன்னவர்கள்
அந்தவொருபூங்காவும் அதிசயத்தைப்பார்த்தார்கள்
சந்தனவிருட்சங்களும் சாலைகளுமச்சோலைகளும்
தேவதாரிஷிமலையும் திகழான சோலைகளும்
எங்கெங்கும்சோலைகளும் எத்திசையும்சோலைகளும்
மாடப்புறாவும் மயிலும்விளையாடும்
கோயில்புறாவுங் குயிலும்விளையாடும்
அன்னமுந்தாராவும் அசைந்துவிளையாடும்
சாரையுஞ்சர்ப்பமுஞ் சற்றேயிமைந்துவிடும்
புலியும்பசுவும் ஒருதுறையில்நீர்குடிக்கும்
காஞ்சிகொடாளும் கருணரிடமாளிகையும்
வில்பிடித்துலாவுகிற வேந்தனதுமண்டபமும்
சனியென்னையாடுகிற சமர்த்தனதுமண்டபமும்
தாமமுடியான் சதுரங்கமண்டபமும்
சுந்தரப்பூமுடியான் சொக்கட்டான்மண்டபமும்
அத்தனையுங்கண்டானே ஆனந்தவாழ்மார்பன்
ஆறதுபூங்காவென்றான் அல்லித்திருமகனும்
அங்கிருக்கும்மன்னவர்கள் அரையர்துரைகளெல்லாம்
கேட்டபுனந்திரற்கு கேள்விசொல்லமாட்டாமல்
நின்றபுனந்திரற்கு நீதிசொல்லமாட்டாமல்
நெஞ்சலர்ந்தாராண்டு பச்சைமுகங்கருவிப்
பச்சைமுகங்கருவிப் பால்முகம்வேறுபட்டு
சிந்தைதகலங்கி திகைக்கிட்டுமெய்மறந்து
காஞ்சிநாடாளும் கருணருடகாவிதென்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
வேர்த்துவிரிவிரித்து மீசைசருண்டேறி
சித்துடம்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
பிள்ளையைக்கொன்ற பெரும்பாவிகாவிதுகாண்

மைந்தரைக்கொன்ற மாபாவிநூன்றாவோ
வேறுவழியில்லையோ வேந்தர்பெருமானே
மற்றும்வழியில்லையோ மைந்தர்பெருமானே
அயிராவதம்போல் யானையைத்தானழைத்து
இடித்துநகத்தி யெமபுரஞ்சேருமென்றான்
மதிலைச்சுவரிடிங்கள மண்டபங்கள்தானிடித்து
ஆலயங்கள்கோபுரங்கள் அடங்கலுந்தானிடித்து
அரைநாழிக்குள்ளே அதம்பண்ணிவாருமென்றான்
யானையதுகேட்டு யப்படிக்கேநல்லதென்று
வெங்கண்சிவந்து வெளிவால்மிகமுறுக்கி
கொம்பைபகைத்தி குளம்பால்கிளங்கிறி
தும்பிக்கையாலே சுழற்றிடுமவ்வானை
மதிலைமதிலிடித்து மண்டபத்தைவேர்பிடுங்கி
கோபுரஞ்சிகரங்களைக் குத்திக்கிளப்பிவிடும்
இடித்துமேநகதி யெமபுரஞ்சேர்த்துவிடும்
குத்திக்கிளப்பியது கோளாறும்பண்ணிவிடும்
இந்திரனார்தன்னருகில் வந்தது அவ்வானை
பணிபணியென்றான் பணிந்தது அவ்வானை
முழக்கம்பந்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
மத்தகந்தட்டி மதயானையேறினார்
அம்மானுந்தானும் அழகானையேறினார்
மாமாவுந்தானும் மதயானையேறினான்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனஞ்சென்றேறினார்
ஏறினபோதே யெடுத்தார்நெடுங்குடைகள்
முத்துக்குடைகவிய முடிமன்னர்தேரசைய
பவளக்குடைகவிய பார்மன்னர்தேர்நடக்க
ரத்தினக்குடைகவிய ராசாக்கள்தேர்நடக்க
வக்காவுங்காவும் நடந்தாரழகாக
இஞ்சிவனந்தாண்டி யெலுமிச்சந்தோப்புவிட்டு
மஞ்சள்வனந்தாண்டி மாதளம்புசோலைவிட்டு
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
எல்லையிளந்தோப்பு தாண்டியிளவிசையர்
அத்திபுரத்தைவந்து சேர்ந்தார்கள் ஆணழகர்
இதுயாருடையவீதியென்றான் அல்லிதிருமகனும்
அங்கிருக்குமன்னவர் அரையர்துரைகளெல்லாம்
தாமமுடியான் தைலாட்டான்வீதியென்றார்

புனைந்திரன் திருதராட்டிரன் வீதிவருகுதல்.

கண்ணில்லான்வீதியென்று காவலர்கள்சொன்னார்கள்
குருடனுடவீதியென்றார் கொற்றம்புனைநதவர்கள்

போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
ஊதினார்சின்னம் உலகேழுந்தானதிர
ஊதினார்காளை உலகுதலைமுழக்க
செம்பொன்னாற்காளை திசைவிளங்கவென்றூதினான்
வெள்ளினாற்காளை விளங்கவென்றூதினான்
வையைவளநாட்டான் வந்தேனென்றூதினான்
வாழ்மதுரைபாண்டியனார் வந்தேனென்றூதினான்
தாமமுடியான் தைலாட்டான்பூமுடியும்
தேசத்தையாளும் திரியோதிரன்பூமுடியும்
நூலால்கடுத்திராளா நூற்றொருவர்பூமுடியும்
காஞ்சிகாடாளுங் கிருணரிடபூமுடியும்
நங்கைமணவாளன் தருதலையன்பூமுடியும்
சாமத்துரோகி சகுனியிடபூமுடியும்
அம்மான்சகுனி யவனுடையபூமுடியும்
அத்தனைபேர்பூமுடியை அரிவேன் அரிவேனென்றான்
தப்பாதுநானறிவேன் என்றுமவனூதினான்
தைலாட்டாவென்றுசொல்லி தாரைசின்னமூதினான்
திரியோதிரனுக்கென்று சங்கெடுத்தூதினான்
ஊதினான்சின்னம் உலகேழுலகதிர
ஊதினான்காளை உலகேழுந்தானதிர
செம்பொன்னாற்காளை திசைபிளக்கவூதினான்
பொன்னினாற்காளை பொருந்தவின்றூதினான்
இப்படியாயூதுகிறார் எங்கெங்கும்இந்திரனும்
அந்தத்தெருவிருக்கும் அணியிழைமாரெல்லோரும்
ஒருவருக்கொருவரல்லோ வுகமைசொல்லிக்கொள்வார்கள்
பாண்டியர்கள்பேரமைதான் பஞ்சவர்கள்புத்திரன்தான்
ஆறாயிரவருக்கும் அழகானபேரமையோ
அல்லியம்மாள்பெற்றெடுத்த அழகுபுனந்திரனார்
மாயன்மருமகன்காண் வளநாடிப்புத்திரன்காண்
இப்படிக்குச்சொல்லி யிருக்கின்றவேளையிலே
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
அவ்வீதிவீதி நடந்தாரழகாக
மற்றுமொருவீதியிலே நடந்தாரேமன்னவனும்

புனந்திரன் கன்னர்வீதிகாணுகிறது.

அந்தவொருவீதியிலே அதிசயங்கள்மெத்தவுண்டு
மாடப்புறாவும் மயிலும்விளையாடும்

கோவில்புறவும் குயிலும்விளையாடும்
எங்குமணிவிளக்கும் எத்திசையும்விளக்கும்
மாவிலைதோரணமும் மகுடநல்லதோரணமும்
அந்தநெடுவீதிதன்னை கண்டானே ஆணழகன்
ஆருதவீதியென்றான் அல்லிதிருமகனும்
அங்கிருக்குமன்னர் அரையர்துரையரெல்லாம்
கேட்டப்புனந்திரற்கு கேள்விசொல்லமாட்டாதே
நின்றபுனந்திரற்கு நீதிசொல்லமாட்டாதே
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நித்திலகும்பூமுடியார்
பச்சைமுகங்கரிகிப் பால்முகம்வேறுபட்டு
காஞ்சிநாடாளும் கருணரிடவீதியென்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரனுந்தான்கேட்டு
கருணரிடவீதியென்ன கண்கள்மிகச்சிவந்து
சித்துடம்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேறி
பிள்ளையைக்கொன்ற பெரும்பாவிதன்தெருவோ
மைந்தரைகொன்றதொரு மாபாவிதன்தெருவோ
வேறுவழியில்லையோ வேந்தர்பெருமானே

கர்னனை இந்திரன்கொல்வேனென்றுசபதமிட்டது.

மற்றும்வழியில்லையோ மன்னர்பெருமானே
காஞ்சிநாடாளும் கர்னனார்பூமுடியை
சாமத்துக்குள்ளேதான் கொல்வேனென்றுசொல்லி
ஊதினார்சின்னம் உலகேழுலககிர
ஊதினான்காளை வுலகுதனைதுமுக்க
செம்பொன்னார்காளை திசைவணங்கஊதினான்
இப்படிக்காக யிவனிருக்கும்வேளையிலே

பொன்னுருவிக்கு தாதிசொல்லுகிறது.

போதேவருந்தடங்கும் பொன்னுருவிதாதியவள்
போதேவருந்தடங்கு பொன்னுருவிமுன்னேவந்து
அடிகள்முடிசாய்த்து ஆரணங்குமேதுசொல்வாள்
ஆச்சிநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னச்சிநீர்கேளும் இன்னமொருவார்த்தை
பார்த்தால்பிராயம் பதினாறுங்காணவில்லை
எண்ணைப்பிராயம் இருபதுங்காணவில்லை
துடிக்கென்றமீசையுஞ் சூரைக்கருக்குழலும்

உன்-ஆச்சிகலந்தாரி ஆனந்தவாழ்மாரி
அவளை-வைத்துசிறைகாப்பேன வையகமும்நான்கொடுப்பேன்
தேசமுழுதும் யிருந்தரசையாண்டிடுவாய்
வையகமுழுதும் இருந்தரசையாண்டிடுவாய்
வலையவளநாடான வந்தானே உன் தகப்பன்
பையன் தலையறுக்க பாரமில்லையெந்தனுக்கு
உங்கள்-அய்யர் தலையறுத்து வாருமென்றான் ஆணழகன்
பையன் தலையறுத்துப் பாதகமில்லையுமென்றான்

கிரியனுரைக்கு அர்ச்சுனன் கோபித்துச்சொல்லுகிறது.

அஞ்சுவயதுடைய அர்ச்சுனனுக்கதுகேட்டு
சித்துடம்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
உள்ளுடம்புநடுங்கி வுடம்பும்படபடத்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனலண்டி
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலையாய்
அக்கினிமண்டலத்தை அடுத்தது இனக்கோபம்
மனமடங்காக்கோபமுடன் மடியைவிட்டுகீழ்குதித்து
மடியைவிட்டுக்கீழிறங்கி மன்னவனுமேதுசொல்வான்
இந்தசபைநடுவே இருக்கின்றராஜர்களே
மன்னர்சபைநடுவே வீற்றிருக்கும்மன்னர்களே
குருக்கள்மார்துரோணரே கூறுகிறேன்கேட்டிருங்கள்
பாட்டன்மார்வீஷ்மரே பாலனுரைகேட்டிருங்கள்
காஞ்சிநாடாளும் கர்ணரேநீர்கேளும்
என்னுச்சிகலந்தாரி ஆனந்தவாழ்மாரி
அவளை-வைத்துசிறைகாப்பான் வையகமுந்தான்கொடுப்பான்
இருத்திசிறைகாப்பா னிவ்வுலகந்தான்கொடுப்பான்
வையமுழுதும்நான் இருந்தரசாண்டிடுவேன்
தேசமுழுதும் சிறப்பாகவாழ்ந்திடுவேன்
என்னுச்சிகலந்தாரி ஆனந்தமாரியற்கு
காஞ்சிநாடாளுங் கர்ணருடைகாவலது
ஆழக்குழிதோண்டி ஆகாசக்கோட்டைகட்டி
மேலேகுழிதோண்டி விசுநாகக்கோட்டைகட்டி
எட்டுத்தலைவாசல் இடிமன்னர்காத்திருக்க
பத்துத்தலைவாசல் படைமன்னர்காத்திருக்க
காஞ்சிநாடாளுங் கர்ணரிடகாவல்தள்ள
அப்பெரியகாவலிலே வந்தானே ஆணழகன்
மாதுயிருக்கிற மதிலேறிச்சென்றாரே
ஆச்சியும்அப்பாவும் அக்கணமேதானலைந்து
அன்றிரவுஅங்கிருந்து ஆணழகர்போய்விட்டார்

அங்கிருக்குமன்னர் அரையர்துரையரெல்லாம்
குஞ்சிரிப்புக்கொண்டு குலுங்கநகைகைத்தார்

திரியன் கோபிக்கிறது.

தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
கோபித்துக்கண்சிவந்து கொல்லுங்குருவியைப்போல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனலண்டி
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலயமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்துச்சுவாலயமாய்
காஞ்சிநாடாளுங் கர்னர்முகம்நோக்கி
காசிவளநாடாளுங் கர்னர்முகம்நோக்கி
பஞ்சவற்குள்ளறு பிறக்குமோபாற்குடங்கள்
ஐவர்கள்செய்த அதஷ்டஞன்செய்யவில்லை
தூதுரைக்கவந்ததொரு புத்திரனார்பூமுடியும்
அஞ்சுவயதுடைய அருச்சுனனார்பூமுடியும்
இருவர்முடியறுத்து என்பாதத்தில்வையுமென்றான்

திரியனுக்கு கர்னர் தேறுதல் சொல்லுகிறது.

காஞ்சிநாடாளுங் கர்னரவர்கேட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
பச்சைமுகங்கருகி பால்முகம்வேறுபட்டு
மன்னன்மனஞ்சலித்து வார்த்தையொன்றெடுத்துரைப்பான்
சொல்மாத்திசொல்லுரைப்பான் தோழன்முகங்கோணமல்
குலத்தில்குடிகேடனுனையாகொற்றவனே
மறுத்தொருக்கால்வார்த்தைசொல்ல வாயுண்டோமன்னவனே
பாசத்திளவரையன் படைகூட்டந்தன்னுடனே
ஆனைந்தமார்பனுக்கு அனுப்பிவிடைகொடென்றான்
தேசத்தழகன் திரியோதிரன்கேட்டு
அஞ்சுவயதுடைய அருச்சுனனைத்தானழைத்து
பாசத்திளவரையர் படைகூட்டந்தன்னுடனே
ஆனந்தவாழ்மார்பன் அய்யாவைக்காணுமென்றான்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனருமேதுசொல்வார்
உந்தன்விருதுவேண்டாம் உன்மேளம்நான்வேண்டேன்

சின்ன அர்ச்சுனனுக்குப் பாட்டன்சேனை யனுப்புகிறது.

அரவக்கொடிவேண்டேன் ஆள்வேண்டேன் ஊர்வேண்டேன்
ஐவரிடமிருந்து அடைவாகநீகொடுத்து

விடைகொடுத்தனுப்பும் வேந்தர்பெருமானே
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
காந்திநாடாளுங் கர்னருக்கேதுசொல்வார்
ஐவருடசேனைகளும் அவர்படையானைகளும்
கால்விலங்குபோட்டோமே காவலிலேவைத்தோமே
இணைவிலங்கைநீகழட்டி யிவனுக்கனுப்புமென்றான்
காந்திநாடாளுங் கர்னரவர்கேட்டு
சிங்காதனத்தைவிட்டுத் திகழுக்குதித்திறங்கி
செம்பொன்மெரிவடியில் ஏறியந்தசீர்கர்னர்
முத்துமெருவடியைத் தொட்டுமிகநடந்து
அரண்மனையெழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
பஞ்சவர்கள்சேனை யிருக்குமிடத்தில்வந்தார்
ஐவருடசேனைக்கு அருகேவரும்போது
பஞ்சவர்கள்சேனையர்கள் பார்மன்னர்தான்பார்த்து
கர்னரைத்தான்பார்த்துக் காவலர்களேதுசொல்வார்
செஞ்சுவர்க்கோவாண்டு சித்திலங்குபூமுடியான்
பச்சைமுகங்கருகிப் பாலமுகம்வேறுபட்டு
சிந்தைதகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
ஒருவர்க்கொருவர் உவமையாய்ச்சொல்லிக்கொள்வார்
கடவனேபோதாதோ இவர் இங்கேவரலாச்சு
கர்னர்வருகிறது காரியமாய்தோற்றுது
என்றுமவர்பேசி இருக்கின்றவேளையிலே
காந்திநாடாளுங் கர்னரருகில்வந்து

கர்னர் தேறுதல் சொல்லுகிறது.

அஞ்சாதீர் அஞ்சாதீர் அரையர்களே அஞ்சாதீர்
ஒன்றுக்கும்அஞ்சாதீர் உத்தமனார்சேனைகளே
இன்னஞ்சிலகாலம் இருந்தரசையாள்வோமே
காலங்கழித்து கர்த்தன்பதிசேர
நாளுங்கழிந்தது எமன்பதிசேர
மூன்றுநாளார்பொழுது முடிமன்னராளுவது
நாலாம்நாள் உங்களுக்கு ஆருதாராச்சியங்கள்
நால்கன்-பார்த்தன்கையம்பாலே படுவதுநிச்சயந்தான்
மன்னர்கையம்பாலே மாளுவதுநிச்சயந்தான்
தர்மருக்குஇப்போ சனியனதுலைந்தது
வீமருக்குஇப்போ விதிதுலைந்தது
மாதுமயிர்முடிக்க நாளாச்சுயிப்போது
சோதுகுழல்முடிக்க நாளாச்சுயிப்போது

ஆரந்தவாழ்மார்பா உன் ஐயாகாணுமென்றான்
வெள்ளையானைமேலேறி வெகுதூரங்காணுமென்றான்

அர்ச்சுனன் யானையில் வருகிறது.

அஞ்சவயதுடைய அர்ச்சுனருந்தான்கேட்டு
துள்ளியெழுந்தான் துவண்டமலரெடுத்தான்
பூவும்புதுமலரும் பொன்னருகு அட்சதையும்
பொன்னுனசொம்பினிலே பன்னீருங்கொண்டுவந்து
யானையின்முன்னே வந்தான் அர்ச்சுனராசனவரும்
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடியணங்கி தெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்து தெண்டனிட்டான்
வந்துபணிந்தவரைக் கண்டதுவெள்ளானை
உந்தனுக்கோதுக்கம்ஐயா உத்தமரேவீரியனே
எந்தனுக்குதுக்கம் இருக்குதெருக்கிருந்து
துக்கமாய்தானிருந்து தும்பிக்கையால்தூக்கிறது
அஞ்சவயதுடைய அர்ச்சுனராசாவும்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
கட்டிவரிந்துகட்டி தாமரைப்பூசுங்கவிட்டு
உருவினகத்தியுடன் உத்தரியந்தோளிலிட்டு

அர்ச்சுனன் யானையின்மேலேறிப் பயணப்படுகிறது.

படிபடியென்றான் படிந்ததுஅவ்வானை
முகக்கம்பந்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
மத்தகத்தைதட்டி அருந்தானையேறினான்
வீரமதயானை வெள்ளானைமேலேறி
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனஞ்சென்றேறுமென்றான்
அப்படிக்கேயாகுதென்று ஆரந்தவாழ்மார்பன்
சரியானைஏறினான் தன்னோடொத்தராசாக்கள்
சிலமன்னரெல்லாருந் தேரின்மேலேறினார்
பலமன்னரெல்லோரும் பல்லக்கிலேறினார்
குலமன்னரெல்லோருங் குதிரையின்மேலேறினார்
அழகானமன்னரெல்லாம் ஆனையின்மேலேறினார்
முன்னேமுரசெடுத்து முன்னானைமேற்போட்டார்

துய்பார்குலத்திலே துரோணரவர்பார்த்து
அங்காணிதொப்பை யசைமருங்கசைய
உடம்புகுலுங்கிடவே உத்தமனுந்தானகைத்தான்

### திரியோதிரன் அருச்சுனனைக்கொல்லச்சொன்னது.

சேதத்தையாளுந் திரியோதிரன் தான்பார்த்து
கோபித்துக்கண்சிவந்து கொல்லுங்குருவிகையைப்போல்
பத்திரநாகம் பவளம்போல்கண்சிவந்து
கட்டழுந்தநாகம் கொடிபோலகண்சிவந்து
காஞ்சிநாடாளுங் கருணர்முகம்நோக்கி
காசிவளநாடாளுங் கருணர்க்குயேதுசொல்வான்
ஆருரைக்கவந்ததொரு சுந்தரனார்பூமுடியை
அஞ்சவயதுடைய அருச்சுனனார்பூமுடியும்
இருவர்தலையறுத்து எம்பாதத்தில்வையுமென்றான்

### கருணர் திரியோதிரனுக்கு தேறுதல்சொல்லுகிறது.

காசிவளநாடாளும் கருணரவர்கேட்டு
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
செஞ்சுவர்க்குசாவரண்டு சித்திலங்குதபூமுடியான்
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
மாரனன்மனஞ்சலித்து மறுவார்த்தையெடுத்துரைப்பார்
சொல்மாத்திசொல்லுரைப்பான் திரியன்முகங்கோணாமல்
அரியாதறியுமோ ஆனந்தவாழ்மார்பா
இதற்குள்பாரப்புத்தி எங்கேகற்றானருச்சுனற்கு
நல்லதனத்தாலே கேளுமென்றான் மன்னவனும்
இன்னமொருவார்த்தை இளவரசே கேளுமென்றான்

### திரியன் அர்ச்சுனனைமடியில்வைத்துககொண்டு கேட்கிறது.

அப்போதிரியோதிரன் ஆணழகன்தான்கேட்டு
அஞ்சவயதுடைய அர்ச்சுனரைத்தானழைத்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
உச்சிமுகந்துமவன் உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கம்தடவி பவளவாய்முத்தமிட்டு
அஞ்சவயதுடைய அர்ச்சுனரேநீர்கேளும்
அர்ச்சுனனார்புத்திரனும் வந்தானும்ஆணழகன்
அல்லித்திருமகளும் வந்தாளும்ஆணழகள்
வையைவளநாடான் வந்தானும்உன்தகப்பன்
சந்தனத்தோப்புதனில் தார்வேந்தன்போய்புகுந்து
வேப்புமரசுமங்கே வெட்டிப்போரிட்டானும்

உன்-ஆச்சிகலந்தாரி ஆனந்தவாழ்மாரி
அவளை-வைத்துசிறைகாப்பேன் வையகமுந்தான்கொடுப்பேன்
தேசமுழுதும் யிருந்தாசையாண்டிடுவாய்
வையகமுழுதும் இருந்தாசையாண்டிடுவாய்
வையைவளநாடான் வந்தானே உன் தகப்பன்
பையன் தலையறுக்க பாரயில்லையெந்தனுக்கு
உங்கள்-அய்யர் தலையறுத்து வாருமென்றான் ஆணழகன்
பையன் தலையறுத்துப் பாதத்திலேவையுமென்றான்

திரியனுரைக்கு அர்ச்சுனன் கோபித்துச்சொல்லுகிறது.

அஞ்சுவயதுடைய அர்ச்சுனருந்தான்கேட்டு
சித்துடம்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
உள்ளுடம்புநடுங்கி வுடம்புபடபடத்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனலண்டி
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலையமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்தது இவன்கோபம்
மனமடங்காக்கோபமுடன் மடியைவிட்டுகீழ்குதித்து
மடியைவிட்டுக்கீழிறங்கி மன்னவனுமேதுசொல்வான்
இந்தசபைநடுவே இருக்கின்றராஜர்களே
மன்னர்சபைநடுவே வீற்றிருக்கும்மன்னர்களே
குருக்கள்மார்துரோணரே கூறுகிறேன்கேட்டிருங்கள்
பாட்டன்மார்வீஷ்மரே பாலனுரைகேட்டிருங்கள்
காஞ்சிநாடாளும் கர்ணரேநீர்கேளும்,
என்னாச்சிகலந்தாரி ஆனந்தவாழ்மாரி
அவளை-வைத்துசிறைகாப்பான் வையகமுந்தான்கொடுப்பான்
இருத்திசிறைகாப்பா னிவ்வுலகந்தான்கொடுப்பான்
வையமுழுதும்நான் இருந்தாசு ஆண்டிடுவேன்
தேசமுழுதும் சிறப்பாகவாழ்ந்திடுவேன்
என்னாச்சிகலந்தாரி ஆனந்தசாரியற்த
காஞ்சிநாடாளுங் கர்ணருடகாவலது
ஆழக்குழிதோண்டி ஆகாசக்கோட்டைகட்டி
மேலேகுழிதோண்டி விஷநாகக்கோட்டைகட்டி
எட்டுத்தலைவாசல் இடிமன்னர்காத்திருக்க
பத்துத்தலைவாசல் படைமன்னர்காத்திருக்க
காஞ்சிநாடாளுங் கர்ணனிடகாவல்துள்ள
அப்பெரியகாவலிலே வந்தானோ ஆணழகன்
மாதுயிருக்கிற மதிலேறிச்சென்றானோ
ஆச்சியும்அப்பாவும் அக்கணமேதானகலந்து
அன்றிரவு அங்கிருந்து ஆணழகர்போய்ச்சேர்ந்தார்

அங்கிருக்குமன்னர் அரையர் துரையரெல்லாம்
குஞ்சிரிப்புக்கொண்டு குலுங்கநகைநகைத்தார்

திரியன் கோபிக்கிறது.

தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
கோபித்துக்கண்சிவந்து கொல்லுங்குருவியைப்போல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனலண்டி
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலையமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்துச்சுவாலையமாய்
காஞ்சிநாடாளுங் கர்ணர்முகம்நோக்கி
காசிவளநாடாளுங் கர்ணர்முகம்நோக்கி
பஞ்சவர்க்குள்ளூ பிறக்குமோபாற்குடங்கள்
ஐவர்கள்செய்த அதஷ்டனுன்செய்யவில்லை
தூதுரைக்கவந்தவொரு புத்திரனர்பூமுடியும்
அஞ்சுவயதுடைய அருச்சுனனர்பூமுடியும்
இருவர்முடியறுத்து என்பாதத்தில்வையுமென்றான்

திரியனுக்கு கர்ணர் தேறுதல் சொல்லுகிறது.

காஞ்சிநாடாளுங் கர்ணரவர்கேட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
பச்சைமுகங்கருகி பால்முகம்வேறுபட்டு
மன்னன்பயஞ்சலித்து வார்த்தையொன்றெடுத்துரைப்பான்
சொல்மாற்றிசொல்லுரைப்பான் தோழன்முகங்கோணாமல்
குலத்தில்குடிகேடனுனேயொற்றவனே
மறுத்தொருக்கால்வார்த்தைசொல்ல வாயுண்டோமன்னவனே
பாசத்திளவரையன் படைகூட்டந்தன்னுடனே
ஆனந்தமார்பனுக்கு அனுப்பிவிடைகொடென்றான்
தேசத்தழகன் திரியோதிரன்கேட்டு
அஞ்சுவயதுடைய அருச்சுனனைத்தானழைத்து
பாசத்திளவரையர் படைகூட்டந்தன்னுடனே
ஆனந்தவாழ்மார்பன் அய்யாவைக்காணுமென்றான்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனருமேதுசொல்வார்
உந்தன்விருதுவேண்டாம் உன்மேளம்நான்வேண்டேன்

சின்ன அர்ச்சுனனுக்குப் பாட்டன்சேனையனுப்புகிறது.

அரவக்கொடிவேண்டேன் ஆள்வேண்டேன் ஊர்வேண்டேன்
ஐவரிடவிருது அடைவாகநீகொடுத்து

விடைகொடுத்துநீயனுப்பும் வேந்தர்பெருமானே
தேசத்தனையாளுந் துரியோதனன்கேட்டு
காஞ்சிநாடாளுங் கர்ணருக்கேதுசொல்வார்
ஐவருடசேனைகளும் அவர்படையானைகளும்
கால்விலங்குபோட்டோமே காவலிலேவைத்தோமே
இணைவிலங்கைநீகழட்டி யிவனுக்கனுப்புமென்றான்
காஞ்சிநாடாளுங் கர்ணரவர்கேட்டு
சிங்காதனத்தைவிட்டுத் திகழக்குதித்திறங்கி
செம்பொன்பெரிவடியில் ஏறியந்தசீர்கர்ணர்
முத்துமொழுவடியைத் தொட்டுமிகநடந்து
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
பஞ்சவர்கள்சேனை யிருக்குமிடத்தில்வந்தார்
ஐவருடசேனைக்கு அருகேவரும்போது
பஞ்சவர்கள்சேனையர்கள் பார்மன்னர்தான்பார்த்து
கர்ணனைத்தான்பார்த்துக் காவலர்களேதுசொல்வார்
கெந்தமலர்த்துகாவரண்டு நீத்திலங்குபூமுடியான்
பச்சைமுகங்கருகிப் பாலமுகம்வேறுபட்டு
சிந்தைகலங்கி திகைத்திட்டுமெய்மறந்து
ஒருவர்க்கொருவர் உவமையாய்ச்சொல்லிக்கொள்வார்
என்னமோவந்தோ இவர் இங்கேவரலாச்சு
கர்ணர்வருகிறது காரியமாய்த்தோற்றுது
என்றுமவர்பேசி இருக்கின்றவேளையிலே
காஞ்சிநாடாளுங் கர்ணருமங்கேவந்து

கர்ணர் தேறுதல் சொல்லுகிறது.

அஞ்சாதீர் அஞ்சாதீர் அரையர்களே அஞ்சாதீர்
ஒன்றுக்கும் அஞ்சாதீர் உத்தமனார்சேனைகளே
இன்னஞ்சிலகாலம் இருந்தரசையாள்வோமே
காலங்கழித்து கர்த்தன்பதிசேர
நாளுங்கழிந்தது எமன்பதிசேர
மூன்றுநாளர்பொழுது முடிமன்னராளுவது
நாலாம்நாள் உங்களுக்கு ஆகுதுராச்சியங்கள்
நாங்கள்-பார்த்தன்கையம்பாலே படுவதுநிச்சயந்தான்
மன்னர்கையம்பாலே மாளுவதுநிச்சயந்தான்
தர்மருக்குஇப்போ சனியன்துலைந்தது
வீமனுக்குஇப்போ விடுதிதுலைந்தது
மாதுமயிர்முடிக்க நாளாச்சுயிப்போது
கோதுகுழல்முடிக்க நாளாச்சுயிப்போது

பத்தினியாள்சாபம் பலித்ததுஎங்களுக்கு
உத்தமியாள்சாபம் உடனேபலித்தது
என்றுமேசொல்லியல்லோ இணைவிலங்கைதட்டிவிட்டான்
கால்விலங்குகழட்டினான் காவலனும் அப்போது
ஆடைகொடுத்தான் அடைக்காயுந்தான்கொடுத்தான்
சேனைமதவீரருக்கு சேனதிரவியங்கொடுத்தான்
இனிவாருமென்றுசொல்லி எழுந்திருந்தார்கர்ணரும்
மேகமலைபோலே மெள்ளநடந்துவந்தார்
காவலர்கள்சூழ்ந்துவரக் கர்ணர்வழிநடந்து

## திரியன் சபைக்குவருகிறது.

தேசத்தையாளுந் திரியோதிரன்சபையில்
வந்துநுழைந்தார்கள் மன்னர்பெருஞ்சபையில்
காஞ்சிநாடாளுங் கர்ணர்வந்துவீற்றிருந்தார்
வந்தவொருசேனையெல்லாம் மன்னர்களைக்கண்டார்கள்
தேசத்தையாளுந் திரியோதிரன்சபையில்
தேசத்தையாளும் திரியோதிரன்பார்த்து
மகுடமுடியசக்கி மன்னவனும்சாய்ந்திருந்தான்
தெண்டனிட்டமன்னர் திரும்பியெழுந்திருந்து
அஞ்சுவயதுடைய அருச்சுனரும்என்றுசொல்வார்

## அர்ச்சுனன் தேறுதலுரைப்பது.

அஞ்சாதீர்அஞ்சாதீர் அரையர்களே அஞ்சாதீர்
மூன்றுநாளார்பொழுது முடிமன்னர் அருளுவது
நாலாநாள்எங்களது ஆருதுநாண்ராச்சியங்கள்
ரெட்டிப்புசம்பளங்கள் நானேதருகிறேன்
தர்மருக்குயிப்போ சனியன்தொலைந்தது
வீமருக்குயிப்போ விதிதொலைந்தது
மாதுமயிர்முடிக்க நாளாச்சுமன்னவனே
கோதகுழல்முடிக்க நாளாச்சுமன்னவனே
ரெட்டிப்புசம்பளம் நானேதருகிறேன்
எதுக்குமஞ்சாதீர் என்பிறகேவாருமென்றார்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
கடுகடுத்துவீற்றிருந்தான் கர்நாகங்கொண்டவனும்
அஞ்சுவயதுடைய அருச்சுனர்தான்பார்த்து

## அர்ச்சுனர் கர்ணருக்குச்சொல்லுகிறது.

காஞ்சிநாடாளுங் கர்ணரெதிரில்வந்து
யானைக்கொடுத்தீர் அடைக்காய்மிகக்கொடுத்தீர்
சேனைகொடுத்தீர் திரவியமுந்தான்கொடுத்தீர்

ஆனந்தவாழ்மார்பா உன்ஐயா காணுமென்றான்
வெள்ளையானைமேலேறி வேந்தனைக்காணுமென்றான்

அர்ச்சுனன் யானையில் வருகிறது.

அஞ்சுவயதுடைய அர்ச்சுனருந்தான்கேட்டு
துள்ளியெழுந்தான் துவண்டமலரெடுத்தான்
பூவும்புதுமலரும் பொன்னருந்அட்சதையும்
பொன்னானசொம்பினிலே பன்னீருங்கொண்டுவந்து
யானையின்முன்னேவந்தான் அர்ச்சுனரானவரும்
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
வந்துபணிந்தவரைக் கண்டதுவெள்ளானை
உந்தனுக்கோதுக்கம்ஐயா உத்தமரேவீரியனே
எந்தனுக்குதுக்கம் இருக்குதெழுந்திருந்து
துக்கமாய்தானிருந்து தும்பிக்கையால்தூக்கிறது
அஞ்சுவயதுடைய அர்ச்சுனராசாவும்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு ஞெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூசுங்குவிட்டு
உருவினகத்தியுடன் உத்தரியந்தோளிலிட்டு

அர்ச்சுனன் யானையின்மேலேறிப் பயணப்படுகிறது.

படிபடியென்றான் படிந்ததுஅவ்வானை
முகக்கம்பந்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
மத்தகத்தைதட்டி கருத்தானையேறினான்
வீரமதயானை வெள்ளானைமேலேறி
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனஞ்சென்றேறுமென்றான்
அப்படிக்கேயாகுதென்று ஆனந்தவாழ்மார்பன்
சரிபானைஏறினான் தன்னோடொத்தராசாக்கள்
சிலமன்னரெல்லோருந் தேரின்மேலேறினார்
பலமன்னரெல்லோரும் பல்லக்கிலேறினார்
குலமன்னரெல்லோருங் குதிரையின்மேலேறினார்
அழகானமன்னரெல்லாம் ஆனையின்மேலேறினார்
முன்னேமுரசடித்து முன்னானைமேற்போட்டார்

ஒருகோடிவாத்தியங்கள் ஒருமிக்கச்சத்தமிட
இருகோடிவாத்தியங்கள் எங்குமேசத்தமிட
பட்டபுலவர் பதினெட்டுமந்திரிகள்
சிங்கக்கொடிபுலி சேர்ந்துமுழங்கிவர
இப்படியாய்வீரரெல்லாம் எத்தனையாமன்னர்கள்
ஏறினபோதே எடுத்தார்சிலவிருது

குடையின்சிறப்பு

ஏறினபோதே எடுத்தார்நெடுங்குடைகள்
முத்துக்குடையாம் முழுமாணிக்கப்பொற்குடையாம்
அன்னக்குடையாம் தவளநெடுங்குடையாம்
பட்டுக்குடையாம் பவளக்குடையாம்
வச்சிரக்குடையாம் வைடூரியக்குடையாம்
எடுத்தார்நிறைந்தோர்கள் எண்ணாயிரங்குடைகள்
சுத்திநிறைந்தார்கள் சூரியனைக்காணாத
பக்கம்நிறைந்தார்கள் பகலவனைக்கண்மறைக்க
ஒத்தைக்குடைநடுவில் உத்தமனும்வாராராம்
பூச்சக்கரக்குடைநடுவில் பூபாலன்வாராராம்
அலங்காரக்குடைநடுவில் அருச்சுனனும்வாராரே
பச்சைக்குடைகளிய பார்மன்னர்தேர்நடக்க
முத்துக்குடைகளிய முடிமன்னர்தேர்நடக்க
இரத்தினக்குடைகளிய ராசாக்கள்தேர்நடக்க
யானைபிறுபிறென்ன அணிமன்னர்கொக்கரிக்க
குதிரையதுமானிக்க கோடிமன்னர்சத்தமிட
ஊதிருஞ்சின்னம் உலகேழுமதிர
ஊதிருங்காளை வுலகுதலைமுடிக்க
செம்பொன்னாற்காளை திசைவிளங்கவூதிருன்
பொன்னினாற்காளை பொருந்தவின்றூதிருன்
அவ்வீதிவீதி நடந்தார் அழகாக

அருச்சுனன்பெருந்திருவாள்வீதிவருகிறது.

தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
மற்றுமொருவீதியிலேவாராரே அர்ச்சுனரும்
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்வீதியிலே
பெருந்திருவாள்வீதியிலே வாராரே அருச்சுனனார்
அருகவயதுடைய அர்ச்சுனராசனை
அருச்சுனன்போறேனென்று ஊதினான்சின்னத்தொனி
ஊதினசின்னத்தொனி கேட்டாளே உத்தமியும்
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்தான்கேட்டு
அலர்க்கொடித்திரளார் நாற்பெருவர்பெண்டுகளும்
அத்தனைபெண்டுகளும் அல்லவருந்தான்கூடி

## அருச்சுனன் யானையேறுகிறது.

படிபடியென்றான் படிந்தது அவ்வானை
முக்சம்பம்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
மத்தகம்தான்பிடித்து மதவானையேறினான்
கைத்தளத்தைதட்டி கறுத்தானையேறினான்
வீரமதயானை வெள்ளானைமேலேறி
வந்தவந்தபேர்களெல்லாம் மதயானையேறினார்
அப்படிக்கேயாகுதென்று யானையின்மேலேறினார்
அவ்வீதிவீதி நடந்தார் அழகாக
மற்றுமொருவீதி மன்னவர்கள் தாண்டியல்லோ
சோலையடுத்தார்கள் சுந்திரப்பூமுடியார்
தென்னமரச்சோலைத் திரும்பியந்ததேர்விசயன்
மாமரச்சோலைத் திரும்பியந்ததேர்விசையன்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனராசதுரை
யானைவிட்டுக்கீழிறங்கி யானந்தவாழ்மார்பன்

## அருச்சுனன் பூங்காவில் கோலிகுண்டு ஆடுகிறது.

உப்புகந்தமாடுகிறான் உத்தமனார்வீரியனும்
செண்டுவிளையாடுகிறான் சேனைகள் தன்னுடனே
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாளதுசொல்வாள்
திஷ்டோதிரன்தேவி திருவினைக்கேளதுசொல்வாள்
அப்போதேசொன்னேனே தப்பாகுமென்றுசொல்லி
என்வார்த்தைகேளாதே இருந்தாயே ஆரணங்கே
வெட்கங்கெடுத்தானே வீணாகிப்பார்த்தானே
சிலபேரைக்கூட்டிவைத்துப் பற்றித்துகிலுரித்தான்
மண்டலத்தார்முன்பாக மானங்கெடுத்தானே
பாகைவிரைபோட்டால் பவித்தங்காய்காய்த்திடுமோ
கத்திரிசெடிபோட்டால் கஸ்தூரிப்பூத்திடுமோ
மாமல்லிசெடியதுதான் நடமல்லிபூத்திடுமோ
நாகத்தின்குட்டிக்கு நல்லவிஷமில்லையோ
சென்னாகக்குட்டியது சீறுமல்லிவெதண்டோ
என்றுமவள்சொல்லி இருந்தாள் பெருந்திருவாள்
சிந்தைகலங்கிடவே திஷ்டோதிரன்தேவி
மாரடித்துமங்கையரும் மண்மேல்பிரண்டழுது
மோதிரக்கையை முகத்திலறைந்துக்கொண்டு
சாவேன்கெடுவேன் சமுத்திரத்தில்போய்விழுவேன்
மானங்குலைந்தபின்பு மண்மேலிருப்பேனோ
புடவையவிழ்ந்தபின்பு பூமியிலேதங்குவேனோ

என்றுமவள் அழுதாள் ஏலங்கருங்குழலும்
அங்குமிருந்தாதி அறிவுடையாளோடிவந்து
வாரியெடுத்து மடிமேலேகுந்தவைத்து

தாதி சீர்திருத்துகிறது.

பூணாரகேசகத்தில் புழுதிபலதுடைத்து
ஆபரணந்தான்திருத்தி அழகாகசொப்பணிட்டு
கொப்புத்திருத்தியவள் கோர்வைகள்தான்திருத்தி
அவிழ்ந்தகலைமயிரை அள்ளியவள்சொருகி
ஆச்சிநீர்கேளும் அடியேன்ஒருவார்த்தை
என்னாச்சிநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
மருமகள்பெற்றெடுத்த மதவானைக்கண்ணல்லோ
அஞ்சுவயதுடைய அறியாதபாலகன்றான்
அவன்மேலேகுற்றஞ் சொல்லலாகுமோஎன்னாச்சி
பாட்டியா.என்றுசொல்லி பார்த்தன்விளையாடியான்
சிறுபாட்டியென்றுசொல்லி சிரித்துவிளையாடினான்
கோபித்துக்கொள்வாரோ கொத்தார்குழலாரே
ஆறிவிடும்ஆறிவிடும் ஆச்சிநீஆறிவிடும்
தேறிவிடுந்தேறிவிடுந் திருவிணையேதேறிவிடும்
என்றுமவளுரைக்க ஏதுசொல்வாள்திருவிணையும்
ஒருத்தனையவந்தாளு வுத்தமியாள்தாதியரே
பலபேரைக்கூட்டிவந்து பற்றுந்துகிலுரிந்தான்
சேனைகளைக்கூட்டிவந்து சேலையவிழ்த்தானே
மானங்குலைந்தபின்பு மண்மேலிருப்பதில்லை
இன்னமொருநாழி இல்லேனான்மண்மேலே
சாவேன்கெடுவேன் சமுத்திரத்தில்போய்விழுவேன்
நாமக்குழலாளுந் தாதியவளோதுசொல்வாள்

திரியோதிரனுக்கு சமாச்சாரந்தாதிகளுரைப்பது.

தேசத்தையாளுந் திரியனுக்குச்சொல்லுவோம்
அம்பலத்துவாசலிலே யனைவோர்க்குஞ்சொல்லிடுவோம்
அனைவர்க்குஞ்சொல்லி அவன்தலையைவாங்கிடுவோம்
ஆறிவிடும்ஆறிவிடும் ஆச்சியரேயாறிவிடும்
தேறிவிடுந்தேறிவிடும் திருவிணையேதேறிவிடும்
பட்டெடுத்துக்கட்டி பலவிரியர்தங்களைப்போல்
ஒட்டெடுத்துக்கட்டியங்கே ஓடிவாராள்தாதியவள்
எட்டடியும்ஓரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியும்ஓரடியாய் பதறிமிகநடந்து
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
தேசத்தையாளுந் திரியோதிரன்கொலுவில்

சிங்காதனத்துக்கு முன்பாகதெண்டனிட்டு
தெண்டனிட்டதாதி திரும்பிஎழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
நீயார்பெண்ணேதாதி அரியவுரையுமென்றான்
யார்பணியுமல்ல பெருமாள் திருப்பணிதான்
பேர்பணியுமல்ல பெருமாள் திருப்பணிதான்
ஒருவர்பணியுமல்ல உம்முடையதற்பணிதான்
திஷ்டோதிரன்தேவி திருவினையாள்தாதியென்றாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
செண்டாடுமன்னன் திரியோதிரனேதுசொல்வான்
நீயிங்கேவந்த தெனக்கரியக்கூறுமென்றான்
ஐயாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னையாநீர்கேளும் இன்னமொருவார்த்தை
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்மாளிகையில்
நூலார்கடுத்திரளார் நூற்றொருவர்பெண்டுகளும்
கொம்பனைமாரெல்லாம் கூடிவிளையாடினார்கள்
திருவினைமாரெல்லாருஞ் சேர்ந்துவிளையாடினார்கள்
பந்துகழலாடிப் பைங்கிளிமார்வீற்றிருந்தார்
அந்தச்சமயத்தில் அர்ச்சுனவீரியனும்
பாசத்திளவரையன் படைகூட்டந்தன்னுடனே
ஓடமயிற்கண்ணும் உட்கட்டிற்போய்புகுந்தான்
திஷ்டோதிரன்தேவி திருவினையாள்நாயகியாள்
ஆடுங்கழல்பறித்தான் அம்மானைதான்பறித்தான்
பாடுங்கழல்பறித்தான் பிள்ளாங்குழிபறித்தான்
கொம்பனையாளோமவன் கொஞ்சுங்கிளிபறித்தான்
பெண்பெருமாளோமவன் பேசுங்கிளிபறித்தான்
பாட்டன்விளையாடிப் பரியாசம்பண்ணைப்போல்
சிறித்துவிளையாடி சேலைகளைந்தானே
கொஞ்சிவிளையாடிக் கூறையையவிழ்த்தானே
திஷ்டோதிரன்தேவி திருவினைநாயகியும்
சாவேன்கெடுவேன் சமுத்திரத்திற்போய்விழுவேன்
செத்துமடிவேனென்றாள் சிலவழிக்குப்போவேனென்றாள்
மாண்டுமடிவேனென்றாள் வைகுண்டஞ்சேர்வேனென்றாள்
இனியிருப்பதில்லையென்று ஏலங்கருங்குழலும்
அழுதுபுலம்புகிறாள் ஆனந்தவாழ்மாரி
அந்தவிசேஷம் அதுசொல்லவந்தேனென்றாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
பச்சைமுகங்கருகிப்போல்முகம்வேறுபட்டு
வெட்கம்பெரிதாகி வேல்புருஷக்கண்ணனார்

கருணர் வேண்டாமென்று தடுக்கிறது.

காஞ்சிகாடராஜன் கருணராவர்பார்த்து
திஷ்டோதிரனுக்கு சொல்லான ஒருவார்த்தை
போகாதேபோகாதே போர்முனைக்குப்போகாதே
அறியாதபையனென்று அமருக்குப்போகாதே
சரியானபையனென்று சண்டைக்குப்போகாதே
இவரிடகும்புக்கு எல்லாபலமுமுண்டு
மாயர்வலுமையுண்டு மகாதேவர்கிருபையுண்டு
சுவாமிவலுமையுண்டு தேவர்கிருபையுண்டு
ஆதிசிவனசங்கரனார் அவர்வலுமைமெத்தவுண்டு
பரமனுடன்வாதாடி பாசுபதம்பெறுபெற்றான்
பாசுபதம்பெறுபெற்ற பார்த்தனுடபேரனல்லே
அவர்களுடயுத்தஞ்செய்ய யாரால்முடிந்திடும்
போகாதேபோகாதே பிழைமோசம்வந்திடும்
சண்டைக்குப்போகாதே சவுரியங்களற்றிவாய்
என்றுசொலலக்கர்ணாவா ஏதுசொல்வார் திஷ்டோதிரன்
கருணா-உன்பேச்சுக்கேட்பேனென்று எண்ணுதீர்கேர்கருணா
காஞ்சிகாடராஜன் கருணராவர்கேட்டு
சித்தத்துக்கேற்றபடி செய்கருணுமென்றுசொன்னார்
கொலுவைவிட்டுநீங்கியல்லோ கொற்றம்பூவீசியனும்
காசிவளகாடராஜனும் கருணர்பெருமானும்
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
மாளிகைக்குவந்து படுத்தாரேமன்னவனும்
பஞ்சணைமெத்தையிலே பள்ளிகொண்டார்கருணரும்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

திஷ்டோதிரன் யுத்தத்திற்குப்போகிறது.

சிந்தைகலங்கிடவே திஷ்டோதிரன் தானும்
அவர்-அக்குரோணிசேனையுடன் உத்தமனும்வெளியானான்
சிந்தைகலங்கிடவே தேரின்மேலேறினான்
திஷ்டோதிராசன் தேரின்மேலேறினான்
ஒரு-அக்ரோணிசேனையுடன் உத்தாரர்கள் வந்தார்கள்
ஊதினான் சின்னம் உலகேழுலங்கதிர
ஊதினான்காளை பிறகுதலைசுழக்க
அஞ்சுவயதுடைய அர்ச்சுனவீரியனமேல
போர்பொருதவாரேனென்று ஊதினான் தாரைசின்னம்
சண்டைக்குப்பாரேனென்று சங்கெடுத்து ஊதினான்
அவ்வீதிவீதி நடந்தார் அழகாக
தேரோடும்வீதி தெருவுப்பலதாண்டி
தென்னமரச்சோலை திருப்பினார்தேர்விசையர்
மாமரச்சோலையிலே வந்தானேமன்னவனும்
திஷ்டோதிரன்வந்தானென்று சின்னமெடுத்தூதினான்

## அருச்சுனன் யுத்தம்.

வில்லெடுத்து நாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
விட்டான் ஒருபாணம் விண்ணதிரமண்குலுங்க
விண்ணதிரமண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
மற்றுமொருகணையை மறுகணையைத்தான் தொடுத்தான்
இன்னமொருபாணம் எடுத்துவிட்டானிந்திரனும்
திஷ்டோதிரன் பார்த்து சிந்தைகலங்கினான்
மற்றுமொருகணையை மறுகணையைத்தான் தொடுத்தான்
அக்ரோணிசேனைகள் அடங்கலும்பட்டார்கள்
ஒருமிக்கப்பட்டார்கள் உத்தமனார்சேனைகள்
சண்டைக்குவல்லையென்று சலாம்பண்ணியேபோவாராம்
பிச்சைக்குவந்தோமென்று பூணூலைக்காட்டிடுவார்
நாமத்தைக்காட்டுவாரும் நான்தாதனென்பாரும்
பூணூலைக்காட்டுவாரும் பிராமணனென்பாரும்
அஞ்சுவயதுடைய அருச்சுனனுந்தான் பார்த்து
மற்றுமொருகணையை மறுகணையைத்தான் தொடுத்தான்
இன்னவருஞ்சிலைகணையை யெடுத்தானே இந்திரனும்
விட்டான் சிலைகணையை விண்ணதிரமண்குலுங்க
மண்ணதிரவிண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
சிந்தைகலங்கிடவே திஷ்டோதிரன் பார்த்து

## திஷ்டோதிரன் தோற்றது.

கால்நடுங்கக்கைநடுங்கக் கட்டழகன்வீரியனும்
சொலைகள்நடுங்கிடவே குப்புறவேதான்படுத்தான்
தேரின்மேலேதான்படுத்தான் திஷ்டோதிரப்பெருமான்
அஞ்சுவயதுடைய அருச்சுனனுந்தான் பார்த்து
நெற்றிக்குநேர்பிடித்து விட்டானொருபாணம்
வந்தசிலபாணம் வல்லிடிபோலேவிழுந்து
திஷ்டோதிரனும் தோற்றான் சிரமற்றான்
தோற்றான் சிகரமற்றான் தேர்ப்பாகன் முடியுமற்றான்
உராசு அற்றான் அணியற்றான் அம்புறாத்தூணியற்றான்
தேரைவிட்டுக்கீழ்குதித்து திருடன்போலோடுகிறான்
தேருமுடைந்தது செம்பரிசெத்தது
ஒருத்தனாய்ஓடுகிறான் உத்தமனார்வீரியனும்
பதாதியாய்ஓடுகிறான் பாவிதிஷ்டோதிரனும்
திஷ்டோதிரன் ஓடுவதை சிறுவனவன் பார்த்து
அஞ்சுவயதுடைய அருச்சுனனுமேதுசொல்வார்
போகாதேபோகாதே போர்மன்னா போகாதே
முன்னையும்பூசை முதற்பூசைவந்தாயே
சண்டைபண்ணிவெல்லாமல் போகலாமோதார்வேந்தா
மின்காட்டப்பின்கொடுத்து போகாதேபுண்ணியனே
இப்படியாகச்சொல்லுகையில் ஓடுகிறான் திஷ்டோதிரன்

அப்போதுஅருச்சுனரும் ஆணை நாமே துசொல்வார்
போகுந்துபோகாதே புண்ணியனேபோகாதே
பகர்காவில்பெற்றெடுத்தப் பிடுக்கனேபோகாதே
அந்தவண்ணன்பெறபெற்றெடுத்த ஆணழகாஓடாதே
குருடனவன்பெற்றெடுத்த குலக்கொழுந்தேஓடாதே
கண்ணிலான்பெற்றெடுத்த கட்டழகாஓடாதே
உன்னையர்திருவாணை கண்டாய் ஆச்சிமேலாணைகண்டாய்
அண்ணன்மேலாணைகண்டாய இனிதிரும்பிஓடாதே
அண்ணன்மேலாணையென்ன அஞ்சிப்பயந்தானே

இஷ்டோதிரன் அர்ச்சுனனைக்கேட்டுக்கொள்கிறது.

ஆயுதத்தைக்கீழ்போட்டு அடியேன்சரணமென்றான்
உன்புண்ணியத்திலேமேல் பிழைத்தோடிப்போறேனென்றான்
தருமத்திலேமேல் பிழைக்கவழிபாருமையா
அந்தவயதுடைய அருச்சுனருந்தான் கேட்டு
அவ்விருக்குமன்னவர்க்கு ஆணழகனேதுசொல்வான்
சமர்த்துள்ளவீரியன்போல் சண்டைபண்ணவந்தானே
எல்லைக்கெலியாமல் ஏன திரும்பிஓடுகிறான
அப்படிக்கொத்தஒரு வாணழகன்வீரியனை
வெட்கங்கெடுக்கவேண்டும் வேந்தர்சபைநடுவே

இஷ்டோதிரனை அர்ச்சுனன் பண்ணிவடிவாக்கி
பாட்டன்மார்க்கனுப்புதல்.

மானங்கெடுக்கவேண்டும் மன்னவர்கள்மண்டபத்தில்
பங்கப்படுத்தவேண்டும் பாட்டனுக்கனுப்பவேதான்
என்றுமவனுரைத்து எழுந்திருந்தார் அர்ச்சுனனும்
வெள்ளைக்கொடியறுத்தான் உத்தமனார்வீரியனும்
பச்சைக்கொடியறுத்தான் பாலனருச்சுனரும்
இஷ்டோதிரன்கைகாலை சிறுவனவன்பிடித்து
கால்கட்டுங்கைகட்டுங் கட்டியந்தகாவலனும்
அசையாமல்கட்டினான் ஆனந்தவாழ்மார்பன்
நாலுகால்மத்திமேல் நடுவேவொருகொம்பைவிட்டு
பண்ணிவடிவாக பார்த்தனேசோடித்து
கூர்மவடிவாகக் கொற்றவனைச்சோடித்து
தானவென்றுசாபம் இடுகிறானருச்சுனனும்
கட்டவிழ்க்கவந்தவொரு காவலனோர்அத்தனையும்

இஷ்டோதிரனுக்குச் சாபம்.

தச்சன்கருமான் மறிந்தசிப்பாச்சாரி
மந்திரிபிரதானிகள் மற்றுமுள்ளராசாக்கள்
கட்டவிழ்க்கவந்தவொரு கனமுள்ளவீரியரும்
ஓட்டிக்கொண்டுபோகவென்று உத்தமனுஞ்சாபமிட்டான்
ரெட்டுவெந்தமன்னரெல்லாம் ஓட்டிக்கொண்டுபோகவென்றான்
எந்தன்வம்சித்தார்வந்து தொட்டால்விட்டுவிடோனென்று

தூதுவரைத்தானழைத்து தூக்கிடவுமென்றான்
நாலும்பேர் தூதுவர்கள் நன்றாகத்தானெடுத்தார்
போய்வாருமென்று பொருந்திவிடைகொடுத்தான்
நாலும்பேர் தூக்கி நடந்தார்கள்வீதியிலே
அந்த அந்தவீதிகளில் வாழுகின்றபலைவர்கள்
இதுஎன்னகோரமென்று எல்லவரும்வோடிவந்து
கட்டையவிழ்த்தார்கள் காவலரைவீரியர்கள்
குய்யோமுறையோவென்று கூவினார்மன்னவர்கள்
ஐயையோதெய்வமென்று அலறிப்புலம்புகிறார்
அந்தத்தெருதாண்டி மற்றுமொருவீதியிலே
தச்சன்கருமான் தாமறிந்தசிற்பாசாரி
மந்திரிபிரதானி மற்றுமுள்ளராசாக்கள்
கட்டவிழ்க்கவந்தார்கள் காவலராவீரியர்கள்
தொட்டுஅவிழ்த்திடவே ஓட்டிமிகநடந்தார்கள்
ஒருஅக்ரோணிசேனையுடன் உத்தமர்கள்போறார்கள்
குய்யோமுறையோவென்று கூச்சலிட்டுப்போறார்கள்

திரியோதிரனம்பலத்தில் போய்விழுந்தது.

தேசத்தையாளுந் திரியோதிரன சபையில்
அம்பலத்துவாசலிலே எல்லவரும்போய்விழுந்து
அங்கிருக்குமன்னவர்கள் அரையர்துரைகளெல்லாம்
குஞ்சிரிப்புக்கொண்டு குலுங்கநகைத்தார்
தட்டிநகைத்தார்கள் தாமமுடியார்கள்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
மன்னன்மனஞ்சலித்து மறுமம்வெளிப்பட்டு
தலைகுனிந்துவீற்றிருந்தான் தாமமுடியானும்
துய்யகளத்துதித்த துரோணரவர்பார்த்து
அங்கிருந்ததூதுவரை யாணைமுகர்தான்பார்த்து
காஞ்சிநாடாளும் கருணரைக்கூப்பிடென்றார்

தூதுவன் கருணரைக்கூப்பிடுகிறது.

தூதுவனுந்தான்கேட்டுத் தொழுதிரங்கிதெண்டனிட்டு
அருளருளுமென்னையா அப்படிக்கேயாகுதென்று
எட்டடியுமோரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியுமோரடியாய் பற்றிவழிநடந்து
காஞ்சிநாடாளுங் கருணருக்குத்தெண்டனிட்டான்
தெண்டனிட்டதூதன் திரும்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதான்
காஞ்சிநாடாளுங் கருணரவர்நடந்து
காஞ்சிநாடாளுங் கருணரவர்பார்த்து
நீயாருடையதூதன் அறியவுரையுமென்றான்

பாருடையதூதல்ல அடியேனுன் தூதன்
அம்பலத்தார்தூதரென்று அடிவணங்கிதெண்டனிட்டான்
சேதிங்கேவந்த தெனக்கறியக்கூறுமென்றான்
ஐயர்குலத்திலே துரோணக்குருக்களும்
உடமையழைத்துவரக் கட்டளைகளிட்டார்காண்
அரைநாழிபோதே அழைத்தோடிவாருமென்றான்
வாருமையாவென்று வருந்தியேதெண்டனிட்டார்
இனேரமங்கே யிருந்துநான்வந்தேன்
நானறியாக்காரியங்கள் வுண்டோடா நாயகனே
ஏதுவகையா என்னை வரவழைத்தார்
வரவழைத்தகாரியங்கள் வாய்திறந்துசொல்லுமென்றான்
அப்போதுதூதனும் அடிவணங்கியேதுசொல்வான்
என்னமோ ஏதோ எனக்கொன்றுந்தெரியாது
ராசாக்கள்காரியங்கள் நமக்குவெளிப்படுமோ
சத்திரியாகாரியங்கள் சலக்கம்வெளிப்படுமோ
மந்திரிகள்காரியங்கள் மறுமம்வெளிப்படுமோ
வருகவருகவென்று வருந்தியேதெண்டனிட்டான்

கருணாதிரியனம்பலத்துக்குப்பயணப்பட்டுவருகிறது.

காந்திராடாளுங் கருணரெழுந்திருந்து
பூந்துமெரிவடிவைத் தொட்டுமிகநடந்து
அம்பலத்துவாசலிலே ஆணழகன்வந்திருந்து
ஐயர்குலத்திலே துரோணரவர்பார்த்து
கருணர்பெருமாளுக்குக் கண்சாடைகாட்டினார்
காந்திராடாளுங் கருணரதுவறிந்து
இவ்விடோதிரனறிய நிட்டெனவேவந்து
அப்போதுசொன்னேனே தப்புவருமென்றுசொல்லி
முன்னமேசொன்னேனே மோசவருமென்றுசொல்லி
என்பேச்சைக்கேளாமல் எழுந்துநடந்தீரே
அறியாதானென்றுசொல்லி அமருக்குப்போனீரோ
அமருக்குப்போனிடத்தே அவகேடுகண்டீரே
சண்டைக்குப்போனிடத்தே சதிசெய்தான்கண்டீரோ
காந்திராடாளும் கருணாவருமரத்து
சட்டைபணிந்தாரே காவலனார்வீரியரும்
அவர் அக்ரோணிசேனைகளும் உத்தமனார்வெளியானார்
காலுதறிக்கையுதறிக் கடுகவழிநடந்தார்
அவரவர்மாளிகைக்கு அவரவர்போய்ச்சேர்ந்தார்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
போராஞ்சாமன்னர் புனந்திரவீரியரும்
காந்திராடாளுங் கருணருடவீதிவிட்டு

புனந்திரர் தற்சபைவீதிவருகிறது.

மறுசொருவீதியிலே வாரார்புனந்திரரும்

ஏழாங்கிலேயும் எழுங்கிலேயுமேலேறி
மேலாங்கனத்தை விடுகதவைத்தாள் திறந்து
மலேமாணிவாசல் துறந்தந்தபைங்கிளியும்
மாசிப்படியேறி கனக்கமிதிதேறி
மழைப்படிமிதித்து பைங்கிளியும்பார்த்திருந்தாள்
போரந்தசமன்னர் புலேந்திரனார்சிரவடிவை
அரையில்சொருகழுதும் அம்பொன்னார்சிரவும்
கத்திச்சொருகழுதும் கச்சுகட்டுவுள்மருங்கும்
கச்சுகட்டுவுளமருங்கும் கனிவாயும்பொழுதும்
காசிவளநாடாளுங் கர்ணனுடசிர்வடிவும்
காஞ்சிவளநாடாளுங் கர்ணர் திருவழகும்
தக்கப்புகழுடைய தர்மரிடமேனிகளும்
வெற்றிமதயானை வீமருடகால்நடையும்
கண்டாலமெரித்தக் காளையுடைகவிச்சும்
காமமுடியான் நகுலனிடையழகும்
தாமமுடியான் சகாதேவன் பூமுடியும்
ஆறுபேர்தன்னழகை பெற்றவந்தான் ஆளழகன்
அடியாருடன்பிறந்த நூற்றொருவர் அரசர்கள்
கூடத்துடன்பிறந்தார் இளவிசைபர் நூற்றொருவர்
நூற்றொருவர்ராசர்களும் இவனுக்குளதிரவே
நூற்றொருவர்பெழுதும் இவனழகுக்கீடாமோ
காஞ்சிநாடாளுங் கருணருமீட்டலவே
சல்லாணப்போலே யிருக்கிறுனிந்திரனும்
மன்மதனைப்போலே யிருக்கிறுன்மன்னவனும்
மாதுமணவாளன் மன்மதன்போல்தோணுது
கலந்தாரிக்கேத்தவன்காண் கட்டழகன்சிர்மகனும்
மாதுக்கிசைந்தவன்காண் மணவாளன்பெற்றபிள்ளே

தாதிகள் ஆலாத்திசுத்திகாட்டுகிறது.

கண்ணேச்சல்கண்ணேச்சல் காவலனர்வீரியற்கு
ஆலாத்திக்காட்டுமென்றூர் அர்ச்சுனனார்புத்திரற்கு
அங்குமொருதாதி அறிவுடையாளோடிவந்து
இன்னமுறைபெந்தனது என்றுசொல்லித்தாதியவள்
முத்திலையாலத்தி வேணநூறுயிரமாம்
பவளத்தாலாலாத்தி வேணநூறுயிரமாம்
கற்பூர ஆலாத்திக் காட்டியந்ததாதிமார்
திருஷ்டிகழுட்டித் தெருவெங்கும்விட்டெறிந்தார்
ஆலாத்திகாட்டி அணியிழைமார்நீங்கிநின்றூர்
தோகைமயிலினையாள் துற்சடையாள்ளதுசெய்வாள்

மருமகன் வரவுகண்டு பள்ளியறைஜோடிக்கிறது.

தாமக்கருங்குழலாள் தாதிமுகம்நோக்கி
மாதுமணவாளன் வருவானேமாளிகைக்கு

பாக்கியவதிகளெல்லாம் பள்ளியறைசோடியென்றாள்
அக்குலதாதியர்கள் அறிவுடையாளோடிவந்து
சொல்லப்பெற்றோமென்று சுருக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றோமென்று கும்பிட்டெழுந்திருந்து
பள்ளியறைமண்டபத்தைப் பைங்கிளிமார்தான்திறந்து
எங்குகலங்கிட்டு எத்திசையும்நீர்தெளித்து
சாந்தால்தரைமெழுகி சந்தனத்தால்கோலமிட்டு
குங்குமத்தாலே குளிரத்தரைமெழுகி
கட்டில்மெத்தை கலக்கவிரித்துதறி
ஏழாயிரம்பொன்பெற்ற இந்திரவர்னப்பட்டுடுத்தி
இந்திரவர்னப்பட்டெடுத்து எங்குமலங்கரித்து
காம்பரிக்கனுங்கலப்பூ கட்டிலின்மேல்பரப்பி
பொன்னால்திரைவளைத்துப் பூமாலைசூட்டினார்
சன்னலிலேபன்னீரை சாடினாரெத்திசையும்
குடங்குடமாய்ப்பன்னீரைக் கொட்டித்தெளித்தார்கள்
செண்டிகையும்பூமலரும் வைத்தார்அழகாக
கிண்ணியிற்சந்தனமுங் கெண்டியில்தீர்த்தம்வைத்தார்
சச்சாயங்கொண்டுவந்து வைத்தார்கிளிமொழிக்கு
சோடித்தோமாச்சியென்று தொழுதிறங்கிதெண்டனிட்டாள்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
போரஞ்சாமன்னர் புலந்திரனார்வீரரும்
அந்தத்தெருதாண்டி மற்றுமொருவீதியிலே
மற்றுமொருவீதியிலே வாராளேமன்னவனும்
மாலைமுடியாரும் மன்னவனும்வாராளே
நின்றுநிலாவெரிக்கும் நீலமணிமண்டபமும்
நடந்தால்நிலவெரிக்கும் நீலமணிமண்டபமும்
பவளத்தால்கால்நிறுத்திப் பதிங்காதம்பந்தலிட்டு
முத்தாலேகால்நிறுத்தி முக்காதம்பந்தலிட்டு
கர்க்குப்பிளந்து இருபுறமும்பந்தலிட்டு
இப்படியாக இருக்குமந்தவீதிகளை
போரஞ்சாமன்னர் புலந்திருந்தான்பார்த்து
யாருடையவீதியென்றான் அல்லித்திருமகளும்

புலந்திரன்மாமனார் வீதிவருகிறது.

அங்கிருக்குமன்னவர்கள் அறைபாதுரையரெல்லாம்
கேட்டபுலந்திரற்கு கேள்விசொல்லமாட்டாமல்
நின்றபுலந்திரற்கு சொல்லவுமாட்டாமல்
நெஞ்சலர்ந்துசாவாரண்டு நித்திலங்கும்பூமுடியார்
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
மன்னர்முகங்கருகி வார்த்தைகளேதுசொல்வார்

பூஞாரிகைசத்தைப் புழுதிபடத்துடைத்து

கஸ்தூரி பிள்ளையை வரவழைத்தல்.

பட்டுத்துகிலாடை தொட்டுமேலுடுத்தி
அஞ்சுவயதுடைய அருச்சுனனைதானழைத்து
இவருக்குமுன்பாக அரசனைப்போகவிட்டு
மைந்தனைப்போகவிட்டு வார்த்தைபரிந்திடலாம்
பிள்ளையைப்போகவிட்டு பேச்சுபரிந்திடலாம்
ஆறிவிடும்ஆறிவிடும் ஆச்சியரே ஆறிவிடும்
தேறிவிடுந்தேறிவிடுந் தேவியரே தேறிவிடும்
கருநீலபூங்குழலாள் கஸ்தூரிநாயகமும்
அங்குமொருதாதியரை ஆணைக்குதானழைத்து
அஞ்சுவயதுடைய அருச்சுனவீரியனை

தாதி அழைக்கிறது.

அவனெங்கேயிருந்தாலும் எவ்விடத்திற்சென்றாலும்
அரைநாழிப்போதே அழைத்தோடிவாருமென்றாள்
அப்படிக்கேநல்லதென்று பணந்தவாழ்மாரி
போறாளவள்தாதி பொன்னுபாணமின்ன
பொற்சிறப்பங்கொல்லிடத்துப் போறாளவள்தாதி
தென்னமரச்சோலைத் திரும்பியந்தாதியரும்
மாமரச்சோலைவந்து மன்னவனைக்கண்டாளே
உப்புகந்தமாடுகிற உத்தமனைக்கண்டுவந்து
அமுதுபொசிப்பதற்கு யாச்சியழைத்தாள்காண்
வாருமையாசுந்திரரே வந்தமுதுகொள்ளுமென்று
தூக்கிமடியில்வைத்து துருசாய்வழிநடந்தாள்
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
தோகைமயிலனையாள் தூச்சடையாள்பாலிவந்து
கருநீலபூங்குழலாள் கஸ்தூரிமுன்னேவந்து
அஞ்சுவயதுடைய அர்ச்சுனனும்வந்தார்காண்

அர்ச்சுனர்க்கு போசனமிட்டு சிங்காரித்தல்.

அமுதுபடையுமென்றார் அனந்தவாழ்மாரி
கருநீலபூங்குழலாள் கஸ்தூரிதான்கேட்டு
அஞ்சுவயதுடைய அர்ச்சுனராசருக்கு
மஞ்சனீராட்டி மயிர்முடிந்துபின்போட்டு
கரமுலர்த்தி பிறைமசேர்ந்தபட்டுடுத்தி
சிராணநெற்றியிலே திருநீற்றுக்காப்புமிட்டு
கமலதிருமுகத்தில கஸ்தூரிபொட்டுமிட்டு
ஐவாதுமோதிரம் அழகுபெறச்சாற்றினர்
வட்டபதக்கங்களும் மார்நிறைந்ததாழ்வடமும்
தாளிபதக்கங்களும் சன்னல்பின்னல்தாழ்வடமும்

வையைவளநாடார் வருவாருன்மாளிகைக்கு
பாலமுர்தமுண்பதுவும் பத்தியுலாவதுவும்
அடிசல்சமைப்பதுவும் ஆலித்துவாழ்வதுவும்
உன்னறைக்கு ஆகட்டும் ஆச்சியரேயென்றுரைத்தான்
கருநீலப்பூங்குழலாள் சலந்தாரிதாம்கேட்டு
மைந்தருரைத்ததற்கு மாதாமனமகிழ்ந்து
உச்சிமுகந்துபின்னை உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கம்தடவி பவளவாய்முத்தமிட்டு
மைந்தரைத்தாணிக்கி வந்தானேமாதாவிடம்

அர்ச்சுனன் தற்சடையென்னும் பாட்டியரைக் காணுகிறது.

அஞ்சுவயதுடைய அர்ச்சுனராசாவும்
பாட்டியார்பாதமது பார்த்துவணங்கினின்றான்
தற்சடையாள்பாதம் செல்வன்வணங்கினின்றான்
தோகைமயிலனையுந் தற்சடையுந்தான்பார்த்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திப்பீருந்திருப்பீர்
நிற்பீர்நிலைநிற்பீர் தீரரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூணதுபோல் கலங்காதராசாள்வீர்
விற்பதித்ததூணதுபோல் விளங்காதரசாள்வீர்
வண்மைப்பெறுவீர் எதிர்ந்தார்முடிபெறுவீர்
பிள்ளைப்பெறுவீர் பெருமாளைப்போல்வாழ்வீர்
போருக்குப்போய்விடுவீர் பொருதோடவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டஞ்சேர்த்திடுவீர்
மாத்தானையென்றிடுவீர் மண்டலத்தையாண்டிடுவீர்
எதிரிகளைக்கொன்றிடுவீர் எல்லையரசாண்டிடுவீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினாள்
மைந்தனைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்தாள்

சின்னஅர்ச்சுனனுக்கு தற்சடையாள் தன்கணவனைக்
காப்பாற்றும்படி கூறுதல்.

அஞ்சுவயதுடைய அர்ச்சுனரேநீர்கேளும்
ஆரார்கள்பட்டாலும் அம்பலத்தார்பட்டாலும்
எவரெவர்கள்பட்டாலும் இளவரையில்மாண்டாலும்
நூலார்கடுந்திரளார் நூற்றொருவர்பட்டாலும்
காஞ்சிநாடாளுகிற கர்ணாவர்மாண்டாலும்
கண்மணியானதொரு சர்ணருமாண்டாலும்
தாலிதருவீரே சுவாமிபெருமானே
மங்கிலியம்வாங்கி வருவீரோமன்னவரே
வையைவளநாட்டான் வந்தாரோவுங்களையர்
உங்களையருக்கிப்போது அதிசயமாகியுரைத்து
மங்கிலியம்நிற்கவேதால் மரியாருமன்னவனே
தாலிசயரிருக்க வாந்தாரும்புன்னியனே
என்றுமைவருரைக்க எதுசொல்வானர்ச்சுனனும்

நல்லத்தனமாக நாயகிக்குத்தானுரைத்து
அவளையழைத்துப்போக வாலோசனைகள்செய்து
ஆயுதத்தைக்கீழ்போட்டு ஆணழகன்தேரேறி
துரிதமுடனாகத் தேரைநடத்தலுற்றான்
துரோபதையுந்தான்பார்த்து துடித்துமிகவெழுந்து
ஆயுதத்தைதானெடுத்து அன்னவேதானழைத்தாள்
இந்தாருமாயுதங்கள் என்றழைத்தாள் துரோபதையும்
மூன்றும்படியேறி கொடுத்தாளேமொய்குழலும்
அவளெட்டிக்கொடுக்கையிலே தட்டிநடத்திவிட்டான்
அப்போதுதுரௌபதையாள் அலறிப்புலம்பினாள்
குய்யோமுறையோவென்று கூச்சலிட்டுத்தானழுதாள்
கூச்சல்குரல்கேட்டு கொற்றவர்களோடிவந்தார்
அலறினசொற்கேட்டு ஐவர்களுமோடிவந்தார்
இவ்வுலகந்தானறியும் எம்பெருமான்தானறிவார்
மண்டலங்கள்தானறியும் மன்னர்கள்தானறிவார்
சோலைமலருடைய சொக்கரவர்தானறிவார்
உத்தன்மணவாளன் வந்தபெருங்கோலம்
கழுதைபாய்போகவிட்டார் கட்டழகர்வீரியர்கள்
பஞ்சவர்கள்பட்டதொரு பாடுகள்மெத்தவுண்டு
உங்களால்பட்டதெல்லாஞ் சொல்லிமுடியாது
உனக்குத்தாலிதருவேது எப்படிகாண்தையலரே
எல்லார்தாலிகளை அந்திக்குத்தாலே
பாட்டியேஉன்தாலி பகலிக்கறுப்பேனென்றான்
தோகைமயிலனையாள் துற்சடையுந்தான்கேட்டு

இன்னமருச்சுனன் சொல்லப்பாட்டி. புலம்புகிறது.

இதுக்கோதான்மன்னவனே இத்தனைபாடுபட்டேன்
பாலைமுடியாளும் மண்மேல்புரண்டழுதாள்
தாமமுடியாளுந் தரையில்புரண்டழுதாள்
கருங்குலைப்பூங்குழலாள் கலந்தாரியோடிவந்து
தொட்டிட்டோர் துகிலால்முகந்துடைத்து
வந்துவிழுங்கண்ணீரை வெண்பட்டால்தான்துடைத்து

கலந்தாரி தன்தாயார் துற்சடைக்கு சமாதானங்கூறல்.

அறியாதறியுமோ ஆனந்தவாழ்மார்பா
இதற்குள்ளபாரப்புத்தி எங்கேகற்றானர்ச்சுனனும்
வையவனாட்டனுக்கு மனமுருகச்சொல்லிடுவோம்
ஆறிவிடும்ஆறிவிடும் என்னாச்சிஆறிவிடும்
தேறிவிடும்தேறிவிடும் என்னாச்சிதேறிவிடும்
அந்திவையதனுடைய அர்ச்சுனனைத்தான்பார்த்து
திருஷ்டிகட்டினார் தேர்களுக்குநாலும்
பூமியைக்கிள்ளியல்லோ பொருத்திடைகொடுத்தாள்
போர்வாருமென்று பொருத்திடைகொடுத்தாள்

சின்ன அருச்சுனன் பாட்டன்மார்பேர் சொல்லுவதும்
பாட்டிமார் எழுபேரையும் தான்மாலையிட்டதாக
தாரைசின்ன மூதுகின்றது.

என்னவென்றானிருன் எழில்விசையன்போனவன்
பொய்யாதவாசகனும் புகழுடையதருமலிங்கம்
தக்கப்புகழுடைய தருமனென்றானிருன்
பாரியதிண்டோளன் பகலிடும்பன்பற்பிடுங்கி
சாடிப்பேன்வென்றவனும் நான்தானென்றானிருன்
கைலாசம்போயிருந்து சமர்த்தரைக்கண்டலவோ
பரமனுடையுத்தம்பண்ணி பாசுபதம்பெருபெற்று
பச்சைமடல்விரியும் பாளைவிரிபூமணக்கும்
பாஞ்சாலராசன் பூமணப்பந்தலிலே
பாசுபதம்பெருபெற்ற பார்த்திபனென்றானிருன்
வில்லைவளைத்து யிளங்கொடியைமாலையிட்டு
கண்விரல்பிடித்து கந்தரனென்றானிருன்
அம்பிவலமாக அரசாணிமுன்பாக
சாலுங்கரகமும் முன்பாகத்தாலிகட்டி
அரசாணிசுற்றிவந்து ஆண்பிள்ளையென்றானிருன்
அவனுக்கு-வாச்சமணவாளன் வந்தேனென்றானிருன்
சோரவளநங்கை சுபத்திரைநாயகியாள்
சந்நாசிவேஷங்கொண்டு சடுதியில்போயிறங்கி
மாயரனுமதியால் மங்கையரைத்தூக்கியல்லோ
ஒண்டிரதத்தோடே வுத்தமியைக்கொண்டுவந்து
மாலையிட்டுக்கொண்ட மணவாளனென்றானிருன்
தாலிகட்டிவந்த தனஞ்செயனென்றானிருன்
நாகமடந்தை நறுநுதலாள்நாயகியை
காண்டாவனமெரித்த கர்த்தர்வருகையிலே
வனமெரித்தவன்மைகளைக் கண்டந்தநாகேந்திரன்
எந்தன்வடிவுகளைக் கண்டநாகேந்திரனு
மாதாவைபெத்தவனுக்கு மாலையிட்டுத்தந்தார்கள்
தாராக்குழலாளைத் தாலிகட்டிவந்தேன்காண்
நாககன்னிக்கானதொரு கல்லியாணவாளன்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள் அல்லியற்கு
மாலையிடவேண்டுமென்று வந்தேன்மதுரையிலே
வேட்டைகளாடினேன் மெல்லியலாளுடனே
அம்புபொருக்கித்தந்தேன் ஆனந்தமாரியற்கு
காளியம்மன்கோயிலுக்கு காவுகொடுக்கவென்றாள்
அதுக்குபிழைத்தேன் ஆயருடபுண்ணியத்தால்
பூதக்கிடங்குதனில் போட்டுஅடையுமென்றாள்
அதுக்கும்பிழைத்தேனே ஆயருடபுண்ணியத்தால்
அங்கேஒருநாளில் ஆண்டிவடிவெடுத்தேன்

உங்கள்-அய்யருக்கம்மான் அவர்காணுமென்றுசொன்னான்
அஞ்சுவயதுடைய அருச்சுனருந்தான்கேட்டு
மோப்பிமகனோ முன்னமேசொல்லொணாதோ
அபியர்தபாலனுக்கு அப்போதேசொல்லொணாதோ
என்றவனைகோபங்கொண்டு எத்திலக்கும்பூமுடியான்
கோபித்துக்கண்சிவந்து கொல்லும்புலியதுபோல்
வேர்த்துவிரிவிரித்து விழிகள்சிவப்பேறி
அத்தனைகோபமெல்லாம் அடங்கியொருபுறமாய்
பூவும்புதுமலரும் பொன்னுமறுஅட்சதையும்
பன்னீருஞ்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பொன்னுமன்னோடானும் அன்னாருக்கெதிரில்வந்து
கொண்டுவந்தபூமலரைக் குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டான்
அறியாதான்செய்தபிழை ஐயாபொறுத்தருளும்
பார்த்தனவன்செய்தபிழை பாட்டாபொறுத்தருளும்
பொறுத்தருளவேண்டுமென்று பின்னொருகால்தெண்டனிட்டான்
இன்னம்பொறுக்கவென்று இனியொருகால்தெண்டனிட்டான்

பொன்னுமன்னோடான் அருச்சுனனை ஆசீர்வதிக்கிறது.

பொன்னுமன்னோடானும் அன்றுஅவர்பார்த்து
பூரித்திருந்தோனும் பொன்னுபரணபிள்ளை
தேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
அருச்சுனராசனை அவருமேவாழ்த்துகிறார்
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்தித்திருப்பீர்
நிற்பீர்செழித்திருப்பீர் நீராசையாண்டிடுவீர்
விற்பதித்தூணதுபோல் விளங்க அரசாள்வீர்
சக்தியைப்பெறுவீர் எதிர்த்தார்முடிபெறுவீர்
பிள்ளைப்பெறுவீர் பெருமாளைப்போலிருப்பீர்
போருக்குப்போய்விடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வெற்றநகரியிலே வீரபட்டங்கட்டிவைப்பீர்
ஆலேபோலேதழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திருப்பீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
வாழ்வீர்காணென்று மனதாரவாழ்த்தினார்
மைத்துனரைக்கொண்டு எடுத்துமடியில்வைத்து
வருகவருகவென்மன்னவா வருகவென்றார்
அதிகாரஅச்சுதரே அய்யாவருகவென்றார்
திருவருகபொன்வருக தேனேவருகவென்றார்

சங்கின்றமுத்தாஞ் சலாபமுடையவனே
ஐவர்க்கும் நூற்றுவர்க்கும் அழகானபேரமையே
அழகியசிர்கம்பனையாள் ஆச்சியுடபேரமையே
தோராவடிவழகி தூரௌபதையாள்பேரமையே
சோரவளநங்கை சுபத்திரையாள்கண்மணியே
மின்னொளிக்குளற்ற விளங்குங்குலக்கொழுந்தே
நாககன்னிக்கண்மணியே ராசாக்கரத்தினமே
பவளக்கொடியாட்குப் பட்சமுடையவனே
கோணநமாதவர்க்குக் குந்திக்குருமணியே
ஐயாவருகவென்று அர்ச்சுனரைத்தானெடுத்தார்
மைந்தரைக்கொஞ்சி மடிமேலேவைத்துக்கொண்டு
என்-ஐயன்சிறுகைத்தலத்தை யாரோடேயொப்பிடுவேன்
சினத்தார்கள்பூமுடியை செண்டாட்டமாட்டுங்கையோ
பகைத்தார்கள்பூமுடியை பந்தாட்டமாட்டுங்கையோ
மூத்தோர்கள்சொல்லை முடிமேலேவைக்குங்கையோ
இளையோர்கள்சொல்லை எடுத்தெறியுங்கைகளிதோ
என்-ஐயன்சிறுகைத்தளத்தை யாரோடேயொப்பிடுவேன்
தக்கப்புகழுடைய தருமரேவாருமையா
வெற்றிமதயானை வீமரேவாருமையா
பாசுபதம்பேறுபெற்ற பார்த்தரேவாருமையா
நாமமுடியான் நகுலரேவாருமையா
தாமமுடியான் சகாதேவாவாருமையா
என்-ஐயன்சிறுகைத்தளத்தை யாருடன்ஒப்பிடுவேன்
பச்சைமடல்விரியும் பாளைவிரிபூமணக்கும்
பாஞ்சாலமகாராசன் சுயமணப்பூப்பந்தலிலே
வில்லைவளைத்துமாலையிட்ட விஜயருமீர்தானோ
பாஞ்சாலிதன்னுடனே பந்தல்மணம்பொருந்தி
கண்விரல்பிடித்த சுந்தரரும்நீர்தானோ
அரசாணிசுத்திவந்து அம்மிமிதித்தீரோ
அருந்ததிபார்த்தீரோ ஆனந்தவாழ்மார்பன்
எம்மாதாளைமாலையிட்ட மன்னவனும்நீர்தானோ
துரோபதையைமாலையிட்ட சுந்திரரும்நீர்தானோ
என்னாச்சிமணவாளர் ஐவர்களும்நீர்தானோ
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நீர்தானோ
மதுரைக்குவந்திருந்து மங்கையரைமாலையிட்டு
அவளைமணம்புரிந்த அணைழகர்நீர்தானோ
அல்லிமணவாளன் அருச்சுனரும்நீர்தானோ
சோரவளநங்கை சுபத்திரையாளென்னாச்சி
சந்நாசிவேஷங்கொண்டு சடுதியிலேவந்திறங்கி
ஒண்டிரதத்தோடே வத்தமியைக்கொண்டுவந்து
மயக்கமடலூர்ந்த மணவாளர்நீதானோ

மேகம்பரிந்தெடுத்த மின்னொளியாளென்னாச்சி
மின்னொளியைமாலையிட்ட வேந்தனும்நீர்தானோ
நாகம்பயின்றெடுத்த நாககன்னியென்னாச்சி
அந்தக்கன்னியைமாலையிட்ட காளையரும்நீர்தானோ
பொற்கலசவாழ்முலையாள் போகவதியென்னாச்சி
போகவதிக்கேற்ற புருஷனும்நீர்தானோ
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடி என்னாச்சி
பவளக்கொடிக்கேற்ற பாண்டியனும்நீர்தானோ
என்னாச்சிகளைமாலையிட்ட ஆணழகர்நீர்தானோ
என்ஐயன் இருகைத்தலத்தை எவரோடேயொப்பிடுவேன்
இவருடையகைத்தலத்தை எவரோடேயொப்பிடுவேன்

சின்ன அருச்சுனன்குழந்தையில்பழகிய ஆட்டங்களை
தகப்பனுக்குமுன்பாக ஆடுகிறது.

அஞ்சுவயதுடைய அருச்சுனரேநீர்கேளும்
நீ-பதியாதநாளையிலே ஆச்சியருமிருந்து
உன்தாச்சியவள்காண ஆடின ஆட்டமெல்லாம்
இந்திரனார்பேரனையே எனக்குமெள்ளகாட்டுமென்றார்
அருச்சுனனார்பேரனையே யருகில்மெள்ளவாருமையா
அஞ்சுவயதுடைய அருச்சுனருந்தான்கேட்டு
மடியைவிட்டேகீழிறங்கி வந்துமெள்ளவதுசொல்வார்
மாராஸ்நகத்து மண்மேல்தவழ்ந்து
முன்னகர்ந்துபாயுறதும் பின்னகர்ந்துபாயுறதும்
தவழ்ந்துவிளையாடுவதுந் தானேநடிக்கிறதும்
எட்டிஎட்டிப்பார்க்கிறதும் எகிறிநடக்கிறதும்
தும்பிபறக்கிறதும் தும்தூவாலடிக்கிறதும்
பண்டிப்பிறக்கிறதும் பாலடிசலுண்ணுகிறதும்
போரஞ்சாமன்னர் புனந்திரனார்தான்பார்த்து
மைந்தர்முகம்பார்த்து சிந்தைகலங்கினார்
மாதாவைத்தானினைந்து மன்னருருகிறார்

புனந்திரன் விசனப்படுகிறது.

காணாதேஎன்னாச்சி கண்ணற்றுளானேனே
பாராதேஎன்னாச்சி பாவியாளானேனே
குன்றின்மேற்பெய்த மழையானேன்மாபாவி
குடத்திலேயிட்ட விளக்கானேனென்னாச்சி
காட்டிலேகாய்ந்த நிலவானேன்மாபாவி
கடலிற்கரைந்தப் புளியானேனென்னாச்சி
என்று-இந்திரன்மன்னன் இருகண்ணில்முத்துதிர்த்தான்
பொன்னுமலைநாடாளும் அண்ணாவுமேதுசொல்வார்
ஏன்காணும்மன்னவரே இந்தமதியுந்தனுக்கு
எந்தகருமம் முடியுங்காண்இந்திரனே
வந்துவிழுங்கண்ணீரை வெண்துகிலால்கண்துடைத்து

மைந்தரைக்கண்டுடைத்து வன்காறுமன்னவனே
புத்திரரைக்கொஞ்சி வடுங்காறுமன்னவனே
போரஞ்சாமன்னர் புனக்திரருந்தான்பார்த்து
அஞ்சுவயதுடைய அருச்சுனரைத்தான்பார்த்து

மறுபடியும் சின்ன அருச்சுனனை புனக்திரன்மடிமேல்வைத்து
சேலைகளைந்தவரலாறு கேட்கிறது.

வண்ணமடிமேலே வைத்தார்புனக்திரரும்
அஞ்சுவயதுடைய அருச்சுனரேநீர்கேளும்
சேலைகளைந்துவந்தீர் யாருதுகாண் இந்திரரே
கூறையிதுயாருதுகாண் கொற்றவரேசொல்லுமென்றார்
அஞ்சுவயதுடைய அருச்சுனருமேதுசொல்வார்
ஐயாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னையாநீர்கேளும் அடியேனொருவார்த்தை
திரியன்சபையைவிட்டுத் திரும்பிவருகையிலே
வெள்ளானைமேலேறி வீதிவருகையிலே
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்மாளிசென்றேன்
உள்ளேநுழைந்தேனே ஒருகோடிசேனையுடன்
திஷ்டோதிரன்தேவி திருவினையாள்நாயகியாள்
தனியாகவீற்றிருந்தாள் தாமமுடியாளும்
அவளாடுங்குழல்பறித்தேன் அம்மான்மார்தான்பறித்தேன்
பச்சைகழல்பறித்தேன் பன்னாங்குழிபறித்தேன்
கொம்பனையாளோடுமல்லோ கொஞ்சுங்கிளிபறித்தேன்
பெண்பெருமாளோடுமல்லோ பேசுங்கிளிபறித்தேன்
பாட்டன்விளையாடி பரியாசப்பண்ணப்போல்
சிரித்துவிளையாடி சேலைகளைந்துவந்தேன்
ஆடம்பலத்தே அவ்வையார்சபைநடுவே
பேரம்பலத்தே பெரியோர்சபைநடுவே
ஆரணங்கைக்கொண்டுவந்து அம்பலங்களேற்றிவைத்தான்
துரோபதையைக்கொண்டுவந்து துரைகள்சபைநடுவே
சொல்லாதுஞ்சொல்லித் துகிலுமுரிந்தானே
பேசாதும்பேசிப் புடவையவிழ்த்தானே
அந்தவிசேஷம் அதுகொண்டுசிந்தையிலே
படைகூட்டந்தன்னுடனே பற்றித்துகிலுரிந்தேன்
எதிராளிசெய்த இடும்பைதான்தீர்த்துவைத்தேன்
பங்காளிசெய்த பருவங்கொலைத்துவைத்தேன்
அய்யாவேவுந்தனுக்கு அடையாளங்கொண்டுவந்தேன்

சின்ன அருச்சுனன் அடையாளங்காட்டுகிறது.

இதோபாருமென்று யெடுத்தான்துயிலாடை
போரஞ்சாமன்னன் புனக்திரனார்தான்பார்த்து
குழந்தையைத்தானெடுத்து கொஞ்சிமடியில்வைத்து
சந்தன்குலம்விளங்க வந்துதித்தாத்தினமே

பெற்றகடனுங் கழித்துவிட்டேன் புண்ணியர்க்கு
என்றுமவனுரைக்க இந்திரனுந்தான்கேட்டு

புலந்திரன் விசனப்படுகிறது.

நல்லிரவு நடுச்சாமவேளையிலே
பாதியிரவு பதினைந்துநாழிகையில்
காசிநாடாளுங் கர்னருடகாவல்விட்டு
கட்டிகத்திவாங்காத இடிமன்னர்காவல்விட்டு
அவள்-கட்டைநான்சோதித்துக் காவலதுவழித்து
கன்னியிடந்தேடிக் கனவிளரிலவந்தேனே
மங்கையரைநான்தேடி மதிலேறிசென்றதுவும்
கன்னியருந்தானுங் கலந்துவிளையாடினதும்
கலந்துவிளையாடிக் காளையைப்பெற்றெடுத்தோம்
ஆளப்பிறந்த அபிமன்னராசாவும்
அஞ்சுவயதுடைய அருச்சுனரைப்பார்த்ததில்லை
பிள்ளையில்லையென்றுசொல்லிப் பூரித்துக்கண்டதில்லை
ஆளப்பிறந்த அபிமன்னராசாவும்
சிற்றப்பாவென்றுசொல்லி சிரித்துவிளையாடவில்லை
ஐயரென்றுசொல்லி ஈதியானருச்சுனனும்
கொள்ளிக்கோபிள்ளை கொடுத்தாரமனதேளர்
என்றுசொல்லிமன்ன னிருகண்ணுக்முத்துதிர்க்கான்

பொன்னுமங்கைதானே புலந்திரற்குசமாதானஞ்சொல்லுகிறது.

எங்காளுமன்னவனே யிந்தமதியுந்தனக்கு
வந்ததருமம் முடியுக்கான் மன்னவனே
வந்தவிழுங்கண்ணீரை வென்றுகொற்றனுதுடைத்து
கொற்றவனுர்கோபம் குணப்படுத்தி கொண்டணைத்து
மன்னவனுர்கோபம் வசப்படுத்தியானபின்பு
பிள்ளையைக்கொஞ்சியனுப்புங்கான் மன்னவரே
போரஞ்சாமன்னன் புலந்திரனுந்தான்கேட்டு
அஞ்சுவயதுடைய அருச்சுனரைத்தான்பார்த்து
வாரியெடுத்துமடிமேலே கொண்டணைத்து
அஞ்சுவயதுடைய அருச்சுனரைச்சேர்த்தும்

புலந்திரன் பிள்ளைக்குப்பாட்டன் வலுமையுரைக்கிறது.

இன்னமுமமூன்றுகாலொருபொழுது முடிமன்னராகுவது
நாலானதம்முது ஆருக்காண்ராச்சியங்கள்
நூலாற்கடுத்திரளார் நூற்றொருவர்பூமுடியும்
காஞ்சிநாடாளுங் கர்னருடபூமுடியும்
தங்கைமணவாளன் தறுதலையின்பூமுடியும்
சாமத்துரோகி சகுனியுடபூமுடியும்
ஐவர்பஞ்சபாண்டவர்கள தமாக்கிப்போட்டிடுவார்
அத்தனைபோ பூமுடியும் கிள்ளியெறிக்கிடுவார்
அப்போது அத்திபுரம் அடங்கலுமுனதுகாண்

மல்லாடிவந்தவன் மைந்தனையழைக்கலாமோ
அழைத்துக்கொண்டுபோகச் சூதாதுமன்னவனே

சின்ன அருச்சுனனுக்கு சமாதானஞ்சொல்லி
யானைசேனை பரிவாரங்கொடுக்கிறது.

நல்லதனத்தாலே பிள்ளைமனத்தேற்றி
குளிர்ந்தமொழியாலே குழந்தைமனந்தேற்றி
கொடுத்தான்குமாரருக்கு கூடைவளநாடு
கொல்லுங்குதிரைகளாங் கூர்வாளாம் அம்புகளாம்
வெற்றேலைப்பெண்களிலே பேனை நூறாயிரமாம்
பச்சேலைப்பெண்களிலே பத்துநூறாயிரமாம்
கொடுத்தான்குமாரனுக்கு கூடைவளநாடு
ஆனையொருகோடி அணிமன்னர்முக்கோடி
குதிரையறுகோடி கொற்றவர்கள்முக்கோடி
ஒட்டையறுகோடி முடிமன்னர்முக்கோடி
எறிவிளையாட எழிலானபொன்னூலை
குத்திவிளையாட குதிரைசதுர்ப்பொன்னூலை
இத்தனையுந்தான்கொடுத்தா னிந்திராசனும்
போய்வாருமென்று பொருந்திவிடைகொடுத்தான்

சின்ன அருச்சுனன் தாய்வீடுவருகிறது.

விடைபெற்றெழுந்தாரே வேந்தர்பெருமானும்
வீரமதயானை வெள்ளானைமேலேறி
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனஞ்சென்றேறினார்
அவ்வீதிவீதி நடந்தான் அழகாக
மற்றுமொருவீதி மன்னவனுந்தாண்டி
கலந்தாரிமாளிகையில் கட்டழகன்வந்துநின்றான்
யானைவிட்டுக்கீழிறங்கி ஆரக்கவாழ்மார்பன்
யானையுஞ்சேனையும் அனுப்பிவிடைகொடுத்து
வாளுருவிக்கைபிடித்து வல்லயத்தைத்தோளிலிட்டு
ஓடமயில்கண்ணனும் உட்கட்டுபோய்ப்புகுந்து
மாதாவின்முன்னேவந்து மன்னவனுந்தெண்டனிட்டான்
கருநீலப்பூங்குழலாள் கலந்தாரிதான்பார்த்து
வாழ்த்திவிடைகொடுத்து மாதாவுமென்னசொல்வாள்

கலந்தாரி பிள்ளையை வாழ்த்துகிறது.

வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீருத்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் சீரரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போலே சலங்காதரசாள்வீர்
தன்னைப்பெறுவீர் எதிர்த்தார்முடிபெறுவீர்
பிள்ளைப்பெறுவீர் பெருமாள்பதம்பெறுவீர்
போருக்குப்போய்விடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவீர்

தெண்டனிட்டபெண்ணை சேர்த்துமலவெடுத்தார்
மைந்தரைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்தார்
எந்தன்முகம்பார்த்து ஏதுசொல்வாரிந்திரரும்
சிறப்பாசெத்ததுவும் சேதிதெரிந்ததுவும்
மாண்டுமடிந்ததுவும் வைகுந்தஞ்சேர்ந்ததுவும்
ஆச்சிகலந்தாரி யழுததுவுந்தின்றதுவும்
அத்தனையுஞ்சொல்லுமென் றுரைத்தவாழ்மார்பன்
ஐயர்முகம்நோக்கி அடியேனுமேயுரைத்தேன்
ஆளப்பிறந்த அபிமரும்பட்டதுவும்
முத்துமுடிதரித்த முடிமன்னர்காண்பதுவும்
சந்தனக்கட்டை தனிக்கட்டைதானடுக்கி
குங்குமக்கட்டை யடுக்கியந்தக்கொற்றவர்க்கு
கொள்ளிகள்வைத்துக் குடங்களுடைத்ததுவும்
ஒத்தவொருபொழுது சோறுண்டிருந்ததுவும்
அத்தனையுந்தானுரைத்து அடியேனும்வாரேனென்றேன்
மதுரைக்குடன்னுடனே மன்னவனேவாறேனென்றேன்
அய்யாதுகேட்டு ஆணழகர்ஏதுசொல்வார்
நாலார்கடிக்கிராமர் நாற்பெருவர்பூமுடியை
நாற்பெருவர்பூமுடியை நறுக்கஅடித்தபின்பு
வீமனார்தண்டாலும் விசையனார்வாளாலும்
விசையனார்வாளாலும் வெட்டிமடிப்பதற்கு
மூன்றுநாளுக்குள்ளே முடியுங்காண்மன்னவனே
மூன்றுநாளார்பொழுது முடிமன்னர்ஆறுவது
நாலாநாளங்கனது ஆருபாராச்சியங்கள்
ஆனையுஞ்சேனையும் அனுப்புகிறேனென்றுசொன்னார்
ஆச்சியும்நீயும் அடிபிடித்துவாருமென்று
ஏறினையாட எழிலானைத்தான்கொடுத்தார்
குந்தினையாட பொன்குனைத்தான்கொடுத்தார்
அம்மானார்பக்துகளும் அத்தனையுந்தான்கொடுத்தா
போயவாருமென்றுசொல்லிப் பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றுமீண்டுவந்தேன் வேந்தர்பெருமானும்
இதுதான்நாதுமைகண்டீர் எழில்விசையன்மருமகனே
போனஅதிசயங்கள் புதுமையிதுகாணும்
என்றுமவருரைத்தார் இந்திரனருச்சுனரும்
கலந்தாரிதான்கேட்டு கட்டழகிமனமகிழ்ந்து
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
போரஞ்சாமன்னர் புனந்திராசாவும்

புனந்திரன் திரியன்வீதி வருகிறது.

அந்தத்தெருதாண்டி மற்றுமொருவீதியிலே
மற்றுமொருவீதியிலே வாராரேயிந்திரரும்
ஊதிரன்சின்னம் உலகேழுலகதிர

தெண்டனிட்டதாதி திரும்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
போரஞ்சாமன்னர் புனத்திரருந்தாயைபார்த்து
போய்வந்தகாரியங்களை புதுமைகளத்தனையும்
என்னைப்பெற்றதந்தையர்கள் என்னென்னசொன்னார்கள்
ஒன்றும்ஒளியாமல் உத்தமியேசொல்லுமென்றார்
தாமக்குழலாளுந் தாதியவளேதுசொல்வாள்
உன்னைப்பெற்றதந்தையரும் மெத்தபிணங்கினார்
சொன்னதெல்லாந்தான்கேட்டு சிறையிலடையுமென்றார்
கட்டழகாயெந்தனுக்கு கால்விலங்குபோடுமென்றார்
அந்தவிசேஷம் அதுகேட்டுவந்தேனென்றாள்
போரஞ்சாமன்னர் புனத்திரனுமேதுசொல்வார்

புனத்திரர் தாதிக்குத்தேற்றதலுரைப்பது.

மூன்றுநாளாய்பொழுது முடிமன்னராவது
நாலாநாள்நம்மது ஆருதுபாராச்சியங்கள்
பார்த்தன்கையம்பாலே பட்டுவதுநிச்சயங்காண்
வீமர்கையம்பாலே வேந்தர்மடிந்திடுவார்
மன்னர்கையம்பாலே மாண்டிடுவாரெல்லோரும்
தருமருக்குமிப்போது சனியன்ஒழிந்தது
வீமருக்குமிப்போது விதிஒழிந்தது
ஐவருக்குமிப்போது அடுத்ததுநற்காலம்
மாதுமயிர்முடிக்க நாளாச்சுமங்கையரே
கோதிகுழல்முடிக்க நாளாச்சுமங்கையரே
பத்தினியாள்சாபம் பலித்ததுஇவர்களுக்கு
உத்தமியாள்சாபம் உடனேபலித்தது
சிறையிட்டயிந்திரனும் குன்றமிட்டுத்தானழுதான்
காலனுயரவந்து கங்கைவாவென்றானே
ஏமனுயரவந்து இங்கேவாவென்றானே
இன்னஞ்சிலகாலமிருந்தாலசையாளாமல்
நாளைதெரியுதுகாண் ராசர்படைபோறதெல்லாம்
பின்னைதெரியுதுகாண் மன்னர்படைப்பாடு
ஆரணங்குதாதியரை அரண்மனைக்குச்செல்லுமென்றார்
மாதரீடதாதியரை மாளிகைக்குச்செல்லுமென்றார்
போகவிடைகொடுத்தார் பொன்னும்புனத்திரனார்
விடைபெற்றுத்தாதியரும் மாளிகையில்போய்புகுந்தாள்
அங்கேவிடைபெற்று அரண்மனைக்குப்போய்புகுந்தாள்

புனத்திரன் வார்கொள்ளிவாசலுக்கு வருகிறது.

போரஞ்சாமன்னர் புனத்திரனார்வீதியரும்
அவ்வீதிவீதி நடந்தாராமாக
மற்றுமொருவீதி தாண்டியந்தமன்னவனும்
வாசலணிதாங்கின்ற வார்கொள்ளிவீதிவந்தார்

வாசல்படிகாக்கின்ற மங்கைநல்லாளரடி
ஆடிநாதிபமீர யப்பாலேவில்லுமென்றார்
வாழ்பாண்டிநாட்டார்க்கு வழிவிட்டுவில்லுமென்றார்
வைகைவளநாட்டார்க்கு வழிவிட்டுவில்லுமென்றார்
வாசலணிகாக்கின்ற வார்கொள்ளிதான்கேட்டு
யார்தானுமன்னவனே யப்பாலேவில்லுமென்றான்
எவர்தானுமன்னவனே யிங்கேவாராதேயென்றான்
அரண்மனையார்வுத்திரவு அப்படிக்குச்சொன்னார்கள்
உலகாண்டராசாக்கள் உள்ளேவிடாதேயென்றார்
திரியோதிரனருகில் சென்றுவருமளவும்
ராசர்திருமுகத்தைக் கண்டுவருமளவும்
உத்திரவுபெற்றுவந்து உங்களுக்குவழிவிடுவேன்
அந்தமட்டுமில்லுமென்றார் ஆரணக்குப்போய்நடந்தான்

வார்கொள்ளி திரியனை உத்திரவுகேட்கப்போகிறது.

எட்டடியுந்தாடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியுந்தாடியாய் பற்றிமிகநடந்து
ஓட்டம்பெருநடையாய் ஓடிவந்தான் தாதியரும்
ஆடம்பலத்தில் அவ்வையார்சபைநடுவே
பேரம்பலத்தில் பெரியோர்சபைநடுவே
திரியோதிரன்முன்னேவந்து சொல்லுவாளொருவார்த்தை
ஐயாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
உமக்குமொருஐயாண்டு எனக்குமொருமூவாண்டு
மூன்றுவருஷமுதல் முடிமன்னர்வாசலிலே
ஐந்துவருஷமதா அணிமன்னர்வாசலிலே
வாளெடுத்துக்கைகொடுத்து வாசலிலேநின்றுமென்றீர்
கத்தியைக்கைக்கொடுத்து தலைவாசல்காருமென்றீர்
அன்றுமுதலின்றளவும் அணிவாசல்காத்திருந்தேன்
காணுதகாட்சியெல்லாம் கண்டேன்நெடுநாளாய்
பாராதகாட்சியெல்லாம் பார்த்தேன்நெடுநாளாய்
மண்டலத்துராசாக்கள் வாராதபேருமில்லை
சீமையுள்ளராசாக்கள் செல்லாதபேருமில்லை
காணுதராசரெல்லாம் கண்டேனித்தவாசலிலே
முடியோடுமுடிநெருங்கும் முடிமன்னரம்பலத்தில்
தங்கமுடிநெருங்கும் தார்வேந்தரம்பலத்தில்
அப்பெரியமன்னரெல்லாம் அடியென்றுசொன்னதில்லை
அடியென்றழைத்தவர்கள் ஆருமில்லைவையகத்தில்
வாடியென்றுசொன்னவர்கள் யாருமில்லைவையகத்தில

வார்கொள்ளி திரியனுக்கு புனந்திரனுடைய பராக்கிரமங்கூறல்.

அவன்-அடிஅடியென்றானே அண்டமதிர்ந்துவிழ
பிடிபிடியென்றானே பிண்டங்கலங்கிவிழ

பார்த்தால்பிராயம் பதினாறுங்காணவில்லை
என்றால்பிராயம் இருபதுங்காணவில்லை
நறுக்கென்றமீசையும் கூர்க்கருக்குழலும்
சோலைக்கெதிராக மாதளம்பூக்குறியானே
சாலைக்கெதிராக சந்திரனைப்போல்விளக்கும்
காஞ்சிகாடாரும் கருணைத்திருமாரும்
தக்கப்புகழுடைய தருமருடமேனியையும்
வெற்றிமதயானை வீமனுடகால்களையும்
காண்டாவனமெரித்த காளையுடைவீச்சும்
காமமுடியான் நகுலனிடையழகும்
அரையின்சொருகழகும் சத்திகட்டெடன்மருங்கும்
கத்திசொருகழகும் கத்திகட்டெடன்மருங்கும்
கச்சைகட்டெடன்மருங்கும் கனிவாயுங்கண்மலரும்
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிபொட்டழகும்
பாரப்பதக்கம் பருத்தமுத்துத்தாவடமும்
நாளிப்பதக்கமுஞ் சன்னவிலைத்தாவடமும்
ஐந்துவிரல்களிலே அழகானமோதிரமும்
பத்துவிரலிலே பாங்கானமோதிரமும்
அவன்-ஆபரணஞ்சோதிமின்ன அடி அடியென்றுமே
அடி அடியென்றுமே கண்டமதிக்குவிழ
பிடிபிடியென்றுமே பின்டங்கலங்கிவிழ
அவனுடையவாயாலே அடியென்னதாளாச்சே
மன்னனிடவாயாலே வாடியென்னதாளாச்சே
இன்னமெத்தராசாக்கள் என்னடியென்பாரோ

வார்கொன்னி கோபித்து வழிநடப்பது

இனியிருப்பதில்லையென்று எழுந்திருந்தாள்மங்கையரும்
வாளெடுத்துகீழ்போட்டு வழிபட்டாள்மங்கையரும்
கத்திசுழட்டிவிட்டுக் கெச்செகவேபோகலுற்றாள்
அங்கிருக்குமன்னர் அரசர்துரைகளெல்லாம்
தட்டிகைத்தார்கள் தார்வேந்தரெல்லாரும்
கைகொட்டிதானகைத்தார் சட்டமுகரெல்லாரும்
ஐயர்குலத்திலே துரோணரவர்பார்த்து
அவர்-அங்காணிதொப்பை பசையமருங்கசைய
வாரோடிவாரோடி வார்கொன்னிவாரோடி
அடியென்றுசொன்னவனும் ஆரென்றுநீயிருந்தாய்
எட்டாதபொன்னுலகங் கிட்டகெதிபெறுவேன்
வானேழுலோகம் வழியுங்கதிபெறுவேன்
தேவர்கள்சொர்க்கமது சேருங்கதிபெறுவேன்

பவளசேனை தன்னுடனே பத்தினியுங் கண்டிருந்தார்
கழுத்திலேமங்கிலியங்கண்டாளே அல்லியம்மாள்
அறுத்தெறிவேனென்றாள் அறிவழிந்துபோகும்
சத்திகொண்டதுத்தாதும் சந்திரனுண்டாரும்
ஓருயிராய்ப்பாண்டவரும் அல்லியருந்தான்கூடி
ஆலோசனைகள்பண்ணி யவர்ப்பெருமாளும்

## பாண்டியர்களும் அல்லியும் ராசாக்களுக்கு ஓலையெழுதி சத்தியங்கூறச் சொன்னது.

ஐம்பத்தாறுதேசத்துக்கு அனுப்பினாரோலைகளை
ஐம்பத்தாறுதேசத்து ராசாக்கள்வந்தார்கள்
மண்டலத்திலுள்ளதொரு மந்திரிகள்வந்தார்கள்
சொக்கரிடவாலயத்தில் சிவகாமிச்சன்னதிமுன்
வந்தவந்தராசரெல்லாம் அந்தமுடன்வீற்றிருந்தார்
நெய்குடத்தைக்காய்ச்சியல்லோ வாதேயமென்றுமே
நெய்குடத்திற்கைதனைத்தா செல்லிவிட்டிவிட்டார்
வெற்றிமதயானை வீமரவரோடிவந்து

## வீமன்நெய்குடித்தது.

நெய்குடத்திற்கைதோய்த்து நெய்யைக்குடித்துவிட்டார்
அம்பாரநெல்லையெல்லாம் கிமிட்டி அவர்தின்றுவிட்டார்
அத்தையறிந்தாளே அல்லிப்பெருமாளும்
அவர்பெருப்பரும் அறிந்தாளே அல்லியம்மாள்
பட்டணத்திலுள்ள படைமன்னரத்தனையும்
யானைத்திரள்படையும் அழகானசேனைகளும்
குதிரைப்படைசேனைகளை கட்டிநல்லியரும்
ஐவர்மேற்சண்டைசெய்ய ஆணழிவந்துவிட்டாள்
வந்து அடித்தாளே வன்னவன்னக்கூடாரம்
அடித்தாள்ரணபேரி யண்டாண்டம்தானதிர
சண்டைக்குவந்தேனென்று தானடித்தாள்பேரிகைகள்
அந்தவிசேஷம் அதுவறிந்துதருமனுக்கும்
வீமனையும்மாயவரை யிருவரையுங்கூட்டிவிட்டார்
வீமரும்மாயவரும் வந்துமேபோர்கொடுத்தார்
இருவருமாய்ச்சண்டைபண்ணி எதிர்நிற்கமாட்டாமல்
புறங்கொடுத்தோடினார் பெண்பெருமாட்டிக்கஞ்சியல்லோ
ஆணழகுமன்னன் அருச்சுனனார்வந்தெதிர்த்தார்
அவராலேபோர்கொடுக்க மாளாமேதமன்னவனும்
கைசோர்ந்து மெய்சோர்ந்துகையில்சிலைசோர்ந்து
தேரொடிந்துவில்முறிந்து சேனைவிட்டுக்கீழ்குதித்து
உற்றவுயிர்சோர்ந்து ஓடினார்அருச்சுனரும்

சகாதேவன் அல்லியைக்கண்டிலடைந்த சமர்த்துக்கூறல்.

சாத்திரக்கொடிவேந்தன் சகாதேவன் தானறிந்து
கண்டென்றுசொப்பனிட்டுக் கொண்டேவக்காண் தார்வேந்தன்
சூதானகண்டொன்று தோன்றுமல்லியற்கு
சதிசெய்துவென்றாரே சமர்த்தன்சகாதேவன்
அல்லியம்மாள்தோற்றாளென்று அடித்தார்பேரிகையை
எல்லவருந்தானறிய அரண்மனைக்குக்கொண்டுசென்று
சந்தோஷப்பட்டார்கள் சமர்த்தானராசாக்கள்
ஆறாயிரம்பாண்டியர்கள் அய்யன்மார்தாமறிய
மங்கிலியந்தான்பொருந்தி மன்னவனையுங்கைப்பெற்றார்
மதுரையையாளுதற்கு மன்னவனையுன்னைப்பெற்றார்
பூலோகமாளுதற்கு புனந்திரனையீன்றெடுத்த
இப்பெருமையாருக்கு இந்திரரேசொல்லுமையா
பெண்பெருமையாருக்குண்டு புனந்திரரேசொல்லுமையா
அந்திப்புரமும் அவராளுமரசுகளும்
மதுரைப்பெருஞ்சீமையது மண்டலத்துக்கீடாமோ
வல்லைப்பெருநாடு வாழ்மதுரைக்கீடாமோ
அல்லிப்பெருமையது அளவிடக்கூடாது
பெண்பெருமானதன்பெருமை புகழ்ந்திடலாகுமோதான்
இப்படிச்சொல்லி யெடுத்துரைத்தார்மன்னனுந்தான்

புனந்திரர் மாமாவொன்றுபல நாடாளுக்குக்கோப

வார்த்தையுரைக்கிறது.

பொறுக்குமா மன்னர் புனந்திரருந்தான்கேட்டு
கதிக்குதிமண்டி கண்கள் எரிபறந்து
நீலவிழிகண்கள் நெருப்புத்தணலாகி
கோபித்துக்கண்சிவந்து கொல்லும்புலியதுபோல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
குன்றிபோல்கண்சிவந்து கோபம்பெரிதாகி
நெற்றிப்புருவம் நெருப்பாய் அனல்பறந்து
சூரியமண்டலத்தை எட்டிச்சுவாலையமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்துச்சுவாலயமாய்
அன்னமுகம்நோக்கி மன்னவனார் ஏதுசொல்வார்
மாமாமுகம்நோக்கி மன்னவனார் ஏதுசொல்வார்
அம்பலத்துராசருக்கு ஆணழகிவிடாமோ
மண்டலத்துராசருக்கு மாதவெதிராமோ
முத்துமுடிதரித்த ராசாக்கள்தன்னுடனே
வச்சிரமுடிதரித்த மண்டலிகர்தன்னுடனே

தாமமுடியான் தயிலாட்டான்பூமிக்கு
சங்கெடுத்தூதினான் தமுலாட்டான்பூமுடிக்கு
காந்திகாடாருநங் கர்னருக்கென்றெடுத்தான்
கர்னருக்கென்றெடுத்து காளைசின்னமூதினான்
தங்கைமணவாளன் தருதலையன்பூமுடிக்கு
தறுதலையன்பூமுடிக்கு சங்கெடுத்தூதினான்
சாமத்துரோகிச் சகுனிபடுபாவி
இப்படியாகச்சொல்லி யெடுத்தான்விருதோசை
ஊதினான்சின்னம் உலகேழுலகதிர
ஊதினான்காளை உலகுதலைதமுக்க
செம்பொன்னூற்காளை திசைவிளங்கஊதினான்
பொன்னிறக்காளை பொருந்துமென்றூதினான்
இம்படிக்காபூதினா னிந்திராசாவும்

### புனந்திரன் சின்னத்தொனியை திரியோதிரன்கேட்டு கோபிக்கிறது.

ஊதின சின்னத்தொனி கேட்டாருநந்தமியும்
தேசத்தையாளுநற் திரியோதிரப்பெருமான்
உற்றுக்கேட்டானே வுத்தமனார்வீரியனும்
கோபித்துக்கண்சிவந்து கொல்லுங்குருவியைப்போல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபம்பெரிதாகி
நெற்றிப்புருவம் நெருப்பாயனலண்டி
சூரியமண்டலத்தை சுற்றிச்சுவாலையமாய்
அக்கினிமண்டலத்தை மிக்குச்சுவாலையமாய்
காந்திகாடாரும் கர்னர்முகம்நோக்கி

### திரியோதிரன் தர்மர்மேல் இகழ்ச்சியாக கர்னருக்குச் சொல்வது.

காந்திகாடாருநங் கர்னருக்கேதுசொல்வான்
கர்ன-விண்ணீர்புகழீர் விலாடநகரியிலே
தக்கப்புகழுடைய தர்மரொழுக்கிருந்து
அறுந்ததொருபூநூலுங் கிழிந்ததொருபுத்தகமும்
அறுபதுசுக்கலாக போனதொருபுத்தகமும்
புத்தகத்தைகைபிடித்து போர்மன்னர்தன்கொலுவில்
பஞ்சாங்கஞ்சொல்லுகிற பார்ப்பானைப்போலிருந்து
இச்சகங்கள்சொல்லி யிடிக்கண்டிருந்தானே
அவ்விருந்தநடுக அசந்தானேபேடிமகன்
உன்விருதுனன்விருதும் ஊதயிலன்யார்காணும்

அவ்விருதைஊத அசந்தானேபேடிமகன்
உன்விருதுஎன்விருது ஊதயிவர்களாலும்

சகாதேவர்பேரில் இகழ்ச்சிகூறுவது.

விண்ணோர்புகழீர் விலாடநகரியிலே
தாமமுடியான சகாதேவனோடிவந்து
இடைச்சிமனைகளெல்லா மிருந்தெருமாடுகளை
காடுகள்மேடுகள் கண்டவிடங்களெல்லாம்
மாட்டைமிகமடக்கி மன்னவனும்பால்கறந்து
மோருக்குகணக்குசொல்லி மொந்தைபால்பொம்மையுண்டு
இடைச்சிமனைகளிலே இச்சகங்கள்தான்பேசி
இச்சகங்கள்தான்பேசி இருந்தானேபேடிமகன்
அவ்விருதைஊத அசந்தானேபேடிமகன்
உன்விருதும்என்விருதும் ஊதயிவர்களாலும்
என்று-தேசந்தையாளுந் திரௌபதைராஜகுமாரி

கர்ணன்கோபித்து தூதியனுக்கெதிர்த்துரைப்பது.

காஞ்சிநாடாளும் கர்ணரவர்கேட்டு
அவர்-சிந்தைகலங்கித் திகைத்துமெய்மறந்து
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நித்திலங்குபூமுடியான்
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
கதிக்குக்கதிமண்டி கனல்பொறிபறந்து
நீலவிழிகண்கள்நெருப்புத்தணலாகி
பத்தியநாகம்பவளம்போலக்கண்சிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகமதாய்
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
சூரியமண்டலத்தைத் தொட்டுச்சுவாலையுமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்துச்சுவாலையுமாய்
மன்னன்மனஞ்சலித்து வார்த்தைகளேதுசொல்வான்
சொல்மாத்திசொல்லுரைப்பான் தோழன்முகங்கோணாமல்
நீர்சொன்னவார்த்தையது கேளுமையாராசாவே
எப்படியிருந்ததென்றால் இந்திரராசாவே
நாராசங்காய்ச்சி நடுச்செவியில்விட்டாற்போல்
சயத்தைக்காய்ச்சி யிருசெவியில்விட்டாற்போல்
ஓடுருகக்காய்ச்சி வுருக்கிக்கவிழ்த்தாற்போல்
உச்சிமயிர்பிளக்க வுளிகொண்டிடித்தாற்போல்
வாச்சுளிகள்கொண்டு மண்டைபிளந்தாற்போல்
ஊழைவுளியாலே எடுத்திழைத்தாற்போல்
பஞ்சவர்கள்பட்ட பரிபோகமீபுதினீர்

### தச்சன் பிள்ளையை யெடுத்துக்கொண்டுபோய் வளர்த்துக்கொண்டிருந்தது.

மாளிகையில்கொண்டுவைத்து மைந்தனை நீராட்டி
மைந்தனை நீராட்டி மலர்க்கண்ணில் மையெழுதி
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிபொட்டுமிட்டு
உச்சிதமான வுடைமைகள் பலதிருத்தி
கோலவர்ண பூஷணங்கள் குழந்தைக்குத் தானணிந்து
வண்ண வண்ண பூஷணங்கள் மைந்தர்க்கலங்கரித்து
கொம்பிலேகிழுந்தேனும் கோதுபடா சர்க்கரையும்
மலையிலிறுந்தேனும் மிளாசர்க்கரையும்
கூட்டிப்பிசைந்துமவ்வேளை கொற்றவர்க்குத்தானூட்டி
தள்ளிப்பிசைந்துமவ்வேளை தார்வேந்தர்க்கூட்டி
பன்னீரால்வாயலம்பி பட்டாலேவாய்துடைத்து
சாம்பலர்த்தி மிழைசேர்ந்தபட்டுவித்தி
மைந்தனைத்தானிருத்தி வழிநடந்தான்மன்னவனும்
தெத்துதெருத்தாண்டி தேரோடும்வீதிவிட்டு
சடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு

### தச்சன் திரியோதிரன்மாளிகைக்கு குழந்தையாகிய கருணாரை யெடுத்துக்கொண்டு போனது.

மாநகராளும் மகாராசன்மாளிசென்றான்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
அழகுள்ளமண்டபத்தில் ஆசனம்போல்வைத்தான்
செம்பொன்முக்காலிருத்தி செம்பொன்தளிகையிட்டார்
புலிமுகக்காலன்னிறுத்தி பொன்னுருக்கையிட்டார்
இட்டதொருஆசனத்தில் எழிலவர்வீற்றிருந்தார்
அந்தமொருசாதி அறிவுடையான்சொல்லுகிறான்
மாணிக்கக்கிண்ணிகளை வைத்தாரழகாக

### திரியோதிரன்-௩௨-கிண்ணியில் பொசிப்பது.

முப்பத்திரண்டுகிண்ணி முடிமன்னர்க்கிட்டுவைத்தான்
அமுதுபடைத்தார்கள் ஆரணங்குதாதிபர்கள்
பத்துவகைக்கறியும் பாலடிசல்போசனமும்
மற்றும்வகைக்கறியும் வண்ணவிதபோசனமும்
அத்தனையுங்கொண்டு அளித்தார்கள் தாதிபர்கள்
போசனமுமவைத்து புத்துருக்குநெய்சொரிந்து
காராவின்நெய்சொரிந்து கட்டித்தயிர்வார்த்தார்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
அமுதுபொசித்திருந்தார் அமைதானராசாவும்

என்றவருரைத்து யெழுந்தார்கர்ணராசர்
போய்விடைதாருமென்று போர்க்கர்ணர்தான்கேட்க
வைதொருகயிந்திரனார் சட்டமுகவீரதுசொல்வார்
போய்வாருமென்றுசொல்லிப் பொன்னடிக்குதெண்டனிட்டார்
விடைபெற்றுத்தானெழுந்தார் வேந்தர்கர்ணராசன்
கர்ணரவர்போனபின்பு சட்டமுகனிந்திரனும்

புனந்திரன் போவது.

மற்றோர்படிகடந்தான் மன்னன்படையயர்ந்தான்
மற்றோர்படிகடந்து மன்னவன்போகலுற்றான்
காசிவளநாடாளுங் கர்ணர்பெருமானும்
அம்பலஞ்சென்றேறி யானைதவாழ்மார்பன்
தேசத்தையாளுந் திரியோதிரன்கொலுவில்
வந்துயிவர்வீற்றிருந்தார் மன்னர்கர்ணராங்கே
தேசத்தையாளுந் திரியோதிராசருக்கு
காஞ்சிநாடாளுங் கர்ணரவரேதுசொல்வார்

கர்ணர் திரியனுக்குச்சொல்வது.

மதுரைப்பதியாளும் வாழ்பாண்டிநாட்டானும்
தம்பியரிகொடுத்து வந்தானேதார்வேந்தன்
எதிரேபோய்காணுமென்றான் எத்திலங்குமுடியான்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
கச்சாயம்பூமலருங் கனம்பெறவேதானெடுத்து
தட்டோடேவெற்றிலையுஞ் சாதிக்காயேலங்களும்
கொத்தோடேபழவகையுங் கொற்றவனார்தானெடுத்து
ஆளுக்குதலையி லெடுப்பித்தாரணமுகன்
மண்டியிடுங்கால்களுக்கு பாதப்பூசல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு தத்திப்பூசல்லடமாம்
தட்டிவரித்துகட்டி தாமரைப்பூசக்குவிட்டு
அத்தண்டவீரருடன் வாராரே திரியோதிரன்
அம்பலத்துவாசல்விட்டு வாராரே ஆணமுகன்
போரஞ்சாமன்னர் புனந்திரன்முன்னேவந்து
இவர்வரவுகண்டு ஆணமுகனிந்திரனும்

புனந்திரன் யானையின்மேலிருந்து வினவுகிறது.

ஆனையின்மேல்தானே யிருந்தபடியாக
வாளெடுத்துமுன்னேவைத்து வணங்கினான்மன்னவனும்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
சரியானைமேலிருக்கு கார்வேந்தனேதுசொல்வான்
கோபித்துக்கண்சிவந்து கொல்லும்புலியதுபோல்
பத்தியநாகம் படம்போற்கண்சிவந்து
குன்றுபோற்கண்சிவந்து கோபமதிகரித்து
செத்திப்புருவம் நெருப்பாயனலண்டி
சூரியமண்டலத்தை யெட்டிவருவதுபோல்

அக்கினிமண்டலத்தை அடுத்துச்சாலபமாய்
போரஞ்சாமன்னர் புனந்திரைத்தான்பார்த்து
தேசத்தையாளுந் திரியோதிரனேதுசொல்வான்

திரியோதிரன் சொல்வது.

ஐவர்கள்பெற்றெடுத்த ஆணழகவீரியரே
காளையர்கள்பெற்றெடுத்த கட்டழகவிந்திரரே
அழகியசீர்கொம்பனைய வல்லித்திருமகனே
பாகனிட்டுக்கீழிறங்கி யடிபணிந்தலாகாதோ
குதிரைவிட்டுக்கீழிறங்கி கும்பிட்டலாகாதோ
வாளெடுத்துக்கீழிறங்கி வணங்கினலாகாதோ
ஐவரிடம்பிசந்துக் காகாதோமன்னவனே
குருகுலத்தார்வங்கிஷத்துக் கொவ்வாதோமன்னவனே
என்றுமைருவுரைத்து ஏதுசொல்வார் திரியோதிரன்
கொண்டுவந்தகச்சாயங் கொற்றவர்க்குமுன்னேவைத்து
தானைகொண்டுவந்ததெல்லாந் தார்வேந்தர்முன்னேவைத்து
இந்திரர்முகம்நோக்கி யேதுசொல்வான் திரியோதிரன்

மறுபடியும் திரியோதிரன் சொல்வது.

தம்பிவலுவிழந்தீர் தம்பிமார்சோர்ந்தீர்
வீமன்வலுவிழந்தீர் விசையனுஞ்சோர்ந்தீர்
குப்பிட்டவாளை யுறையுருவிவிட்டார்போல்
தப்பிவிட்டீர்நுமிப்போ தம்பிதனஞ்செயரே
ஆணப்பிறந்த அபிமன்முடியிழந்தீர்
அத்தாலுந்தீராத அரவான்முடியிழந்தீர்
தாமமுடியான் கடோற்கஜன்முடியிழந்தீர்
ஆறிவிடும்ஆறிவிடும் அப்பாலேஆறிவிடும்
தேறிவிடுந்தேறிவிடும் தேவனேதேறிவிடும்
அச்சாயங்கொண்டுவந்தேன் காளைபொசியுமென்றான்
பலகாரங்கொண்டுவந்தேன் பாலகனேபுசியுமென்றான்
உண்டுபசியாறும் உத்தமனேவீரியரே
தின்றுபசியாறும் காளையிடபுத்திரனே
இந்தாருமென்று யெடுத்துமவன்கைநீட்டி

புனந்திரன் சொல்வது.

போரஞ்சாமன்னர் புனந்திரனுமேதுசொல்வார்
தம்பியைபால்கொடுத்து தற்சேர்ந்துநிற்கையிலே
உடற்பிறப்பைபகான்தோற்று உயிர்சேர்ந்துநிற்கையிலே
ஐவர்கள்தன்பகையில் உண்ணேனென்றான்பாலமிர்தம்
குதக்கன்தீராதே தின்னேனென்றான்பாலமிர்தம்
மாகொரிப்பதில்லை மன்னர்பெருமானே
தக்கோலந்தின்பதில்லை தனஞ்செயரேயென்றுரைத்தான்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு

பாருடமுடியவரைக்கும் பர்மறுமரையாமல்
அம்பலத்துவாசலிலே ஆனமுகன்வந்தாலே
மண்ணைடையுடைத்திடுவேன் வல்லுயிரைவாங்கிடுவேன்
பொய்யாசனமிடுவோம் பொற்கைவளைபாண்டியர்க்கு
அந்தானுஞ்சாகாமல் தப்பிப்பிழைத்தாரே
தப்பிப்பிழைத்தாரே தார்வேந்தர் பூமுடியை
எந்தவிதமானாலும் பிறக்கவழிதேடிடுவோம்
என்றுமனதிலெண்ணி பேசிநடக்கலுற்றான்

துரியோதிரன் சிம்மாசனம் வந்துவிட்டது.

தென்னமுடிவேந்தன் துரியோதிரன் திரும்பி
அம்பலத்துவாசலிலே ஆனமுகன் வந்தின்று
வீரகங்கொண்டவனும் ஏறினான் சிம்மாசனம்
அங்கிருக்குமன்னர் அனையர்துரைகளெல்லாம்
புத்திரனைக்காண நடந்தீரே புண்ணியரே
மைந்தரைக்கண்டு புகழ்ந்துவரவாடினதும்
அந்தவிலையுஞ்சொல்லுமென்றார் அங்கிருந்தவீரியர்கள்
தேசத்தையாளுந் துரியோதிரன்கேட்டு
போனதுவும்வந்ததுவும் புத்திரனைக்கண்டதுவும்
அங்கேநடந்த விசேடங்களத்தனையும்
சொல்லிக்குதித்தானே துரைகளுக்குமுன்பாக
அத்தனைபேரும் அதைவோருந்தான்கேட்டு
நல்லதென்றுவீற்றிருந்தார் நாமமுடியார்கள்
தேசத்தையாளுந் துரியோதிரப்பெருமான்
சாமத்துரோகி சகுனியைத்தானழைத்து

துரியோதிரன் சகுனிக்கெடுத்துரைப்பது.

அம்மான்முகம்நோக்கி அனமுகனேதுசொல்வான்
வையைவளநாட்டான் வாரான்கொலுவுக்கு
வளநாடான்புத்திரனும் வாரான்கொலுக்காண
கொம்பனையாள்புத்திரனை செல்வகைதேடும்
மாயன்மருமகனை மாளவழிதேடுமென்றான்
சாமத்துரோகி சகுனியவன்கேட்டு
மருமகன்முகம்நோக்கி மன்னவனேதுசொல்வான்
வளநாடப்புத்திரனைக் கொல்லவேலையென்றுமென்றான்
அர்ச்சுனனார்புத்திரனை யழகுபுலந்திரனை
அவனையேகொல்லுதற்கு அனேகம்பேர்வேணுமோ
ஆனந்தமார்பனுக்கு அனேகம்பேர்வேணுமோ
பொய்யாதினமிடுங்கான் பொய்கைவளநாடனுக்கு
ஆதினஞ்சென்றேறினால் அதிலேயழிந்திடுவான்
உள்ளிருக்குமன்னவர்கள் செல்லாயெரிந்திடுவார்
செத்துமடிந்திடுவான் சிவலோகஞ்சேர்ந்திடுவான்
மாண்டுமடிந்திடுவான் வைகுண்டஞ்சேர்ந்திடுவான்

முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டான்
தெண்டனிட்டமன்னவனை கண்டுமேமனதளராட்டான்
நீ-ஆர்காணும்மன்னவனே அறியவுரையுமென்றான்
கண்ணில்லாயெத்தனுக்கு காணவுரையுமென்றான்

பொன்னுமலைநாடான் சொல்லுவது.

பொன்னுமலைநாடாளும் அன்னவுமேதுசொல்வார்
மதுரையறுகாதம் வாழ்மதுரைமுக்காதம்
பொய்கையறுகாதம் பூமதுரைமுக்காதம்
அன்பத்தாறுகாதம் ஆண்டிருந்தார்பாண்டியர்கள்
மைந்தர்கள் இல்லாதே மனமேற்றவமிருந்தார்
மாளாதேயென்று மலரிலவதரித்தாள்
எழுபிராயத்திலே யெதிர்த்துவந்தநின்முகனை
நீன்முகனைக்கொன்று நீலிபட்டமாண்டவர்காண்
மன்னர்விசையன் படையூர்ந்தமாதேவி
காளைவிசையன் கட்டமுகன்மாதேவி
மதுரைப்பதியாளும் வையைவளநாட்டான்
வையைவளநாட்டான் வளநாடுடையவரும்
அல்லியயின்றெடுத்த அழகுபுனேந்திரனார்
காண்டாவனமெரித்த காளையுடபுத்திரனார்
என்றுமவனுரைக்க கிழிவில்லாதான்கேட்டு

தைலாட்டானுரைப்பது.

ஐயாபுனேந்திரரே அழகுள்ளகண்மணியே
ஐவர்க்கும்நூற்றுவர்க்கும் அழகுள்ளகண்மணியே
எங்கள்குடைவிளங்க வந்துதித்தாய்த்திருமே
ஐயாவருக அழகுள்ளகண்மணியே
என்றுமவருரைக்க யிந்திரனுந்தான்பார்த்து
பாட்டன்திருவடியை பணிந்தானேபாண்டியனும்
காண்கிறேனென்றுசொல்லி கால்மேல்முடிசாய்த்தான்
கண்ணில்லாதான்பார்த்து ஒடுடுகனேவாழ்த்தலுற்றான்
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீருந்திருப்பீர்
சித்தீர்நிலைதரிப்பீர் நீராசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வீர்
விற்பதித்ததூண்போலே விளங்கஅரசாள்வீர்
பெண்ணைப்பெறுவீர் எதிர்த்தாரமுடிபெறுவீர்
பிள்ளைபெறுவீர் பெருமான்பதம்பெறுவீர்
போருக்குப்போய்விடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டஞ்சூட்டிடுவீர்
சினத்தார்கள்பூமுடியைச் செண்டாட்டமாட்டிடுவீர்
பகைத்தார்கள்பூமுடியை பந்தாட்டமாட்டிடுவீர்
மாத்தான்படைநடுவில் மன்னர்களைவென்றிடுவீர்

அத்திபுரமாள ஆண்பிள்ளைபெற்றீர்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்று மனமாரவாழ்த்தினார்
வாழ்ந்திடுவீரென்று மனங்குளிரவாழ்த்தினார்
வாயால்வாழ்த்தியபின் விழியில்லாதானைப்பார்த்து
எங்கிருந்தாயிந்திரரே யென்றுமவன்வாரானே
அங்கொருதூணை யடைவாகக்காண்பித்து
மற்றொருதூணில் மறைந்தாரேயிந்திரரும்

குருடன் தூணைகட்டிநெறித்தது.

கண்ணில்லான் தானெழுந்து காவலனுந்தான்பார்த்து
புனக்கிரனைக்கட்டி யணைப்பதுபோல்புண்ணியனும்
தூணைகட்டிதான்பிடித்தார் துன்னிலங்கண்ணனும்
அப்பாமகனேயென்று யணைத்தானேகற்றூணை
அணைத்துப்பிடித்து அழுத்திநெரித்தாலே
இவன்கட்டநெரித்ததினால் கற்றூணுநெரிந்தது
சேர்ந்துபிடித்ததினாலற்றதுகற்றூணு
கற்றூணுமிற்று கலங்கிறதுமண்டபங்கள்
காசிகலங்கி நகருகள்தத்தளித்து, பூமிகலங்கிப் புழுதிபறக்கிறது
அண்டரண்டந்தானதிர ஆகாயமிற்றுவிழ
கண்டகண்டமன்னரெல்லாம் கைகள்நெரிக்கலுற்றார்
போரஞ்சாமன்னர் புனக்கிரனுந்தான்பார்த்து
தாதைக்குத்தாதை தைலாட்டனேதுசொல்வான்
பாட்டன்முகம்நோக்கி பாண்டியனுமேதுசொல்வான்
என்னையாநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
அரசர்பஞ்சவரை ஐவரையுந்தானழைத்து
வெற்றிமதயானை வீமருக்குளண்ணைவிட்டு
மூழுகுங்குளந்தனிலே முழுதுமேவகிட்டு
குளிக்குந்துறைதனிலே கொண்டபட்டுங்கட்டினரே
அத்தானுந்தப்பிப் பிழைத்தார்களாணழகர்
மாயனிடபுண்ணியத்தால் மன்னர்பிழைத்தார்கள்
அன்னமிடவழைத்து அன்னத்தில்நஞ்சையிட்டார்
மதகரியாண்வீமராசன் வாரியல்லோவுண்டானே
உண்டுமெடுத்தானே உத்தமனார்வீரியனும்
மாயரொருசந்நியாசி வேஷமெடுத்துமல்லோ
மருந்துப்பையைதோளில்வைத்து மன்னவரையெழுப்பிவிட
அத்தானுந்தப்பி பிழைத்தார்களாணழகர்
மாயனிடபுண்ணியத்தால் மன்னர்பிழைத்தார்கள்
ஆயரிடபுண்ணியத்தால் ஐவர்பிழைத்தார்கள்
ஐவரையுந்தானழைத்து அம்பலங்களேற்றிவைத்து
மாயத்தால்சூதாடி மண்ணிழக்கபண்ணித்து

மானைத்துகிலுரிந்து மன்னவரைக்காட்டோட்டி
கோதைத்துகிலுரிந்து கொற்றவரைக்காட்டோட்டி
பருக்கல்உருத்த பனிவந்தலைமோத
ஓடும்பருக்கை உள்ளங்கால்தானுறுத்த
தனிழ்ந்தமரத்தடியில் கண்பள்ளிகொண்டிருந்தார்
ஐவருயிர்பிழைக்கப் புண்ணியரேமன்னவரே
பஞ்சவர்கள்மாள நினைத்தீர்கள்பாவிகளே
அப்படிக்குயென்னை நெறிக்கநினைத்தீரே
நீ-கண்ணில்லாரானதினால் கலியுகத்தில்வாசம்பண்ணீர்
விழியில்லாரானதயினால் யிருந்தீரோவிண்ணுலகில்

மறுபடியும் புனந்திரன் சொல்வது.

உந்தனதுபுத்திரர்கள் நூற்றொருவரல்லாது
நூற்றொருவரல்லாது வேற்றொருவராகாதோ
மன்னவர்களல்லாமல் மற்றொருவராகாதோ
எல்லவரையுங்கொன்று ஆளுறுமோராச்சியத்தை
என்றுமவனுரைத்து யெழுந்திருந்தானிந்திரனும்
படிபடியென்றான் படிந்தது அவ்வானை
முக்கம்பம்கட்டி முதுகின்மேல்சையைவைத்து
கைத்தலத்தைத்தட்டி கறுத்தானையேறினான்
அம்மானுந்தானும் அழகானையேறினார்
மாமாவுந்தானும் மதயானையேறினார்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனஞ்சென்றேறினார்
மற்றோர்படிகடந்து வாறானேமன்னவனும்

புனந்திரன் துரியோதிரன் சிம்மாதனம் வருவது.

தேசத்தையாளுந் திரியோதிரன்கொலுவில்
அம்பலத்துச்சேர்வைகளும் அழகுள்ளமன்னர்களும்
அம்பலத்துவாசலிலே யனைவோருமிருந்தார்
தேசத்தையாளுந் திரியோதிரனாரும்
செண்டாமென்னன் திரியோதிரனழகும்
நாலாம்சுபேந்திரனார் நூற்றொருவராசர்களும்
பாட்டனார்வீஷ்மரும் பாரதியதுரோணரும்
சிற்றப்பவிதுரனுஞ் சிறுள்ளசாங்கையனும்
காஞ்சிநாடாளுங் கர்ணசிகாமணியும்
தங்கைமணவாளன் தறுதலையான்வீரியனும்
அம்மான்சகுனி யவன்தோழனவனும்
ஈட்டிப்பிடிமன்னர் யிருபதினாயிரஞ்சூழ்ந்துநிற்க
கத்திபிடிமன்னவர்கள் கல்லியர்சூழ்ந்துநிற்க
முத்துமுடிதரித்த முடிமன்னரங்கிருக்க
இரத்தினமுடிதரித்த ராசாக்களங்கிருந்தார்
மகுடமுடிதரித்த மந்திரிகளங்கிருந்தார்
இவரைச்சுற்றிசூழ்ந்திருப்பார் உக்ரகோடிசேனைகளும்

கண்சாடைகாட்டினர் காவலர் பூவீரியரும்
அப்பெரியசாடை யறிந்தக்கயிர்த்திருனர்
சிம்மாதனத்தருகே திரும்பினரிங்கிருனும்
உற்றுற்றுப்பார்த்தாரே ஒளிபிறந்தகண்ணுலே
அப்பெரியஆதினத்தை ஆணழுவேனதுசெய்தான்

புனந்திரன் தமக்கிட்டசிம்மாதனத்தை எத்திபெறிகிறது.

வாளாலேஎத்தி எறிந்தானேவல்லாயன்
கத்தியாலெத்தி எறிந்தானேவல்லாயன்
எத்திபெறிந்தவுடன் கத்திவெளியாச்சு
கத்திவெளியாச்சு கஸ்திரியர்வந்துவிட்டார்
சட்டிவெளியாகி சிடிமன்னர்வந்துவிட்டார்
ஜெட்டிகளுமல்லர்களுந் சேரவெளியானுர்
அத்தண்டபேரையெல்லாம் ஆணழகன்தான்பார்த்து
எந்தனுயிர்வாங்க யிருந்தார்குறிதனிலே
வல்லுயிர்வாங்கவென்று வந்தீரோமன்னர்களே
உங்களதுயெண்ண முடியாதுஉத்தமரே
மன்னவருமெண்ண மாளாதுமன்னர்களே
சுற்றியெரிந்திடுவேன் சத்துருமனங்கோளுமல்
ஏமன்பதிதனக்கு யிப்போதனுப்பிடுவேன்
நமனுரிடபதிக்கு நானேஅனுப்பிடுவேன்
செத்துமடிந்திடுவீர் சிவலோகஞ்சேர்ந்திடுவீர்
மாண்டுமடிந்திடுவீர் வைகுண்டஞ்சேர்ந்திடுவீர்
என்றுமவருரைத்து யிந்திராசாவும்

புனந்திரன் சொக்கரைநினைத்துச் சிம்மாசனங்கேட்பது

சோலைமலருடைய சொக்கரைத்தானினைந்து
ஆனைமலையுடைய அம்மனைத்தானினைந்து
ஏழுலகமாளுகிற பெருமானைத்தானினைந்து
சோலைமலருடைய சொக்கரேயென்குருவே
அன்றொருநாள்வேளையிலே ஆதிகைலைவிட்டு
அல்லிமலர்நாயகியை கார்த்திரேசர்த்தாவே
ஆச்சியைக்காத்ததுபோல் அடியேனைக்காருமையா
மாதாவைக்காத்ததுபோல் மைந்தனைக்காருமையா
மாற்றான்றன்வாசலிலே மண்டபஞ்சென்றேன்காண்
எதிராளிவாசலிலே ஆதினஞ்சென்றேன்காண்
வண்ணத்துசிலாசனங்கள் வரவனுப்பவேண்டுமையா
என்றுமிகத்தொழுதா னிந்திராசாவும்
புனந்திரனுர்தோத்தரிக்கப் புண்ணியருந்தாமறிந்து

சொக்கர் அம்மனுக்குரைப்பது.

சொக்கர்மனமகிழ்ந்து தோகையர்க்கேதுசொல்வார்
அம்மன்முகம்நோக்கி ஆதிசிவனேதுசொல்வார்
போரஞ்சாமன்னர் புனந்திரவீரியரும்

ஆளப்பிறந்த அபிமன்னராசாவும்
பகையாளிதேரில் படையெடுத்துவைத்தானே
முன்னையும்பூசை முதல்பூசைதன்னுதென்றான்
முத்துமுடி பாண்டியனும் பட்டுவிழுந்தானே
ஆளப்பிறந்த அபிமன்னன்தேவியவள்
விராடபுரத்தான் புத்திரியாளுத்தரையும்
உன்-தம்பியுடதேவி தார்குழலாள்மாதருக்கு
தாலிகழட்டினையோ சன்னல்பின்னல்வாங்கினையோ
ஆரங்கழட்டினையோ ஆபரணம்வாங்கினையோ
கொப்புகழட்டினையோ கோர்வைமணிவாங்கினையோ
வளையல்கழட்டினையோ வாங்கினையோ பூஷணங்கள்
ஏதுகருமம் எனக்கறியச்சொல்லுமென்றான்
ஒன்றுமொளியாதே உரையுமென்றுவேந்தனுக்கு
போரஞ்சாமன்னர் புனர்திரருத்தானே கேட்டு
கதிக்குக்கதிபண்டி கன்கன்பொறிபறந்து
நீலவிழிகண்கள் நெருப்புத்தணலாகி
பத்தியநாகம் படம்போல்கண்சிவந்து
மூத்தியநாகம் விழியதுபோல்கண்சிவந்து
கோபித்துக்கண்சிவந்து கோபமதிகரித்து
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகரித்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலையமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்தச்சுவாலையமாய்
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேறி
சித்துடம்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
தேசத்தையாளுந் திரிவோதிராசருக்கு

புனர்திரன் திரிவோதிராசருக்குத் தூதனுப்பது.

போரஞ்சாமன்னர் புனர்திரருமேதுசொல்வார்
பதினெட்டுநாளையிலே படைமன்னர்சண்டையிலே
பாரதமென்று படைபொருதும்வேளையிலே
ஆளப்பிறந்த அபிமன்னராசாவும்
முன்னையும்பூசை முதல்பூசைதன்னுதென்று
முத்துமுடிபாண்டியனும் பட்டுவிழுந்தானே
ஆளப்பிறந்த அபிமன்னன்தேவியர்க்கு
தாலிகழட்டினோம் சன்னல்பின்னல்வாங்கினோம்
ஆரங்கழட்டினோம் தாவடங்கள்வாங்கினோம்
கொப்புகழட்டினோம் கோர்வைமணிவாங்கினோம்
வளையல்கழட்டினோம் வார்கொப்புவாங்கினோம்
மாலைகழட்டினோம் மண்டபமேற்றிவைத்தோம்
அவளைச்சுற்றிப்பெண்பேர் அணிகிழமார்சூழ்ந்திருந்தார்
வைத்துச்சிறைகாக்க மண்டலத்திற்கோடியுண்டு
எங்கள்-தேவியின்முடியாளுஞ் சிறைதாத்திருப்பாள்காண்

வட்டிக்காசுவாங்கியல்லோ வட்டிக்குயாருமென்றான்
என்று-விட்டாரொருதூது மண்ணதிரவிண்ணதி
மண்ணதிரவின்குலுங்க மாற்றான் இடிக்கிடவே
விண்ணதிரமண்குலுங்க வேந்தர் இடிக்கிடவே
தேசத்தையாளுந் திரியோதனன்கேட்டு
மன்னன்மனஞ்சலித்து மர்மமாய்த்தானிருந்தான்

புலந்திரன்மறுபடியுந்தூதுரைப்பது.

போரஞ்சாமன்னர் புலந்திரராசாவும்
மற்றுமொருதூது மன்னவனுங்கேட்கலுற்றான்
ஆணழகர்பஞ்சவரை ஐவரையுந்தானழைத்து
உருவமதயானை வுத்தமர்களவரையும்
மாயத்தால்சூதாடி மண்பறிக்கமண்பறித்து
மானைத்துகிலுரிந்து மன்னவரைக்காட்டோட்டி
கோனைத்துகிலுரிந்து கொற்றவரைக்காட்டோட்டி
பருக்கல்லுறுத்த பனிவந்தலைமோத
ஓடும்பருக்கனும் உள்ளங்கால்தானுறுத்த
கனிந்தமரத்தடியில் கண்பள்ளிக்கொண்டிருந்தார்
இன்னமின்னங்கொறைய மாட்டார்கள்பஞ்சவர்கள்
அரக்குமாமாளிகையில் ஐவரையுஞ்சுட்டெரித்தாய்
அத்தாலுந்தப்பிப் பிழைத்தார்களாணழகர்
மாயரிடபுண்ணியத்தால் மன்னர்பிழைத்தார்கள்
ஆயாருளாலே ஐவர்பிழைத்தார்கள்
நடக்கும்வழிதனிலே நட்டுவைத்தாய்வாளதனை
குளிக்குங்குளந்தனிலே கொடிஊசிநட்டுவைத்தாய்
முழுகுங்குளந்தனிலே முட்களைநட்டுவைத்தாய்
அத்தாலுந்தப்பிப் பிழைத்தாரணழகர்
எண்ணையிட்டுக்கொள்ளுமென்று மல்லர்களைத்தூதுவிட்டார்
கொல்லவந்தமல்லர்கள் கண்டோடேதான்மடிந்தார்
சோற்றிலேநஞ்சையிட்டு சூஸ்திரமாய்க்கொல்லவந்தாய்
தண்ணீரில்நஞ்சையிட்டாய் தாமமுடியாற்று
உண்கிறசோற்றிலே வசநாபிதான்கலந்தாய்
வசநாபியென்றுசொல்லி மதித்துஅதைப்பாராமல்
வெற்றிமதயானை வீமன்மதகரியான்
அத்தனையுங்கூட்டி அமுதுபோசித்தாரே
அலைகொண்டதலைமயக்கந் தாம்வேந்தர்தான்கொண்டார்
வெற்றிமதயானை வீமரவர்மாண்டாரே
மாயனொருசந்நியாசி வேஷமதையெடுத்து
மருந்துப்பைதோளில்வைத்து வஞ்சாரமாயவரும்
வெற்றிமதயானை வீமனையெழுப்பிவிட்டார்
அத்தாலுந்தப்பிப் பிழைத்தார்களவர்களும்

வெட்கங்குலைந்தார்கள் வெட்கிட்டார்கள்
பத்தினியாள் சாபம் பலித்ததே பாம்பருக்கு
உத்தமியாள் சாபம் முடனே பலித்ததல்லோ
அத்தானுஞ் சாடை யறியாமற்போனீரே
பத்தினியாளென்றுசொல்லிப் பாராமற்போனீரே
இப்பெரியோரும் எழில்பெரிய ஆதினரும்
அத்திபுரமும் அடங்கலுங்கம்முமென்றுன்
நூலால்கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியை
எல்லையுலகங்கள் யிருந்தரசு ஆள்வோமென்று
எண்ணியிருந்தீரே அன்றுவேசீர்கேளும்

புனந்திரன் சொல்வது.

பதினெட்டு நாளையிலே படைமன்னர்சண்டையிலே
பாரதமென்று படைபொருதும்வேளையிலே
ஆடிப்பறக்கும் அமுர்தசமர்க்களத்தில்
நூலாங்கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியை
வெற்றிபெறயானை வீமர்தண்டாலே
பட்டுவிழுந்தாலே படைமன்னர்சபைநடுவே
தோருவடிவழகி துரௌபதைநாயகியாள்
உன்மார்மேலேயேறி மயிரைமுடிக்கவென்று
குடல்மாலைதானெடுத்து கொண்டைக்குயராக்கி
மார்பெலும்பைத்தானெடுத்து வண்ணசீப்பாக்கி
மாருதிரந்தானெடுத்து மயிர்க்கூந்தல்தான்தடவி
சம்பங்கிஎண்ணெய்போலேதடவியவள்
வாரிமயிர்முடிக்க நாளாச்சேமன்னவனே
கோதிகுழல்முடிக்க நாளாச்சேகொற்றவரே
இன்னம்மனதில் வைராக்கியம்வேண்டாங்காண்
பங்குவிட்டாரும் பருத்தாசுதந்துவிடும்
பாதிநகரமல்லோ பஞ்சவர்க்குநீகொடுத்து
ஒத்துப்பிழையுமென்று னுத்தமனார்வீரியனும்
கலந்துப்பிழையுமென்றுன் கட்டழகன்வீரியனும்

திரியோதிரன் கோபித்து விகர்ணனுக்குரைப்பது.

இவன்சொன்னவார்த்தையெல்லாம் வெகுநாகன்தான்கேட்டு
விகர்ணனுடனுரைப்பதற்கு வெகுண்டுமனங்கொதித்து
தம்பிமுகம்நோக்கி தார்வேந்தனேதுசொல்வான்
தூதுரைக்கவந்தானே தூர்விலங்கன்றனும
வேசிபெற்றபிள்ளை விபட்டுவந்தானே
தாசிபெற்றபிள்ளையிவன் தூதுரைக்கவந்தானே
அவனுடனேநீகூடி அடுத்துபோர்செய்தாலும்
நீங்கள்-ஒருமிக்கக்கூடியல்லோ யுத்தங்கள்செய்தாலும்
எந்தன்முடிசிந்தி யிறந்தான்போனாலும்
மகுடமுடிசிந்தி மாண்டுமடிந்தாலும்

புஜேந்திரன் திரியோதிரனுடைய பாணங்களை தவிடுபெறச்செய்தது.

கண்கள்பொறிபறக்க காந்தாளமாகுதங்கே
வில்லெடுத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
விட்டானொருபாணம் மன்னேந்திரனினெதிர
மன்னேந்திரன்குலுங்க மாற்றான்திடுக்கிடவே
மாற்றான்திடுக்கிடவே மறுமன்னர்கொக்கரிக்க
மற்றுமொருகணையை மறுகணையைத்தான்தொடுத்தான்
தேசத்தையாளுந் திரியோதிரன்வீற்றிருக்கும்
சிம்மாசனங்களெல்லாம் தவிடுபொடியாகுதங்கே
முத்துமுடிகளெல்லாம் முறிபட்டுத்தானுதிர
தங்கமுடிகளெல்லாந் தரையில்புரண்டுருள
வாள்கத்தியம்புகளும் வில்லு தடிசக்கரமும்
அத்தனையுமற்றுவீழ மற்றுங்கணைதொடுத்தான்
சரமேற்சரம்பொழிந்தான் சாமர்த்தியமுள்ளவனும்
இப்படியாகவிவன்விட்டபாணமெல்லாம்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து

திரியோதிரன்கோபித்து புஜேந்திரனைப்பார்த்துரைப்பது.

கோபித்துக்கண்சிவந்து கொல்லும்புலியதுபோல்
பத்தியநாகம் பவளம்போற்கண்சிவந்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
சூரியமண்டலத்தைச் சுட்டிச்சுவாலையமாய்
அக்கினிமண்டலத்தை யடுத்துச்சுவாலையமாய்
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகரித்து
மீசைதுடிதுடிக்க விழிகள்பொறிபறக்க
கண்கள்பொறிபறக்க காந்தாளம்பொங்கிவர
இந்திரனைப்பார்த்து யெடுத்துரைப்பான் திரியோதிரன்
சாணுண்டையபாவுன் சாமர்த்தியந்தாழ்ப்பேன்
சௌரியத்தைநான்குலைத்து தலையையுடைத்திடுவேன்
நாகக்கணையாலே நானேதலையுடைப்பேன்
அறுதலைப்பெற்றபின்னை ஆட்டிவைப்பேனம்பலத்தில்
என்றுகணையெடுத்தா னிந்திரன்மேலேவிட
இவனுரைத்தவார்த்தையெல்லாம் யிந்திரனுந்தான்கேட்டு
தேசத்தையாளுந் திரியனுக்கேதுசொல்வான்

புஜேந்திரன் திரியனுக்குரைப்பது.

பச்சைமடல்விரியும் பாளைவிரிபூமணக்கும்
பாஞ்சாலமகாராசன் சுயம்வரப்பந்தலிலே
தோருவடிவழகி துரௌபதைநாச்சியை
மாலையிடவந்தவர்கள் வர்ணலட்சம்ராசாக்கள்
அவர்களுடனாவந்தீரெதுணைமுக

பொல்லியாள் துரோபதையை வில்வளைத்தநாளையிலே
வில்லைவளைப்பதற்கு உன்னாலாகாதே
வேந்தர்சபைநடுவே மானங்குலைந்தாயே
அன்றுபட்டபாடு மறந்தாயோ துணைமூடா
இன்னமுமெந்தனுடன் எதிர்நின்றுபேசவந்தாய்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் பாகம்வளர்த்திருந்தார்கள்
பாகமதுபார்க்க வந்தாயே துணைமூடா
சந்தனச்சேற்றில் நடக்கவறியாமல்
சவுரியங்களற்று சுறக்கிலிருந்தாயே
ஆண்மைகளற்றமல்லோ அங்கேயிருந்தாயே
மன்னர்சபைநடுவே மானங்குலைந்தாயே
தோறுவடிவழகி துரோபதையாளன்றுசி
பாக்கியற்றுமன்னுகப் பார்த்துநகைத்தாளே
அத்தாலுஞ்சாகிலையே துணைமூடாயுன்றுடம்பு
நீ ஆண்பிள்ளைபோல அமருக்குவந்தாயே
வில்வலித்துயுத்தம்பண்ண வந்தாயேவேந்தர்முன்னே
கைதனிலேவில்லெடுக்க அறிவாயோகட்டமூடா
சாதுவன்பிடையவனே சாமர்த்தியம்பாருமென்றான்
அறியாதவெந்தனிட ஆண்மைகளைப்பாருமென்றான்

திரியோதிரன்பேரில் பாணம்விட்டது.

விட்டானொருபாணம் மண்ணதிரவிண்ணதிர
மண்ணதிரவிண்ணதிர மாற்றான்திடுக்கிடவே
எதிரிதிடுக்கிடவே வெல்லையதிர்ந்துவிழ
மற்றுமொருகணையை மறுகணையைத்தானெடுத்தான்
அந்தவொருபாணம் வந்துவிழுமனேகம்
திரியோதிரன்முடிமேல் யிருக்குஞ்சிகரங்களும்
அவன்கைவிலாயுதமும் அத்தனையுந்தான்பார்த்து
வந்துவிழுந்தது மன்னனிடைகைத்தலத்தில்
மற்றுமொருகணையை மன்னனிடைகைத்தலத்தில்
திரியோதிரனுடனுஞ் சேனைத்திரள்படையும்
அத்தனையுந்தெத்தி நடந்ததேபாணமது
போரஞ்சாமன்னர் புனந்திரனேதுசொல்வார்

புனந்திரன் சொல்வது.

பஞ்சவர்களைவரும் பாரவனந்தாண்டி
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியஞ்சென்றாரே
பன்னிரண்டுதன்வருஷம் ஆண்டாரேகானகத்தில்
அவர்களைத்தேடியல்லோ பறப்பினார்மன்னர்களை
மன்னர்களைவிட்டவரைக் கொல்லுமென்றுவாக்களித்தார்

அவர்களைக்காணும லனுத்துவத்தார்மன்னர்களும்
துருவாசமாமுனியைத் தொழுதுதவம்புரிந்து
ஆணழகர்பஞ்சவரை அவனைவிட்டுக்கொல்லுமென்றார்
ஐவரைத்தேடி நடந்தார்வனம்நோக்கி
ஐவரையுங்கண்டாரே அப்பெரியதுருவாசர்
ஐவர்பஞ்சபாண்டவரும் மாமுனியைக்கண்டவுடன்
மாமுனியானவற்கு மன்னர்பஞ்சபாண்டவரும்
ஆசனங்கள்தான்போட்டு அவர்க்களித்தார்போசனங்கள்
பலாயிலையில்போசனங்கள் படைத்தாரேமாமுனிக்கு
அமுதுண்டுமாமுனியும் ஆசித்தவர்மறந்து
ஐவரையும்வாழ்த்தி நடந்தாரேகானகத்தில்
மற்றுமொருவனத்தில் மன்னரொளித்திருந்தார்
தங்கைமணவாளன் தறுதலையன்தானறிந்து
ஐவர்பஞ்சபாண்டவர்க்கும் அபிஷேகபத்தினியாள்
அபிஷேகபத்தினியாள் ஆரணங்குதுரோபதையும்
அவளழகுமொப்பனையும் ஆருமிலங்கையகத்தில்
துரௌபதையைக்கொண்டு தாக்குமஞ்சமேற்றிவைத்தால்
அப்பெரியநாடு செழில்பெரியதுதினமும்
உன்னுடையநாடுஞ் சர்ணபதியாதினமும்
அத்தனையுந்தாரேனென்றார் ஆனந்தமாப்பனுக்கு
நல்லதென்றுசம்மதித்தா னைமுடியானும்
ஒளித்திருக்கும்வனத்தை வுத்தமியைத்தான்தேடி
பத்தினியைத்தேடிபல்லோ வந்தானேகானகத்தில்
குறைத்துதுரௌபதையைத் தூக்கிடத்தானே
கபடமனுவாத்துக் கட்டழகன்போட்டதான்
ஆரணங்குபோனதை ஐவர்களுக்குத்தானறிந்து
பாதகன்கொண்டுபோற சேதியறிந்து
தேரையுடைத்தவர்கள் செம்புரவிதான்மடித்து
இரதத்தைபவுடைத்து நல்புரவிதான்மடித்து
பாவையழிபெரைப் பத்தினியைக்கொண்டுவந்து

சயித்தவனைக் கழுதைவடிவாக்கினது.

கட்டழகன்சயித்தவனைக் கழுதைவடிவாக்கி
கழுதையைத்தொட்டுதொரு கட்டழகரானவர்கள்
ஓட்டிவருகவென்று யிட்டாள்பெருஞ்சாபம்
எங்கள்-வம்பிசத்தார்தொட்டாலே விட்டுவிடவேணுமென்றான்
பிருகவடிவாக்கி பறுப்பிறுக்கண்டை
கட்டழகர்மைத்துனனை கழுதையாயாக்கிவிட்டார்
அன்றுமேகண்டாயே அவருடையவீரியத்தை
இன்னமுங்காண்பாய்நான் பெண்களிடசௌரியங்கள்
மற்றுமொருவனத்தில் வாசம்பண்ணூர்மன்னவர்கள்

இன்னுஞ்சிலகாலம் சென்றபிறகாக
ஆகாயமேகத்தருவா அலறிவிழ்ந்தான் தம்பாலங்கள்
பாரிடைக்கத்தலத்தில வந்துவிழுந்தது
அவன் தலையைவாங்கிவைக்க ஆயரவிழுந்தார்
ஆகாயமேகாருவர் அவன்பயந்தோடிவந்து
அர்ச்சுனராசாண்டை அபயமிட்டோடிவந்தான்
அர்ச்சுனராசர் அவனையெடுத்தணைத்தார்
அத்தவிசேஷம் அதுவறிந்துமாயவரும்
மன்னர்மனதறிய மாயர்படையெடுத்தார்
உத்தமனொருவன் அடைக்கலமதிலெண்ணி
அத்தானுஞ்சாண்டை அறியாமற்போனீரே
மாயருக்குமெங்களுக்கும் மச்சான்முறைதானுண்டு
உன்படையுமென்படையு மொன்றாய்க்கூட்டினார்
அவர்மேல்சண்டைபண்ண வந்தீர்களெல்லாரும்
வெற்றிமதயானை வீமனுமர்ச்சுனனும்
உத்தமப்படைத்தளத்தை ஒருமிக்கவேநூத்து
மாயன்படையையெல்லாம மண்ணுக்கிரையாக்கிவிட்டார்

மாயர் அருச்சுனன்மேல் சந்தோஷப்பட்டது.

மாயனுமெதிர்த்து மர்மம்வெளியிடாமல்
தேரைவிட்டுக்கீழிறங்கி நடக்கத்தமாயவரும்
வீமருக்குமருச்சுனற்கும் எதிராகவந்துமவர்
அருச்சுனரைக்கட்டி யணைத்துவுறவாடி
வீமரைக்கட்டி வெகுவாயுறவாடி
மாயவருமருச்சுனனும் மனங்குளிர்ந்தாரந்நேரம்
ஆயருமவீமரும் அங்கேமனங்குளிர்ந்தார்
அத்தானுஞ்சாண்டை யறியாமற்போனீரே
இன்னமின்னம்பார்க்கணுமோ எங்களுடைவீரியங்கள்

திரிசோபாதிரன் மாடுபிடிசண்டையில் முதுகுகொடுத்து ஓடினது.

மாடுபிடிசண்டையிலே மன்னவரேவந்தீர்கள்
பேடியர்சண்டையிலே பின்னிடைந்தோடினீர்கள்
அர்ச்சுனனார்சண்டையிலே ஆண்மைகுலைந்தீர்கள்
வீமனார்சண்டையிலே வெற்றிகுலைந்தீர்கள்
பாண்டவருஞ்சேனைகளும் அத்தனையும்நீர்தோற்று
சேனைபொருவென்னம் திரண்டேவந்தனையவிட்டு
முடிதரித்தராசாக்கள் முதுகிட்டோடினீர்கள்
கணைபிடித்தராசாக்கள் கால்நடுங்கவோடினீர்கள்
அறியாதவையாமிட ஆண்மைகளைக்கண்டமோ
தெரியாதஎன்னுடைய சௌரியத்தைப்பார்த்தீரோ
இன்னமின்னமென்னுடைய சௌரியங்கள்பார்க்கணுமோ

அவர்களைக்காணுமலுற்றுவந்தார்மன்னர்களும்
துருவாசமாமுனியைத் தொழுதுதவம்புரிந்து
சுணமுகர்பஞ்சவரை அவனைவிட்டுக்கொல்லுமென்றார்
இவரைத்தேடி நடந்தார்வனம்நோக்கி
இவரையுங்கண்டாரே அப்பெரியதுருவாசர்
ஐவர்பஞ்சபாண்டவரும் மாமுனியைக்கண்டவுடன்
மாமுனியானவர்க்கு மன்னர்பஞ்சபாண்டவரும்
ஆசனங்கள்தான்போட்டு அவர்க்களித்தார்போசனங்கள்
பலாயிலையில்போசனங்கள் படைத்தாரேமாமுனிக்கு
அமுதுண்டமாமுனியும் ஆசித்தவர்மறந்து
இவரையும்வாழ்த்தி நடந்தாரேகானகத்தில்
மற்றுமொருவனத்தில் மன்னவொளித்திருந்தார்
தங்கைமணவாளன் தருதலையன்தானைமறந்து
ஐவர்பஞ்சபாண்டவர்க்கும் அபிஷேகபத்தினியாள்
அபிஷேகபத்தினியாள் ஆரணக்குரோபனையும்
அவளழகுமொப்பனையும் ஆருமில்லைவையகத்தில்
துரௌபதையைக்கொண்டு நாக்குமஞ்சமேற்றிவைத்தால்
அப்பெரியநாடு மெழில்பெரியதுநைமும்
உன்னுடையநாடுங் சர்ணபதியாநைமும்
அத்தனையுந்தாரேனென்றார் ஆனந்தமாப்பனுக்கு
நல்லதென்றுசம்மதித்தா னையமுடியானும்
ஒளித்திருக்கும்வனத்தை வந்தபின்னைத்தான்தேடி
பத்தினியைத்தேடியல்லோ வந்தானேகானகத்தில்
குறைத்துத்துரௌபதையைத் தூக்கிக்கொண்டானே
கபடமனுளைத்து கட்டழகன்போய்விட்டான்
ஆரணக்குபோனதை ஐவர்களுந்தானறிந்து
பாதகக்கொணடுபோறசேதிவரறிந்து
தேரையுடைத்தவர்கள் செம்புரவிதானடித்து
இரதத்தையவருடைத்து நல்புரவிதானடித்து
பாவையழகியைப் பத்தினியைக்கொண்டுவந்து

சயித்தவனைக் கழுதைவடிவாக்கினது

கட்டழகன்சயிந்தவனைக் கழுதைவடிவாக்கி
கழுதையைத்தொட்டதொரு கட்டழகரானவர்கள்
ஓட்டிவருகவென்று விட்டாள்பெருஞ்சாபம்
எங்கள்-வம்பிசத்தார்கொட்டாலே விட்டுவிடவேணுமென்றான்
மிருகவடிவாக்கி யனுப்பினுருக்கனண்டை
கட்டழகர்மைத்துனனை கழுதையாக்கிவிட்டார்
அன்றுமேகண்டாயே அவருடையவீரியத்தை
இன்னமுங்காண்பாய்காண் வெங்களிடசௌரியங்கள்
மற்றுமொருவனத்தில் வாசம்பண்ணுர்மன்னவர்கள்

வில்லுதிறமுமில்லை வேந்தர்பகையுமில்லை
உங்களதுபாணம்போல் என்னைநினைத்தீர்களோ
எந்தனிடகைபாணம் பிதின்னதுமைசொல்லுகிறேன்

புனத்திரன் பாணத்தின் மகிமைகூறல்.

எதிர்குறிகாணுதே வுறைசொல்லமாட்டாதே
உதிரங்கள்கண்டாலே வுறைவந்துசேர்ந்துவிடும்
இரத்தக்குறிகண்டாலே உறைவந்துசேர்ந்துவிடும்
என்-பாணத்தின் தன்மகிமை யறியீரோமன்னர்களே
என்னுடையவில்திறத்தை யறியீரோமன்னவரே
இரத்தக்குறிகண்டாலே உறைவந்துசேர்ந்துவிடும்
உதிரக்குறிகாட்டுமென்றான் உத்தமனுரீத்திரரும்
அங்கிருக்குமன்னர் அரையர்துரைகளெல்லாம்
கேட்டபுனத்திரற்கு கேள்விசொல்லமாட்டாமல்
நெஞ்சுலர்ந்துநாவறண்டு நித்திலக்குபூமுடியார்
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
மன்னர்முகம்பார்த்து மர்மமாய்வீற்றிருந்தார்

கர்ணர் புனத்திரனுக்கு திரியோதிரனுயிர்த்தானைக்
கண்சாடையாய்க் காட்டினது.

காஞ்சிநாடாளுங் கர்ணசிகாமணியும்
மன்னர்முகம்நோக்கி மர்மமாயேதுசொல்வார்
தேசத்தையாளுந் திரியோதிரன்முன்பாக
இருவருக்குமுயிர்த்துணை நித்திலக்குபூமுடியான்
கண்சாடைகாட்டினார் கர்ணசிகாமணியும்
போரஞ்சாமன்னர் புனத்திரனுந்தான்பார்த்து
காளையிடபுத்திரனும் கைபாணந்தூக்கிவிட்டு
வேந்தனிடகைபாணம் விறிட்டெழுந்தது
புனத்திரன்பாணமது பொறிபறக்கத்தானெழுந்து
ஆகாயவீதியெல்லாம் அக்கினிசுழன்றுவிழ
உயிர்த்துணைவெட்டு உறைவந்துசேர்ந்ததப்போ
போரஞ்சாமன்னர் புனத்திரராசாவும்
ஆறினன்கோபம் அமர்ந்தான்கொலுமேடை
தேறினன்கோபம் தெளிந்தான்கொலுமேடை
கொற்றவனார்கோபம் குளிர்ந்தசலம்போலானார்
மன்னவனார்கோபம் மனதாறிவீற்றிருந்தார்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
உயிர்த்தாணைபோனவுடன் உற்றபலமிழந்தான்

### திரியோதிரன் ஆங்காரபலமிழந்தது.

வாடிமனந்தளர்ந்தான் வலுமன்னராசாவும்
கைசோர்ந்துமெய்சோர்ந்து கையில்கணைசோர்ந்தான்
உற்றபலங்குறைந்து ஒங்கிமனந்தளர்ந்து
சரீரகம்பிகொண்டவனும் யிருந்தசபைதனிலே
மூர்ச்சையடைந்தாலே முடிமன்னராசர்கள்முன்
களையாகிவீழ்ந்தானே கட்டழகன்வீரியனும்
இப்படியாக யிருக்கின்றவேளையிலே

### திரியோதிரனுக்கு களைமாறச்செய்தது.

சாதிமணிக்கவரி சந்தனத்தாலூதுவத்தி
கோரமணிக்கவரி குங்குமத்தாலூதுவத்தி
வீசினார்தாதுவர்கள் வெல்புருவக்கண்ணனுக்கு
திறவாதகண்கள்ரெண்டும் திறந்துமவன்பார்த்து
முழியாதகண்கள்ரெண்டும் முழித்தான்திரியோதிரன்
தாகமதுகொண்டல்லவோ தார்வேந்தன்வீற்றிருந்தான்
இப்படியாக யிவனிருக்கும்வேளையிலே

### புனைந்திரன் உத்தரவுகேட்கிறது.

போரஞ்சாமன்னர் புனைந்திரனப்போது
வந்துமிகப்பொழுதாச்சு மன்னர்பெரியவரே
போகவிடைதாரும் என்றுமன்னன்கைதொழுதான்
பாட்டனும்வீஷ்மரும் பாராநேர்துரோணரும்
சிற்றப்பாவிதுரனுக்கும் சீருள்ளகாங்கையற்கும்
காஞ்சிகாடானுங் கர்னர்பெருமானுக்கும்
தேசத்தையாளுந் திரியோதிரனுக்கும்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்
அங்கிருக்குமன்னர் அரையர்துரைகளெல்லாம்
தெண்டனிட்டமன்னவனை வாரியெடுத்தணைத்து
வாரியெடுத்தணைத்து மார்மேலேகொண்டணைத்து
போய்வாருமையா புனைந்திரராசாவே
ஆருயிரம்பாண்டியற்கும் ஐயன்மார்பாண்டவற்கும்
ஐவர்பஞ்சபாண்டவற்கும் அல்லித்திருநாயகிக்கும்
எங்களதுசென்மம் யெடுத்துரையுமிந்திரரே
போய்வாருமென்று பொருந்திவிடைகொடுத்தார்
போரஞ்சாமன்னர் புனைந்திரராசாவும்

## பேரிகை முழங்குவது.

அந்தத்தெருவீதியிலே அடித்தார்கள்பேரிகையை
ஊதினார்சின்னம் உலகேழுந்தானதிர
செம்பொன்னாற்காளை திசைவிளங்கவூதினான்
பொன்னினாற்காளை பொருத்தினவூதினான்
இந்திரனும்போரேனென்று யெடுத்தான்விருதோசை
செயம்பெறுவாரேனென்று ஊதினான்சங்கெடுத்து
காஞ்சிகொடாளுங் கர்ணரவர்பெற்றெடுத்த
வேல்பொருதுங்கண்ணனும் விஸ்வகேதுதான்கேட்டு

## கர்ணர்குமாரன் விஸ்வகேது யுத்தத்துக்குப்புறப்பட்டது.

எந்தவூராசாவோ வெவ்விடத்துமந்திரியோ
கொச்சித்தசமானுங் குணமுள்ளராசாவோ
மாற்றான்படையோதா னிவ்வீதிவந்ததென்ன
எதிராளிபடையோதா னிவ்வீதிவந்ததென்ன
செயம்பெறவந்தாரென்று ரணபேரியடிபடுது
வந்தொருராசாக்கள் மன்னரைநாம்பார்ப்போமென்று
சென்றொருராசாக்கள் சேவகத்தைக்காண்போமென்று
சினத்துமவனெழுந்து தேர்விசையச்செல்வனுமே
தேர்ப்பாகனையழைத்து தேர்கொண்டுவாருமென்றான்
அப்படியேயல்லவென்று ஆணமுகனோடிவந்து
தேரையலங்கரித்து தேர்ப்பாகன்கொண்டுவந்தான்
தேர்வந்ததென்றுசொல்லி தீர்க்கமுடன்தெண்டனிட்டான்
வேல்புருவங்கண்ணனும் விஸ்வகேதுதானெழுந்து
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சங்குவிட்டு
சிவசிவாவென்றுசொல்லி திருநீறுக்காப்பணிந்து
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிப்பொட்டுமிட்டு
வாளெடுத்துவில்லெடுத்து வளைதடிகையெடுத்து
அம்பெடுத்துவில்லெடுத்து அம்புறுத்தூணிதானெடுத்து
ஆரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
மாலைமுடியானு மணிரதத்தின்முன்னேவந்து
தேரைச்சுற்றிதெண்டனிட்டு தேரின்மேலேறினான்

பச்சைக்குடையாம் பவளநெடுங்குடையாம்
வச்சிரக்குடையாம் வைடூரியப்பொற்குடையாம்
முத்துக்குடைபிடிக்க முடிமன்னர்தேர்நடக்க
பவளக்குடைபிடிக்க பார்மன்னர்தேர்நடக்க
ரத்தினக்குடைபிடிக்க ராசாக்கள்தேர்நடக்க
போரஞ்சாமன்னர் புனக்ரருஞ்சேவகரும்
அர்ச்சுனனார்புத்திரனும் அவருடையசேனைகளும்
அம்பலத்துவாசல் நடந்தாரழகாக
குருடனிடைவாசலெல்லாந் தாண்டியந்தகொற்றவனும்
பத்துபடித்தளமும் பதினெட்டுமெண்டபமும்
எட்டுப்படித்தளமும் யிராசாக்கள்மண்டபமும்
அத்தனையுந்தாண்டிவந்தார் ஆனமுகநீந்திரரும்
வாசலைக்காக்கின்ற வார்கொள்ளிமுன்னம்வந்தார்

வார்கொள்ளி புனக்திரனைச் செய்திகேட்பது.

வாசல்தடைக்காரி வார்கொள்ளியேதுசொல்வாள்
வானவர்தன்புத்திரனே வந்தீரோ தூதுரைக்க
மாதுமணவாளர் தூதுரைத்துமீண்டீரோ
தூதுரைத்துவந்ததெல்லாம் சொல்லுமையாயெந்தனுக்கு
சொல்லுமையாவென்றுசொல்லித்தொழுதிரங்கிதெண்டனிட்டாள்
போரஞ்சாமன்னர் புனக்திரனேதுசொல்வார்
போனவிசேஷம் புதுமைநடந்ததுவும்
நாலிரண்டுவார்த்தையாய் நடப்பித்தாரிந்திரரும்
அந்தவிசேஷம் அதுகேட்டுவார்கொள்ளியும்
கேட்டுமனமகிழ்ந்து கிளிபவளச்செவ்வாயாள்

வார்கொள்ளி யுரைப்பது.

அத்திபுரத்தை அரசாளவாருமையா
அங்கநாட்டை ராசாளவாருமையா
உங்கள் துவரிடசீமை முழுதுமேயாளுமென்று
போய்வாருமென்றுசொல்லிப் பொன்னடிக்குதெண்டனிட்டு
போரஞ்சாமன்னர் புனக்திரனுமேதுசொல்வார்
மூன்றுகாலார்பொழுது முடிமன்னராளுவது
நாலாநாளெனக்கு ஆகுதாம் ராச்சியங்கள்
பெட்டிப்புசப்பாளங்கள் நாமே தருகிறேன்காண்
எதுக்குமஞ்சாதே யிளங்கொடியேவீற்றிரென்றான்
சொல்லித்திரும்பினான் துன்னீலங்கண்ணனும்
அத்திப்புரத்தில் நெடுவீதிவாரார்கள்

திரியோதிரனை புனந்திரனுத்தரவுகேட்டதற்கு
மௌனமாய் தலையையசைத்தது.

தேசத்தைநாளுந் திரியோதிரன்முன்னேவந்து
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டார்
வந்துபணிந்தவனை வாழ்த்திவிடைதாராமல்
வாரியெடுக்காமல் வண்ணமுடிவைக்காமல்
மகுடமுடியசைக்க மௌனமாய்த்தானிருந்தான்
முத்துமுடியசைக்கி மெத்தவேதானிருந்தான்
போரஞ்சாமன்னர் புனந்திராசாவும்
ஆகட்டுமென்றுசொல்லி ஆணழகர்சொல்லலுற்றார்
படிபடியென்றுசொல்லி படிந்தது அவ்வானை
முடிக்கம்பந்தட்டி முதுகின்மேல்கையைவைத்து
கைத்தலத்தைத்தட்டிக் களுத்தானையேறினான்

புனந்திரன் பிரயாணப்பட்டு வருகிறது.

மத்தகசத்தைத்தட்டி மதயானையேறினான்
அம்மானுந்தானும் மதயானையேறினார்
மாமாவுந்தானும் மதயானையேறினார்
சிலமன்னரெல்லோரும் இடுக்கிட்டெழுந்திருந்து
சரியானையேறினார் தன்னோடொத்தராசாக்கள்
முன்னானையேறினார் மூன்றுலட்சம்ராசாக்கள்
பின்னானையேறினார் பெருகைராசாக்கள்
முன்னேமுரசெடுத்து முன்னானைமேல்போட்டார்
பின்னேமுரசெடுத்து பின்னானைமேல்போட்டார்
சிலமன்னரெல்லோரும் தேரின்மேலேறினார்கள்
பலமன்னரெல்லோரும் பல்லக்குயேறினார்கள்
குலமன்னரெல்லோரும் குதிரையின்மேலேறினார்கள்
அழகானமல்லரெல்லாம் ஆனைமேலேறினார்கள்
பட்டர்புலவர் பதினெட்டுமந்திரிகள்
சித்தர்புலவர் சிறப்பானமந்திரிகள்
சிங்கங்காடிபுலி சோமுழங்கினார்
யானைகாடிபுலி யருகில்வந்துமுழங்கினார்
அவரவர்கள்வாகனத்தில் அவரவர்களேறினார்
ஏறினபோதே யெடுத்தார்நெடுங்குடைகள்
முத்துக்குடைகள் முழுவயிரப்பொற்குடையும்
தங்கக்குடையாம் தவளநெடுங்குடையாம்

சிவசங்கராவென்றுசொல்லி தேரின்மேலேறினான்
ஒரு அக்ரோணிசேனையுடன் உத்தமனும்வாரானே
சிலமன்னரெல்லாம் தேரின்மேலேறினார்
பலமன்னரெல்லாம் பல்லக்கிலேறினார்
தன்னோடொத்தராசாக்கள் அழகானையேறினார்
அழகானையேறினார் ஐந்துலட்சம்ராசாக்கள்

குடையின் சிறப்பு.

ஏறினபோதே எடுத்தார்நெடுங்குடைகள்
முத்துக்குடையாம் முழுவயிரப்பொற்குடையாம்
தங்கக்குடையாம் தவளநெடுங்குடையாம்
பச்சைக்குடையாம் பவளநெடுங்குடையாம்
எடுத்துமறைத்தார்கள் எண்ணாயிரங்கோடி
சத்திமறைத்தார்கள் சூரியனைக்கண்மறைக்க
பக்கம்மறைத்தார்கள் பகவானைக்கண்மறைக்க
ஒற்றைக்குடைநிழலில் வாரானேவீரியனும்
சாஞ்சிராடனும் கர்ணசிகாமணியும்
வேல்புருஷசன்னனும் விஸ்வகேதுவாரேனென்று

விஸ்வகேது விருதுமுழக்கினது.

விஸ்வகேதுவாரேனென்று விருதுமுழக்கிவிட்டான்
சண்டைக்கிவந்தேனென்று ஊதினான்தாரைசின்னம்
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைபேரியடிபடுது
வெற்றிவெற்றியென்றுசொல்லி வெற்றிகொடிபடுது
கடந்தானேவிஸ்வகேது நாலுதிக்குந்தானதிர
போரஞ்சாமன்னர் புனத்திராசாவும்
வந்துவளைந்தானே வல்லிடிபோல்விஸ்வகேது
போரஞ்சாமன்னர் புனத்திரரைத்தான்பார்த்து
கட்டழகன்விஸ்வகேது காளையற்கேதுரைப்பான்
ஆரடாமன்னவனே அறிவுகெட்டபாதகனே
எத்தனூர்சண்டைபண்ணி யிந்தவூர்செயிக்கவந்தாய்
எத்தனூர்வெற்றிகொண்டு யிந்தவூர்கெலிக்கவந்தாய்
நில்லடாமன்னவனே நிமிஷத்தில்வென்றிடுவேன்
வாளாலுயிர்பிளந்து வல்லுயிரைக்கொள்ளைகொண்டு
யமனுலகுதேடி யிப்போதனுப்பிடுவேன்
நமனுலகத்துக்கு நானேயனுப்பிடுவேன்
என்றுமவன்வில்லெடுத்தா னித்திலங்குபூமுடியான்

எவ்வுலகராசாக்கள் இங்கேவந்தார்சண்டைசெய்ய
ஆள்பெருந்சேவகரை யனுப்பியவர்பாருமென்றார்
ஓடுவர்களோடிவந்து துரிதமுடன்கண்டார்கள்
இருதாத்துசேனைகளும் இந்திராசாவும்
காஞ்சிநாடாளுங் கருணனிடபுத்திரனும்
இவர்களுடன்சண்டையென்று எழுந்துமிகநடந்து
காஞ்சிநாடாளுங் கருணனுக்குதெண்டனிட்டு
உத்தன்குமாரனும் ஒளிவுள்ளயிந்திரனும்
விஸ்வகேதுராசாவும் விஜையனுடபுத்திரனும்
இவருடன்சண்டையென்று இணைகடக்கைதொழுதார்
காஞ்சிநாடாளுங் கர்ணரவர்கேட்டு
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
என்றுமனதிலெண்ணி எழுந்திருந்தோடிவந்து
யுத்தமுகந்தனிலே வந்துநின்றுருத்தமரும்
போரஞ்சாமன்னர் புணக்கிரருந்தான்பார்த்து

புணக்கிரன் கர்ணனைக்காணுகிறது.

யானைவிட்டுக்கீழிறங்கி ஆனந்தவாழ்மார்பன்
பூவும்புதுமலரும் பொன்னாருகுஅட்சதையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருந்தானெடுத்து
காஞ்சிநாடாளுங் கர்ணருக்குமுன்னேவந்து
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
தெண்டனிட்டமன்னவனைக் கண்டல்லோசீர்கர்ணர்
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
உச்சிமுகந்துபின்னை உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கந்தடவி பவளவாய்முத்தமிட்டு
இப்படியாய்ப்பேசி இருக்கின்றவேளையிலே

விஸ்வகேது தகப்பனாகிய கருணனைக்காண்கிறது.

தேரேறிசண்டைபண்ணும் விஸ்வகேதுதான்பார்த்து
தன்னைப்பெற்றதந்தை கருணரங்கேவந்ததுவும்
அவர்-யானைவிட்டுகீழிறங்கி ஆனைமுகன்வந்ததுவும்
புண்ணியனார்பாதம் பூபோட்டுதொழுததுவும்
வாரியெடுத்துமல்லோ மார்போடணைத்ததுவும்
அத்தனையுங்கண்டானே ஆனைமுகன்விஸ்வகேது
தேரைவிட்டுகீழிறங்கி துருசாகத்தானடந்து
பூவும்புதுமலரும் பொன்னாருகுஅட்சதையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருங்கொண்டுவந்து

பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்ந்திடுவீர்
தூண்போலேநிலைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்நாளென்று மனதாரவாழ்த்தினார்
வாழ்த்திருப்பீரென்று மனதாரவாழ்த்தினார்
தம்பியைவாழ்த்தியபின்பே தார்வேந்தனேதுசொல்வான்
தம்பிதனஞ்சியனே சமர்த்துள்ளவீரியனே
அரண்மனைக்குவந்து அமுதுபொசியுமென்றான்

புனந்திரன் விஸ்வகேதுவுக்கு சொல்வது.

போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
அண்ணன்முகம்நோக்கி ஆனமுகன்ஏதுசொல்வான்
தமயன்முகம்நோக்கி தார்வேந்தனேதுசொல்வான்
இன்னம்மூனநாளார்பொழுது முடிமன்னராளுவது
காலசுரான்கம்பீர ஆருதுகாணராச்சியங்கள்
மன்னர்பெருமைகளும் மறுமன்னர்சேவகமும்
இரியன்பெருமைகளும் சேனைபேர்சேவகமும்
மூன்றுநாள்தன்னிலே சாயுதாரன் அண்ணாவே
நாலாம்நிந்திராளார் நாற்பெருவர்பூமுடியும்
நாற்பெருவர்பூமுடியும் நறுங்கஅடித்தபின்பு
சருவீரனையுடைத்து தார்வேந்தர்போட்டபின்பு
கமதெதன்னைமுடித்தபின்பு எத்திலங்குபூமுடியே
போதேவருந்தடந்தும் பொசைதுருவியென்றேச்சே
சமதாச்சிபாரண்மனையில் எல்லவருங்கூடி
ஒத்துக்கலந்து பொசிப்போங்காண்மன்னவரே
கூடக்கலந்துபொசிப்போங்காண்மன்னவரே
இப்போமாற்றான் தன்வாசலிலே பாலமுர்தமுண்ணலாமோ
எதிரியாரண்மனையில் இருந்தமுர்தமுண்ணலாமோ
என்றுவுரைத்தானே யிந்திரராசாவும்
விஸ்வகேதுதான்கேட்டு மெத்தமனமகிழ்ந்து
இவர்களுங்கொஞ்சி யிருந்தார்களங்கேசம்
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்

கருணர்புனந்திரனைப்பார்த்துச்சொல்வது.

கருணாரவர்பார்த்துக் கட்டழகர்ஏதுசொல்வார்
எமதஞ்சுபேர்தம்பியரும் அவருடையபுத்திரரும்
மன்னவர்கள்நூத்துபேரும் மன்னர்பஞ்சபாண்டவரும்
கோறுமாதவத்துக் குந்தியம்மாளென்தாயும்
யானும்என்புத்திரனும் என்னுடையதேவியரும்
ஒக்கக்கலந்து ஒருசலத்திலுண்போமோ
கூடியிருந்தாகாம் கூட்டமுதுண்போமோ
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அரசாளுங்கோலமதை

என்றன்கண்ணாலேகண்டு களிப்பேனோகட்டழகா
மனதாரப்பார்த்து மகிழ்வேனோமன்னவனே
என்றுமவருரைத்து ஏங்கிமனந்தளர்ந்து
இத்தித்துமன்னன் இருகண்ணும்முத்துதிர்த்தான்
போரஞ்சாமன்னர் புனந்திரனுந்தான்பார்த்து
ஐவர்பஞ்சபாண்டவரும் அவராளும்அரசுகளும்
மதுரைவளநாடு வையகப்பெரும்பசியும்
அத்திப்புரமும் அடங்கலும்உன்னதுகாண்
அங்கவளநாடும் அடங்கலும்உன்னதுகாண்
மன்னவர்கள்பஞ்சவர்கள் வனமேதிரிந்திடட்டும்
ஐயாவேநீரிருந்து அரசாளலாகாதோ
மன்னவரேநீரிருந்து வையகத்தையாளொணாதோ
காஞ்சிநாடாளுங் கருணர்பெருமாளும்
மன்னர்பஞ்சபாண்டவற்கு உடற்பிறப்புஎன்றாலே
உங்களுக்குமுன்பிறந்த உத்தமனாரென்றுசொன்னார்
காவலர்களைவர்களும் காடேதிரிவார்காண்
ஐயாவேநீரிருந்து அரசாளலாகாதோ
நீரும்அவருமென நிஷ்டூரம்வேறுமுண்டோ
அண்டர்பதியாண்டால் ஆகாதேஐவருக்கும்
நீர்மன்னர்பதியாண்டால் மனங்கொள்ளமாட்டாதோ
வந்துபதிசேருமென்றுசொல்லித்தெண்டனிட்டான்

கருணர்புனந்திரனுக்குச் சொல்வது.

காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு
போரஞ்சாமன்னர் புனந்திரற்குயேதுசொல்வார்
அய்யாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
இந்திரரேநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
காவலனார்பஞ்சவர் கட்டழகர்ஐவருக்கும்
என்மாதாபயின்றெடுத்த மன்னவர்களைவருக்கும்
எந்தனுடசேதி யெடுத்தொன்றுஞ்சொல்லாதீர்
கர்னனுடசேதியவர் காதிலேயும்போடாதீர்
மன்னர்பஞ்சபாண்டவர்கள் அவ்வரலாறிந்தாலே
ஐவர்களும்பூமிவிட்டுச் வானகத்திற்செல்வார்கள்
அவர்தோணியநாளுந் துலைத்தார்வனந்தனிலே
அவர்ஊழியுள்ளகாலமட்டும் உழன்றார்வனந்தனிலே
ஐவர்பஞ்சபாண்டவரும் அரசாளவேணுமையா
நான்படவேணும்படவேணும் பார்த்தன்கையம்பாலே
இன்னம்படவேணும் எழில்விஜயனம்பாலே
போரஞ்சாமன்னர் புனந்திரரேநீர்கேளும்
பாரதமென்று படைபொருதும்வேளையிலே
பதினெட்டாம்நாளையிலே படைபொருதுஞ்சண்டையிலே

சகுனிதலையைத் தவிடுபொடியாக்கிடுவேன்
தைலாட்டான் பூமுடியைத் தண்டாலடித்திடுவேன்
தங்கைமணவாளன் தறுதலையன் பூமுடியை
அரைநாழிக்கொள்ளையிலே அனலாயெரித்திடுவேன்
வாய்திறந்துநீருரைத்தால் வண்ணமுடிசங்கரிப்பேன்
ஐவர்பஞ்சபாண்டவரும் ஐயாகேளீருமல்லோ
ஒக்கயிருந்து அரசாளுமையாவே
சாஞ்சிதாடாருங் கருணர்கேட்டு

கருணர் புலந்திரனை ஆசீர்வதிப்பது.

போரஞ்சாமன்னர் புலந்திரனைத்தானெடுத்து
கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டுக்
கன்னியாபுலந்திரனே என்னமுருள்ளகண்மணியே
கட்டிக்கரும்பே கணுவில்லாசெங்கரும்பே
முத்துமுடிதரித்த முடிமன்னபுத்திரனே
பொன்னின்முடிதரித்த புத்திராசாவே
நீர்சொன்னதுபோதாதோ சூழ்ந்தரசையாளனுமோ
பேசினதுபோதாதோ பேருலகமாளனுமோ
வாய்திறந்துசொல்லீரோ மன்னர்பெருமானும்
ஐவர்பஞ்சபாண்டவரும் அறுபேருங்கூடிருந்தால்
அரசாண்டபாவனைபோல் ஆச்சுதாமளிக்கிறீரே
ஆண்மையுள்ளபுத்திரனே அருமைமகா இந்திரரே
என்தேவியுமுன்னன்னையுஞ் சேர்க்கிறேனென்றுசொல்லி
உன்றச்சிஅன்னையும் ஐவருடன்சேர்ப்பேனென்று
ஆணையிடவேணும் அருமைமகராசனென்று
என்றுமவருரைக்க ஏதுசொல்வாரிந்திரரும்

புலந்திரன் ஆணைகூறுவது.

சோலைமலருடைய சொக்கர்திருவாணை
ஆனைமலருடைய அம்மன்திருவாணை
ஏழுலகமாளுகிற எம்பெருமாளவராணை
ஆதிசிவனாணை ஆயர்மேல்தானாணை
பரமசிவனாணை பார்வதியாள்தன்னாணை
கோணுதமாதவத்துக் குந்தியம்மாள்தன்னாணை
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அனைமுகர்தன்னாணை
ஐயாவேவுந்தன் மீதிலாணைபெரிதுகண்டீர்
தோராவடிவழகி துரோபதைதன்னாணை
போதேவருந்தடங்கும் பொன்னருவிமேலாணை
பிறவாமுடிதரித்தப் பெண்பெருமாள்மேலாணை
சோரவளைக்கை சுபத்திரையாள்மேலாணை
மேகப்பயின்றெடுத்த மின்னொளியாள்தன்னாணை

## புலந்திரன் அத்திபுரத்து வீதியிலே வருகிறபோது சனங்கள்பார்த்து பேசிக்கொள்வது.

அங்கிருக்குமங்கையர்கள் அணியிழைமாரேதுசொல்வார்
கொம்பனைமாரெல்லாருங் கூடியொன்றாய்ப்பேசிக்கொள்வார்
மாயன்மருமகன்காண் மகாதேவன்புத்திரன்காண்
சீதைமருமகன்காண் தேவருடபுத்திரன்காண்
பாண்டியற்குபேரனிவன் பஞ்சவற்குபுத்திரன்காண்
ஆயிரம்பாண்டியற்கு அருமையுள்ளபேரனிவன்
ஐவருக்கும்நூற்றுவர்க்கும் ஆனதொருபுத்திரன்காண்
கருநீலப்பூங்குழலாள் கஸ்தூரிநாயகன்டி
தோகைமயிலனையாள் துற்சடையாள்மருமகன்டி
நாலாங்கிந்திரனார் நூற்றொருவர்மன்னவற்கும்
பாட்டனார்வீஷ்மருக்கும் பாரியதுரோணருக்கும்
சிற்றப்பாவிதுரருக்கும் சீருள்ளகாங்கையற்கும்
காஞ்சிராடராஜன் கருணர்பெருமானுக்கும்
சாமத்துரோகி சகுனியவன்தோழனுக்கும்
மாமன்சகுனியற்கும் மற்றமுள்ளமன்னவற்கும்
அம்மான்சகுனியவன் மைத்துனனவற்கும்
தங்கைமணவாளன் தறுதலையானவற்கும்
அங்குள்ளசேனையற்கு அதிமாய்த்தான்பேசி
எதிராயிருந்துமல்லோ எத்திலக்குபூமுடியான்
சரியாயிருந்துமல்லோ சாதித்தானமன்னவர்களை
வல்லமையுள்ளப் புருஷனிவன்தான்டி
இவனழகுஞ்சவுரியமும் ஆண்மையுமுள்ளவன்டி
கஸ்தூரிநாயகிக்கு வாய்த்தமணவாளன்
தோகைமயிலனையாள துற்சடையாள்பெற்றெடுத்த
ஏலங்குழலாளுக்கு ஏற்றதொருமணவாளன்
அவனழகுக்கேற்றாப்போல் அருச்சுனர்பெற்றெடுத்தார்
இவனழகுக்கொப்பானோர் இந்திரருமீடல்லவே
மன்னர்அழகுக்கு மன்னர்களுமீடல்லவே
மன்னர்அழகுக்கு மன்மதனுமீடல்லவே
இப்படியாகச்சொல்லியல்லவோயிருந்தார்
கொம்பனைமாரெல்லாருங் கூட்டமாய்ப்பேசினார்கள்
இப்படியாய்ச்சொல்லி யிருக்கின்றவேளையிலே

## புலந்திரன் வேறுவீதிவருகிறது.

போரந்தசாமன்னர் புலந்திரராசாவும்
அவ்வீதிவிட்டு நடந்தாரழகாக
மற்றுமொருவீதியிலே வாராரேமன்னவனும்
அந்தத்தெருவீதியிலே வாழுகின்றமன்னரெல்லாம்
இந்திரனார்தன்முகத்தை ஏறெடுத்துப்பார்த்துமல்லோ

மாலைமுடியாளும் மதுரைதிசைநோக்கி
மதுரைதிசைநோக்கி வாரார்புலந்திரரும்

ஐவரும் மண்டபத்தில் வீற்றிருக்கிறதைக்
காணுகிறது.

வேந்தர்பெருமான் வெளிமண்டபத்தில்வீற்றிருக்க
ஐவரையரும் ஆழிவசந்தரும்
வேந்தர்பெருமானும் விலாடபுரம்விட்டல்லவோ
விலாடபுரம்விட்டல்லோ வீற்றிருந்தார்மண்டபத்தில்
போரஞ்சாமன்னர் புலந்திரராசாவும்
மண்டபத்தின்முன்னேவந்து மாலைமுடியாளும்
பரியைவிட்டுக்கீழிறங்கி பாணந்தொடுமார்பன்
வாளுருவிக்கைப்பிடித்து வல்லயத்தைத்தோளிலிட்டு
ஓடமலர்க்கண்ணாளும் உள்ளேநுழைந்தான்காண்
பூவும்புதுமலரும் பொன்னுருகிஅட்சதையும்
அட்சதையும்பூபோட்டு அனைவருக்குந்தெண்டனிட்டார்
ஆறுபேர்பாத மடிவணங்கித்தெண்டனிட்டான்
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாயாரவாழ்த்தி மனதுபெரிதகத்
இருமிருமென்றுசொல்லி யிட்டாராசனங்கள்
இட்டவாசனத்திலேறியவர்வீற்றிருந்தார்
ஐவரையரும் ஆழிவசந்தரும்
இந்திரனைத்தான்பார்த்து ஏதுவெடுத்துரைப்பார்
போரஞ்சாமன்னர் புலந்திரராசாவே
தூதுரைக்கப்போனீரே சந்திரப்பூமுடியே
அப்போதுஇந்திரனார் ஆனமுகமேறுசொல்வார்
போனதுவும்வந்ததுவும் புதுமைநடந்ததுவும்
அங்கேநடந்த அதிசயமுள்ளதுவும்
கண்ணில்லான்மாளிகைக்கு கடுகிநடந்ததுவும்
கட்டியணைத்தவுடன் கற்றூணுநெரிந்ததுவும்
மண்டபங்கள்தானிடிந்து மண்ணோடேசாய்ந்ததுவும்
தேசத்தையாளுந் திரியோதனப்பெருமான்
ஐவருக்குநாடு கொடேனென்றுசொன்னதுவும்
அத்தனையுஞ்சொன்னானே யானைமுகனிந்திரனும்
நாலுரெண்டுவார்த்தைகளாய் செப்பினான்ராசாவும்
ஐவரையரும் ஆழிவசந்தரும்
எல்லோருங்கேட்டு வெகுவாய்மனங்களித்து
போரஞ்சாமன்னர் புலந்திரவீரரும்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குத்தெண்டனிட்டான்
ஐவரையரும் ஆழிவசந்தரும்
போரஞ்சாமன்னர் புலந்திரராசாவை

பாட்டன்மார் தாயார் அல்லி இவர்கள் முதலானவர்வந்து
புனர்ந்திரனைக்கண்டதற்கு புனர்ந்திரன் போய்வந்த
சங்கதிகளையுரைத்து சுகமாக மதுரையை
அரசாண்டிருந்தது.

ஆறுயிரம்பாண்டியர்கள் அப்பன்மார்வந்துகண்டார்
பெண்பெருமாளல்லியரும் புத்திரனைவந்துகண்டாள்
போனதுவும்வந்ததுவும் புதுமைகளுள்ளதுவும்
நாலுரெண்டுவார்த்தைகளால் நடப்பித்தாரிந்திரனும்
அனைவர்க்குந்தானுரைத்து அரசாண்டுவாழ்ந்திருந்தார்
புனர்ந்திரனார்தன்கதையைப் பத்தியுடன்படித்தவர்கள்
இந்திரனார்தன்தூதை யின்பமுடன்சொன்னவர்கள்
பப்பிரவாகன்தூதைப் பட்சமுடன்வாசித்தவர்.
மண்டலத்திற்கீர்த்தி மாறுமல்வாழ்ந்திடுவார்
தேசத்திற்கீர்த்திபெற்று சிறப்புடனேவாழ்ந்திடுவார்
சுந்திரனார்தூதுரைத்தோர் சொர்க்கபதம்பெறுவார்
மன்னவனார்தூதுரைத்தோர் மாயர்பதம்பெறுவார்
மாயர்பதம்பெறுவார் மாறுமல்வாழ்ந்திருப்பார்
புனர்ந்திராசனைப்போல் பூரித்துவாழ்ந்திடுவார்
இந்திராசனைப்போல் இருந்தரசைபாண்டிடுவார்
வெங்கட்டராமபூபன் விருப்பமுடனீன்றெடுத்த
நாராயணசாமி நல்லோனுரைப்படிக்கு
தாரணியிற்கீர்த்திபெற்ற தமிழ்வல்லோன்வேதகிரி
மைந்தன்கந்தசாமியென்பவ னிக்கதையைப்பாடினர்
குற்றங்கள்நேராமல் குறையொன்றும்வாராமல்
தப்பிதங்களில்லாமல் தாழ்வொன்றுஞ்சேராமல்
இந்தக்கதைதன்னை இன்பமாய்க்கேட்டவர்கள்
ஆல்போலேதழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவார்
வாழிவாழியென்றுசொல்லி வாமனித்தாரீஸ்வரனார்

வித்வசிரோன்மணியாகிய புகழேந்திப்புலவர் அருளிச்செய்த
புனர்ந்திரன் தூது முற்றிற்று.